THE

# Upanishad Artha Deepika

OR

## THE PRINCIPAL UPANISHADS

WITH

*Advaita, Visishtadvaita and Dwaita Bhashyas*

IN TAMIL.

2-2-5

---

## I.—ISAVASYAM.

AND

PUBLISHED BY

A. SIVA ROW,

*Of the Registration Department and Translator of Vicharsagar in Tamil.*

---

# உபநிஷதர்த்த தீபிகை

என்னும்

மூன்றுமத பாஷ்யங்களுடன் உபநிஷத்துக்களின்

தமிழ் மொழிபெயர்ப்பு.

---

## I. ஈசாவாஸ்யம்.

---

குத்தாலம் சப் ரிஜிஸ்தரார் ஏ. சிவராயரால்

பிரசித்தப்படுத்தப்பட்டது.

---

*Madras :*

PRINTED BY MESSRS. THOMPSON AND CO., AT THE "MINERVA" PRESS.

1899.





Price Rs. 1-8-0.

22-5

# உபநிஷதர்த்ததீபிகை.

## பதிப்புரை.

**உபநிஷத்துக்களைப்** படித்து அவற்றிலடங்கிய தத்துவங்களைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்னு மிச்சை இக்காலத்தில் ஜனங்களுக்கு விசேஷமாய் மேலிட்டிருத்தல்பற்றி, **தசோபநிஷத்துக்களையும் சுவேதாசுவதர உபநிஷத்தையும் அத்துவைத விசிஷ்டாத்துவைத, துவைதபாஷ்யங்**களுடன், அநேக மஹான்களுடைய பலவிதமான உதவியைக்கொண்டு தமிழில் மொழிபெயர்த்து அச்சிடத்துணிந்தேன். அத்துவைத பாஷ்யத்தின் மொழிபெயர்ப்பைத் திருவசநல்லூர் ம-ா-ா-ஸ்ரீ பண்டித **இராமசந்திரசாஸ்திரிகள்** அவர்கள் பார்த்துவருகின்றார். மற்ற இரண்டுபாஷ்யங்களின் மொழிபெயர்ப்பை அந்தந்தமதங்களிற் சிறந்த வித்வான்கள் பார்க்கும்படி ஏற்பாடுசெய்திருக்கின்றேன். இவ்விதமாக மூன்று பாஷ்யங்களையும் மொழிபெயர்த்து வருவதோடுகூட அந்தந்தச் சித்தாந்தத்திற் கநுகுணமாக ஏற்பட்டிருக்கும் டீகைகளை யநுசரித்து அருமையான சில சொற்களுக்குக் கருத்துங் கூறப்படும்.

இவ்வாறு உபநிடதங்களைத் தமிழ்நாட்டாரின் உபயோகத்திற்காக அச்சிட்டு வெளியிடத்துணிந்த யான், எனக்குத் துணைபுரிந்த பண்டிதர்களுக்கும் இதரபாஷைகளில் மொழிபெயர்த்துள்ள பதிப்புக்களினால் யான் உதவி பெறுமாறு வைத்த வித்வான்களுக்கும் கடமைப்பட்டிருக்கின்றேன்.

சிலர் உபநிஷத்துக்கள் பரமரகசியமாகையால் அவைகளைச் சாமான்யமான அநதிகாரிகளும் பார்க்கும்படி வெளிப்படையாய்த் தமிழில் மொழிபெயர்த்து அச்சிடுவது தவறு எனக்கூறுவார்கள். அது மெய்யேயாயினும், வேதார்த்தத்தை நேரிட வேதத்திலிருந்து கிரகிக்க அதிகாரிகளல்லாத ஸ்திரீகள், சூத்திரர்கள், துவிஜபந்துக்கள் (துவிஜப்பிராயர்கள்) ஆகிய இவர்களுக்காகவே பகவான் **வியாச** மகரிஷி முதலிய ஜகதாசாரியர்களே மகாபாரதம், புராணம் முதலிய கிரந்தங்களைச்செய்து வெளியிட்டிருப்பது போலத் தற்காலத்தில் ஸம்ஸ்கிருதபாஷையில் உள்ள கிரந்தங்களைப் படித்தறியச் சாமர்த்தியமில்லாதவர்கட்கு இத்தமிழ் **உபநிஷதர்த்த தீபிகையை** வெளிப்படுத்துவது அநுசிதமாகாதென்று நம்புகின்றேன்.

ஆதியில் **ஸ்ரீமத் சங்கரபாஷ்யத்தை** மாத்திரம் மொழிபெயர்ப்பதாகவும் ஸம்ஸ்கிருதபாகத்தைக் கிரந்தத்திலும் தேவநாகரத்திலும் அச்சிடுவதாகவும் உத்தேசித்து விளம்பரஞ்செய்யப்பட்டிருந்தது. அதன் பிறகு மேற்படி விளம்பரத்தைக்கண்ட சில மாத்துவச்சிநேகிதர்கள் தங்களுடைய **துவைதபாஷ்யத்தை**யுஞ் சேர்த்து அச்சிடுவது உபகாரமாயிருக்குமென்று தமது அபிப்பிராயத்தைத் தெரிவித்ததன்பேரில் அந்தப் பாஷ்யத்தைச்

சம்பாதித்துத் தமிழ்ப்படுத்தத்தொடங்கினேன். இவ்விரண்டு பாஷ்யங்களையுஞ் சேர்த்து வெளியிடுகையில் **விசிஷ்டாத்துவைத பாஷ்ய**த்தையுஞ் சேர்க்கவேண்டுமென்ற எண்ணம் மேலிட்டு அதற்கேற்கத் தகுந்த முயற்சிசெய்திருக்கின்றேன். ஆகவே, மூன்றுபாஷ்யங்களும் ஒரேகாலத்தில் வெளியிடப்படும். தற்காலத்திற் பெரும்பான்மையாக வித்துவான்கள் பக்ஷபாதமில்லாது சமரஸமாக மூன்றுமதக் கொள்கைகளையுந் தாங்கள் பார்க்கவேண்டுமென்று அபிப்பிராயப்படுவதனால் அவர்களது விருப்பத்திற்கிசைய இந்தப் பிரயத்தினஞ் செய்யப்பட்டிருக்கின்றது. மேலும் மேற்படி விளம்பரத்தில் மூலத்தைக் கிரந்தாக்ஷரத்திலும் அச்சிடுவதாகக் கண்டிருந்ததை அநேகர் பார்த்து அஃது அனாவசியகமென்று பின்வருங் காரணங்களைத் தெரியப்படுத்தினார்கள் :—

(1) பள்ளிக்கூடங்களில் ஸம்ஸ்கிருதபாஷையைக் கற்பிக்க ஆரம்பமான சுமார் 25-வருஷகாலமாக தேவநாகர எழுத்துக்களில் அப்பியாசமே விசேஷமாகப் பரவிவருகின்றது. ஆகையால் இங்கிலீஷ்ப்பள்ளிக்கூடமூலமாக ஸம்ஸ்கிருதங் கற்றவர்கட்குக் கிரந்தலிபி அபேக்ஷையில்லை. இனி கற்கிறவர்கட்கும் அபேக்ஷையில்லை. இப்படிக் கற்கிறவர்களும் வருஷந்தோறும் அதிகப்பட்டே வருகின்றார்கள்.

(2) பம்பாய், கல்கத்தா, முதலிய வடதேசங்களில் தேவநாகரியில் அச்சிடப்பட்ட ஸம்ஸ்கிருதப்புஸ்தகங்கள் நமது தேசத்திற்கு வரத்தலைப்பட்ட பிறகு கேவலம் கிரந்தலிபியைமாத்திரம் அப்பியசித்திருந்த பிராசீனபண்டிதர்கள்கூட வடதேசத்துப் புஸ்தகங்களைப் படிக்கும்பொருட்டு தேவநாகரலிபியை அப்பியசித்திருக்கின்றார்கள்.

(3) சில ஸம்ஸ்கிருத மாதாந்தரப் பத்திரிகைகள் மேற்படி நாகரலிபியிலேயே அச்சிடப்பட்டுவருகின்றன.

இக்காரணங்களால் மேற்படி நாகரலிபியின் பிரசித்தி எங்கும் விசேஷமாய் இருக்கின்றது. கேவலம் கிரந்தலிபியைமாத்திரம் தெரிந்துகொண்டிருப்பவர்கள் அதிகமாயிருக்க மாட்டார்கள்.

(4) நாகரத்திலும் கிரந்தத்திலும் அச்சுப்பதிப்பிப்பதிற் காலதாமசமுங் காகிதச்செலவும் அனாவசியகமாய்ச் சம்பவிக்கின்றன.

(5) நாகரலிபியின் மஹிமையை உத்தேசித்தும் அதையே வைத்துக்கொள்வது யுக்தமாயிருக்கின்றது. நாகர எழுத்துக்கள் தேவதைகளைச் சேர்ந்தவை. ஆகையால் அந்த லிபிக்குத் **தேவநாகரி** எனப்பெயர் கிடைத்தது. "பிரம்மா தலையில் எழுதியிருக்கிறார்" என்னும் वசனம் பிரசித்தமாய்த் தெரிந்ததேயாம். இந்தத் தலையெழுத்துக்கு फालबिन्दु என்று பெயர். இப்போது வழங்கும் நாகர அக்ஷரங்கள் அந்த फालबिन्दुவை அனுசரித்திருப்பதனால்தான் அவைகள் बालबिन्द (फालबिंदुவின் ஆபாஸம்) அக்ஷரங்கள் என்று சொல்லப்படுகின்றன. பிரம்மாவினால் உபயோகிக்கப்பட்ட அக்ஷரங்களே சிறந்தவை யாகையால் அவைகளை, அதாவது, தேவநாகர அக்ஷரங்களையே ஸம்ஸ்கிருதத்துக்கு உபயோகிப்பது யுக்தம். ஆகவே இக்காரணங்களாற் கிரந்தாக்ஷரத்தையும் கலந்து பதிப்பிப்பது அனாவசியக

மென்று அநேகர் அபிப்பிராயத்தைத் தெரியப்படுத்தினதன்பேரில், எனக்கும் அது யுக்தமாகத்தோன்றிக் கிரந்தலிபியை நிறுத்திவிட்டேன். இப்படிக் கிரந்தலிபியை நிறுத்திவிட்டதினுல், இக்காரணத்தைக்கொண்டு நாகரத்தை அறிந்திராதவர்கள் இந்த புஸ்தகத்தை ஆதரிக்கமாட்டார்கள் என்று நான் நினைக்கவில்லை. புஸ்தகத்தில் அடங்கிய விஷயம் வாஸ்தவத்தில் உபயோகமுள்ளதாக அவர்களுக்குத் தோன்றும்பக்ஷத்தில், நாகர அக்ஷரங்களைத் தெரிந்துகொள்ளவேண்டியதை ஒரு சிரமமான காரியமாக அவர்கள் பாவிக்கமாட்டார்கள் என்று நான் நினைக்கிறேன்.

இப்போது பிரசுரமாகும் முறை வருமாறு:—

ஒவ்வோர் உபநிஷத்திற்கும்

1. முகவுரை,
2. விஷய அட்டவணை,
3. ஷட்விதலிங்க தாத்பரிய நிரூபணம்,
4. சாந்தி மந்திரம்; அதன் உரை.
5. உபநிஷத்து,
   - (a) மூலம்,
   - (b) பத உரை,
   - (c) அத்வைத பாஷ்யம்,
   - (d) விசிஷ்டாத்வைத பாஷ்யம்,
   - (e) துவைத பாஷ்யம்,
   - (f) 'டிப்பணி' என்னும் குறிப்புக்கள்,
6. மந்திரங்களின் முதலெழுத்தட்டவணை,
7. விஷயங்களைக்காட்டும் பொது அட்டவணை;

ஆகிய இவைகள் கொடுக்கப்படும்.

விசிஷ்டாத்துவைத துவைத பாஷ்யங்களைச் சேர்ப்பதாக எண்ணங்கொள்வதற்கு முன்னமேயே பதவுரை முதலிய பலவிஷயங்கள் சங்கரபாஷ்யத்தை அனுசரித்து எழுதப்பட்டிருந்தமையால் அவைகள் அப்படியே அச்சிடப்பட்டிருக்கின்றன. இதர பாஷ்யங்களில் காணப்படும் வித்தியாச அர்த்தங்களை ஒவ்வொரு மந்திரத்துக்கும் கீழ் கொடுக்கப்படும் பாஷ்யங்களில் பார்த்துக்கொள்ளவும்.

மதாபிமானிகள் இப்புஸ்தகத்திற்றேன்றும் தோஷங்களை நீக்கிக் குணத்தைக்கொண்டாடித் தங்களுக்குத் தோன்றிய குணவிசேஷங்களையும் அறிவித்து இந்த அருமையான காரியம் நிர்விக்கினமாயும் செவ்வையாயும் நடந்தேறவேண்டியதற்காகச் சகாயம் செய்துவரும்படி பிரார்த்திக்கின்றேன்.

இந்த உபநிஷத்துக்களில் வரும் அநேகவிஷயங்கள் **விசாரசாகரத்தில்** வெகு தெளிவாயும் விஸ்தாரமாயும் சொல்லப்பட்டிருக்கின்றன. அவைகளை எல்லாம் இந்தக் கிரந்தத்துக்குக் குறிப்புக்களாக எடுத்து அச்சிடுவது அசாத்தியமானதால், அபேக்ஷிக்கிறவர்கள் அப்புஸ்தகத்தைப் பார்த்துக்கொள்ளலாம்.

**குற்றாலம்,**
**தஞ்சாவூர் ஜில்லா.** **வ. சிவராவ்.**

# உபோற்காதம்.

ஸச்சிதாநந்த ஸ்வரூபரான பரமேசுவரன் ஒவ்வொரு கல்பத்தின் ஆதியில் அதற்கு முந்திய கல்பத்திற் சம்பாதிக்கப்பட்ட ஜீவகோடிகளின் அதிருஷ்டானுசாரமாக ஆகாசாதி தத்துவங்கள்முதல் ஸ்தூலதேக மீறுயுள்ள பிரபஞ்சங்களனைத்தையுஞ் சிருஷ்டித்து அந்தச் சிருஷ்டியில் தானும் ஜீவரூபராய்ப் பிரவேசிக்கின்ருர். அவரே விஷ்ணுமுதலிய உத்தமதேகங்களிற் பிரவேசித்து பூஜ்யராயும், மானிடர் முதலிய அதமதேகங்களிற் பிரவேசித்துப் பூஜகராயும் ஆகின்ருர். பூஜகனுகிய மனிதன் அநேக ஜன்மங்களிற் செய்யப்பட்ட நிஷ்காம (ஆசையற்ற) கர்மங்களினுலும் உபாசனுரூபமான தவங்களினுலும் முக்கியமான புருஷார்த்தத்தை அடைவதற்குத் தகுந்த அதிகாரியாகின்ருன்.

புருஷார்த்தமாவது புருஷனுடைய இச்சைக்கு விஷயம், அதாவது, புருஷனுல் விரும்பப்படுவது. துக்க நிவர்த்தி, சுகப்பிராப்தி, அவற்றின் சாதனம், ஆகிய இவற்றையே புருஷன் விரும்புகின்ருன். ஆதலின், இவற்றிற்கே புருஷார்த்தங்களெனப்பெயர். இவற்றுள், சுகப்பிரரப்தியாகிய பயனே முக்கிய புருஷார்த்தமெனப்படும். இதற்குச் சாதனமே அவாந்தர புருஷார்த்தமாகும். தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம், என்னும் நால்வகைப் புருஷார்த்தங்களில் முதலிரண்டாகிய தர்மமும் அர்த்தமும் துக்க நிவர்த்திக்குஞ் சுகப் பிராப்திக்குஞ் சாதனமா யிருத்தலினுல் அவாந்தர புருஷார்த்தங்களெனப்படும். கடை யிரண்டாகிய காமமும் மோக்ஷமும் துக்க நிவர்த்தியின்பேரில் சுகப்பிராப்திரூபமான பயனுயிருத்தலினுல் முக்கிய புருஷார்த்தங்க ளெனத்தகும். இடையிரண்டாகிய அர்த்தத்தையும் காமத்தையும் பிராப்தானுசாரமாய்ச் சம்பாதித்து உத்தம புருஷனனவன் முதலுங் கடையுமாகிய தர்மத்தையும் மோக்ஷத்தையும் பெற வேண்டி விசேஷப் பிரயத்தினஞ் செய்வான். மேலும், சுகப்பிராப்தி ரூபமான காமம், மோக்ஷம், என்னு மிரண்டினுள் காமமென்பது நீடித்த சுகத்தைக் கொடுப்பதாயிராமல் க்ஷணிகசுகரூபமா யிருக்கின்றது. ஆகையால் அதுவும் முக்கியமான புருஷார்த்தமன்று; எனவே, முதல் மூன்று புருஷார்த்தங்களும் உபேக்ஷிக்கத்தக்கவை யெனத்தகும். கைவல்ய மோக்ஷமென்பது ஸம்பூர்த்தியாய்த் துக்கத்தை நிவர்த்திசெய்து நித்தியமானதும் நிகரற்றதுமான சுகத்தைக் கொடுப்பதனுல் அதுவே பரமபுருஷார்த்தமாகும், ஆகையால் அதுவே சம்பாதிக்கத்தக்கதென ஏற்படுகின்றது.

முக்கிய புருஷார்த்தமாகிய இச்சுகம் ஸ்வதஸ்ஸித்தமா யிருக்கின்றது, அதாவது தானுகவே எப்போதும் அமைந்திருக்கின்றது. ஆயினும், கிணற்றுனது மணலினுல் மூடுண்டிருப்பதுபோல், அஜ்ஞானமாகிய துக்கத்தினுற் சுகமென்னும் ஞானம் மறைபட்டுளது. துக்கமாகிய இந்த மறைவை நிவர்த்திசெய்வதனுற் சுகம் தானுகவே விளங்கும். அஜ்ஞானம், அல்லது, துக்கத்தின் ஸ்வரூபம் சம்சாரமாகும்; அதாவது, சம்சாரமென்னும் விருக்ஷத்தில் உதிக்கும் பலன் துக்கமாம். இதற்குக் காரணம் சரீரம். சரீரத்துக்குக் காரணம் தர்மாதர்மங்கள். இவற்றிற்குக் காரணம் சுபாசுப கர்மங்கள். இவைகளுக்குக் காரணம் இராகத்துவேஷங்கள். இவைகள் அநுகூலப்

பிரதிகூல ஞானங்களினின்றும் உண்டாகின்றன. இவைகளுக்குப் பேத ஞானமே காரணம். இதற்குக் காரணம் பிரம்மத்துக்கு வேறுகாத ஆத்மாவின் அஜ்ஞானம். இந்த அஜ்ஞானம் ஆத்ம ஞானத்தாலன்றி, அதாவது ஆத்மாவின் யதார்த்த ஸ்வரூபத்தை அறிந்தாலன்றி மற்றெதனாலும் நிவர்த்தியாகாது. ஆதலால் மோக்ஷ இச்சையுள்ளவன் துக்க நிவர்த்தியின் பொருட்டு ஆத்மஞானத்தைச் சம்பாதிப்பது அவசியம்.

ஆத்மஞானத்தை உண்டுபண்ணும் சாஸ்திரங்கள் **வேதங்**களாம். அவை அநாதியாயும் ஈசுவரனுல் வெளியிடப்பட்டனவுமாய், (1) **கர்மகாண்டம்**, (2) **உபாசனுகாண்டம்**, (3) **ஞானகாண்ட**மென மூன்று பாகங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளன.

கர்மகாண்டத்திற் சொல்லியபடி கர்மங்களைப் பயனைக்கருதாமல் ஈசுவரார்ப்பணமாய்ச் செய்வதனுல் மலமென்னும் பாவமும், உபசனுகாண்டத்திற் சொல்லியபடி உபாசனைகளைச் செய்வதனுல் விக்ஷேபம் (சஞ்சலப்படுதல்) என்னும் தோஷமும் நீங்கிச் சித்தசுத்தியும் ஏகாக்கிரமும் மனப்பெருமையும் உண்டாகும். இவை ஞானசாதனமாம். ஞானகாண்டத்திலோவெனின், சாக்ஷாத் அத்வைதஞானமே உண்டாகின்றது. அது அஜ்ஞானதோஷத்தைப் போக்கிப் பரமாநந்தத்தைத் தருவதால் மோக்ஷம் சித்திக்கின்றது. ஆதலால் முற்கூறிய மூன்று காண்டங்களில் ஞானகாண்டமே முதன்மையானது. இந்த ஞானகாண்டம் 108 **உபநிஷத்து**க்களடங்கியது. இன்னும் அநேக உபநிஷத்துக்களு முளவாயினும் நூற்றெட்டே இங்கு கொள்ளப்படுவன. இந்த 108 உபநிஷத்துக்களிலும் ஆசாரிய பாஷ்யத்துடன் கூடியிருக்கிற (1) **ஈச** (2) **கேன** (3) **கட** (4) **பிரச்ன** (5) **முண்டக** (6) **மாண்டூக்ய** (7) **தைத்திரீய** (8) **ஐதரேய** (9) **சாந்தோக்ய** (10) **பிருகதாரண்யக** (11) **சுவேதாசுவதர** உபநிஷத்துக்கள் என்னும் பதினென்றும் முக்கியமானவை.

உபநிஷத்துக்களுக்கு **வேதாந்த**மென்று பெயர். வேதாந்தமெனின் வேதத்தின் கடைப்பாகம் எனப்பொருள்படும். இவ்வுபநிஷத்துக்கட்கே **சுருதிசிரசு**, **இரகசியம்** என்றும் பெயர். தேகத்துக்குச் சிரசு (தலை) முக்கியமானதாயிருப்பது போல, வேதத்தின் முக்கியப் பொருளடங்கியது வேதாந்த மாதலின் அதனை **வேதசிரசு** என்பார்கள். சாதனசதுஷ்டய சம்பத்தியடைந்து தகுந்த அதிகாரியெனத் தேர்ந்தவர்களுக்கு மாத்திரம் இந்த வேதாந்த சாஸ்திரத்தின் உண்மை உபதேசிக்கப் படுவதால், அதற்கு **இரகசியம்** எனப்பெயர் வழங்கிவருகின்றது.

**இருக், எஜுஸ், சாமம், அதர்வம்**, என வேதங்கள் நான்காம். ஒவ்வொரு வேதத்திலும் **மந்திரம், பிராஹ்மணம், ஆரண்யகம்**, என மூன்று பாகங்களுண்டு. மந்திரம் இந்திராதி தேவதைகளைக் குறித்தும், பிராஹ்மணம் யஜ்ஞாதி கர்மவிதிகளைக் குறித்தும், ஆரண்யகம் வானப்பிரஸ்தர்களுக்கு (அதாவது, பிரபஞ்சத்தில் தாங்கள் நடத்தவேண்டிய வியவகாரங்களை நடத்தி அரண்யத்துக்கு (காட்டுக்குப்) போய் அவ்விடத்தில் வெகு வைதிக மார்க்கத்திற் காலஞ்செலுத்த இச்சிக்கிறவர்களுக்கு) உபயோகப்படும் விஷயங்களைக் குறித்தும் போதிக்கின்றன. உபநிஷத்துக்கள் பெரும்பாலும் ஆரண்யகத்தைச் சேர்ந்தவைகளாம். வேதம் என்றுல் ஞானம், அறிவு, என்று அர்த்தமாகும்.

# நான்முகம்.

'உபநிஷத்' என்னும் பதத்தில் **உப**(சமீபம்), **நி** (அத்தியந்தமான, நிச்சயமான), **ஸத்**என்பவை அடங்கியிருக்கின்றன . **உப+நி+ஸாதயதி இதி உபநிஷத்து. ஸாதயதி** என்பது **ஸத்** என்னும் பகுதியினின்று பிறந்த வினைச்சொல். **ஸத்** என்னும் பகுதி **விசரணம்** (பிளத்தல்). **கதி** (அடைதல்), **அவஸாதனம்** (நாசஞ் செய்தல்) ஆகிய மூன்று பொருள் கொண்டது. மோக்ஷ இச்சையுள்ளவன் விஷயங்களின் மீதுள்ள ஆசையை ஒழித்து ஆசாரியனை அடுத்து அவரிடத்திலிருந்து கிரகிக்கும் வித்தையானது ஜீவாத்மாவைப் பரமாத்மாவுக்குச் சமீபமாய்க் கொண்டுபோய்ச் சேர்த்து, அவித்யா பீஜத்தினின்றுமுண்டாகியஸம்சாரவிருக்ஷத்தை வேரோடுகளைந்து, பரப்பிரம்மத்தை அடைந்து, ஜனன மரண ரூபமான ஸம்ஸார துக்கத்திற்குக் காரணமாகிய அவித்தையை நாசஞ்செய்வதற்குச் சாதனமாயிருப்பதனால், அந்த வித்தை **உபநிஷத்து** எனப்படும். இவ்வாறாக **ஸத்** என்னும் பகுதியில் அடங்கிய முப்பொருளும் உபநிஷத் சப்தார்த்தத்தில் விளக்கப்பட்டன. ஆகவே, பிர்மமவித்தைக்கு உபநிஷத்தெனப் பெயராயிற்று. இந்த வித்தையை உண்டாக்குகின்ற கிரந்தத்திற்கும் உபநிஷத்தெனப் பெயர் வழங்கியது உபசாரார்த்தமாம்.

பக்தியுடன் உபநிஷத்துக்களைப் படனஞ் செய்வோர்களுக்கு அடியில் கண்ட மந்திரங்கள் எழுதப்பட்டிருக்கின்றன.

(1) **यस्माज्जातंजगत्सर्वं यस्मिन्न्येव प्रलीयते ।
येनेदंधार्यतेचैव तस्मैज्ञानात्मनेनमः ॥**

எவனிடத்தினின்றும் இந்த உலகம் முழுமையும் உண்டாயிற்றோ, எதனிடத்தில் லயமாகிறதோ,எதனால் தரிக்கப்படுகிறதோ, அந்த ஞானாத்மாவுக்கு நமஸ்காரம்.

(2) **सत्यंज्ञानं अनन्तं ब्रह्मआनन्दरूपं ।
अमृतंयद्विभातिशान्तं शिवं अद्वैतं ॥**

சத்தியம், ஞானம், அநந்தம், பிரம்மம், ஆநந்தரூபம், அமிருதம், தேஜோரூபம், சாந்தம், மங்களஸ்வரூபம், ஏகம்.

(3) **ओं शान्तिः शान्तिः शान्तिः**

ஓம் சாந்தி, சாந்தி, சாந்தி.

# ஈசாவாஸ்ய உபநிஷத்து.

இது தசோபநிஷத்துக்களில் முதலாவதாம். இதன் முதல் மந்திரத்தின் ஆரம்பம் **ஈசாவாஸ்யம்** என்று இருத்தல் பற்றி இவ்வுபநிஷத்திற்கு "**ஈசாவாஸ் யோபநிஷத்து**" எனப் பெயர் வந்தது.

முற்கூறப்பட்டவேதங்கள் நான்கினுள் **யஜுர்வேதமானது சுக்ல யஜுர்வேத** மென்றும் **கிருஷ்ணயஜுர் வேத**மென்றும் இரண்டு பிரிவுகள் உள்ளது. சுக்ல யஜுர்வேதத்திற்கு **வாஜஸநேய சம்ஹிதை** என மற்றொரு பெயருண்டு. இந்த ஸம்ஹிதையின் 40-ஆவது அத்தியாயமே "**ஈசாவாஸ்யோபநிஷத்து**" என விளங்குகின்றது. ஆயினும் இப்போது வழங்கும் ஈசாவாஸ்யோபநிஷத்திற்கும் ஷை 40-வது அத்தியாயத்திற்கும் சிற்சில வாக்கிய பேதங்கள் காணப்படுகின்றன. அவைகளை ஆங்காங்கு காட்டப்படும்.

இந்த உபநிஷத்தில் பிரஸ்தாபிக்கப்படும் ஈசுவர ஜீவ மோக்ஷ விஷயங்கள் மூன்று பாஷ்யகாரர்களாலும் மூன்று விதமாய்ப்பிரதிபாதிக்கப்பட்டிருக்கின்றன. (1) ஈசுவரனை நிர்குணமாயும், ஜீவனை ஈசுவரனுக்கு வேறாகாதவனாயும், மோக்ஷத்துக்கு ஞானத்தையே சாதகமாயும் அத்துவைதிகள் இந்த உபநிஷத்தில் அறிகிறார்கள். (2) ஈசுவரனைச் சகுணமாயும், ஜீவனை ஈசுவரனுக்கு வேறாயும் மோக்ஷத்துக்குக்கர்மயோகம், ஞானயோகம், பக்தியோகம், ஆகியஇம்மூன்றையும், அல்லது, பிரபத்தி என்பதையும் சாதகமாயும் விசிஷ்டாத் துவைதிகள் இந்த உபநிஷத்தில் அறிகிறார்கள். (3) ஜீவேசுவரர்களைச் சிலவித்தியாசங்களுடன் விசிஷ்டாத்துவைதிகள் போலும், மோக்ஷத்துக்கு அவித்தையின் நிந்தை, ஈசுவரஞானம், ஈசுவரப்பிரசாதம் இவைகளைச்சாதகமாயும் துவைதிகள் இந்த உபநிஷத்தில் அறிகிறார்கள். இவ்வுபநிஷத்து ஒன்றுதான் கேவலம் சுலோக ரூபமாயிருக்கின்றது.

## அத்வைதம்.

இந்த அத்தியாயத்திற்கு இருஷி **தத்தியங் அதர்வணர்.** அவர் தன்னுடைய புத்திரன் (சிஷ்யன்) யோக்கியாதிகாரியா யிருப்பதைக்கண்டு, அதாவது, கர்ம தானுதி ஸம்ஸ்காரங்களால் இவனுடைய சரீரம் சுத்தமாயிருக்கிறது, இவன் வேதாத்தியயனஞ் செய்து கிருகஸ்தாசிரமத்திலிருக்கிறான், இயன்ற அளவு யஜ்ஞானுஷ்டானம் செய்திருக்கிறான், பாபமற்றவனாயும் ஆசையற்றவனாயும்நியமங்களுடன் கூடினவனாயும் மோக்ஷ இச்சையுள்ளவனாயும் இருக்கிறான் ; இப்படிப்பட்டவன் தன்னைச் சரணமடைந்திருக்கிறான் என்பதை அவர்கண்டு அவனுக்கு இந்த உபநிஷத்தை உபதேசஞ் செய்கின்றார்.

இதன் முதலிரண்டு மந்திரங்களோ சகல சுருதிகளின் சாரபூதமான மகாவாக்கியங்களே. ஒவ்வொரு மனிதனும் தனக்குச் சுகம்கிடைக்க வேண்டுமென்று இச்சிக்கின்றான். அச்சுகம் நித்தியமாயும் அநித்தியமாயும் இருப்பதுபோல, அதை அடையும் மார்க்கமும் நிவிருத்தி பிரவிருத்தி என்று இரண்டு விதமாயிருக்கின்றது. அதை அடையும் அதிகாரிகள் மனோதைரிய

முள்ளவர்கள் மனோதைரிய மில்லாதவர்களென்று இரண்டு விதமாயிருக்கிறார்கள். தைரியமுள்ளவன் நிவிர்த்திமார்க்கத்திற் சென்று நித்தியசுகத்தை அடைகிறான். தைரியமில்லாதவன் தன் சக்திக்குத்தக்கபடி பிரவிருத்தி மார்க்கத்திற் சென்று அநித்தியமான சுகத்தை அடைகிறான். தைரியமில்லாதவன் தைரியத்தைத்தேடி நித்தியசுகத்தை அடையக்கூடும். தைரியத்துடன் நிவிருத்திமார்க்கத்திற் பிரவர்த்தித்தவன் மறுப்படியும் பிரவிருத்தி மார்க்கத்திற்றிரும்பி அற்பமான அநித்திய சுகத்தைத் தேடமாட்டான். ஒருகால் அவனுக்கு ஒரே ஜன்மத்தில் அந்த நித்தியசுகம் கிடைக்காவிட்டாலும் அவன் பின்பிறப்புகளில் அப்பியாசத்தைவிடாமல் காலாந்தரத்திலாவது அதனை அடைவான்.

அவ்விரண்டு மார்க்கங்களையும் இந்த உபநிஷத்தின் இருஷி தன்னுடைய புத்திரனுக்கு இந்த முதலிரண்டு மந்திரங்களில் உபதேசஞ் செய்திருக்கிறார்.

முதலாவது மந்திரம் நிவிருத்தி மார்க்கம் :—பாரமார்த்திகமாய்ப்பார்க்குங்கால் இந்தப் பிரபஞ்சத்தில் ஆத்மாவிற்கு வேறாயுஞ் சத்தியமாயு முள்ள பொருள் ஒன்றுமில்லை. பார்க்கப்படுவனவுங் கேட்கப்படுவனவுமாகிய யாவும்நாசமடையத்தக்கனவாம். ஆகையால் சகலஇச்சைகளையும்விட்டுச்சர்வ சங்கப்பரித்தியாகஞ்செய்து ஆத்மஞானத்தைச் சம்பாதிக்கவேண்டிது. சர்வசங்கப்பரித்தியாகத்தால் தேகப்பற்றையும் விடவேண்டியதாகையால் இப்படிச் செய்வது மிகக்கடினமாகும். அப்படிக் கடினமாகக் காணப்பட்டாலும் நித்தியசுகம் வேண்டுமானால் அப்படியே செய்யவேண்டும்.

இரண்டாவது மந்திரம் பிரவிருத்திமார்க்கம் :—மனதில் சகலத்தையும் விட்டுவிடவும், 'நான்' 'எனது' என்னும் அபிமானத்தை விடவும் முடியாமல் வெகுநாள் ஜீவித்துக்கொண்டிருக்கவேண்டு மென்னும் ஆசையுமிருந்தால், அக்கினி ஹோத்திராதிகர்மங்களைச் செய்யவேண்டியதைத்தவிர வேறுமார்க்கமில்லை. சுகம் கிடைக்கவேண்டியதற்கு உள்ளன இவ்விரண்டு மார்க்கங்களே. முதல் மார்க்கத்தால் நித்தியசுகமும்,இரண்டாவது மார்க்கத்தால் அநித்திய சுகமும் உண்டாகும். சாமர்த்தியத்திற்குத் தக்கபடி மார்க்கத்தை அனுசரிக்கலாம்.பின்சொல்லப்படும் மந்திரங்கள் இவ்விரண்டு மந்திரங்களின் வியாக்கியானங்களே. அவைகளில் 3-முதல் 8- வரையிலுள்ள மந்திரங்கள்முதல் மந்திரத்துக்கும், மற்ற மந்திரங்கள்இரண்டாவதுமந்திரத்துக்கும் உபயோகமா யிருக்கின்றன.

இந்தஉபநிஷத்திலடங்கிய 18-மந்திரங்களின் சுருக்க மானபாவம்யாதெனின் :—

1&2. பயனைவிரும்பாமல் கர்மஞ் செய்தலே கடமையாம். வைராக்கியத்தை அனுஷ்டிப்பது அவசியம்.

3 ஆத்மா மரணமற்றது. அதைக்கொல்லுதல் அமையாது. ஆத்மாவை மறந்திருத்தலே ஆத்மஹத்தி.

4—5. ஆத்மஸ்வரூபம் சொல்லப்பட்டிருக்கின்றது. இஃது இந்திரியங்களால் அறியத்தக்கதன்று.

6-7. இந்தத் தத்துவத்தை அறிந்தவனுடைய ஸ்திதி.

8. ஆத்மஸ்வரூப விவரணத்தொடர்ச்சி.

9—14. அவித்தை, வித்தை என்னும் இரண்டு மார்க்கங்களும் முறையே ஜனனமரணங்களுக்குஉட்பட்ட ஸ்வர்க்கலோகப்பிராப்திக்கும், புனர்ஜன்மத்தை அதிக்கிரமித்த ஒருவித ஸ்திதியின் அநுபவத்திற்கும் கொண்டு போகின்றன. ஆத்மாவின் நிஜமான ஸ்திதியை உத்தேசித்து இந்த இரண்டு மார்க்கங்களும் अन्धन्तमः என்றும் ततोभूयइवतमः என்றும், அதாவது, இருட்டு என்றும், அதைவிட அதிக இருட்டு என்றும் சொல்லப்பட்டிருக்கின்றன. ஏனெனின், முதல் மார்க்கத்திலிருப்பவன் இன்னும் ஆசைக்குட்பட்டவனுயிருக்கிறான். இரண்டாவது மார்க்கத்திலிருப்பவன், அதாவது, தேவதையை உபாசிக்கிறவன் முதல் மார்க்கத்தின் சுகத்தைவிட வெகு மடங்கு அதிகமான சுகத்தை அனுபவிக்கிறான். இவன் அவனைவிட அதிக இருட்டில் பிரவேசிக்கிறான் என்று சொன்னதற்கு தாற்பரியமென்னவெனில், தேவதையை உபாசிக்கிறவன் தேவதைரூபமாய் வெகுகாலம் சுகத்தை அனுபவித்தாலும் தத்துவத்தைத் தெரிந்துகொள்ள சமயம் அவனைவிட இவனுக்கு கொஞ்சமாயிருக்கிறது. எப்படியெனின், தத்துவ ஞானத்தால்தான் மோக்ஷம் சித்திக்கிறது. இந்த தத்துவஞானம் மானிட ஸ்திதியில்தான் சம்பாதிக்கக்கூடும். தேவதையை உபாசிக்கிறவன் ஒரு மரணத்திற்குப் பிறகு மறுபடியும் பூலோகத்துக்கு வருமுன் அவித்தையை (கர்மத்தை) உபாசிக்கிறவன் பல தடவை பூலோகத்தில் ஜனிக்கக்கூடும். இந்த பூலோக வாசமே ஞானத்தைச் சம்பாதிக்க ஆவசியகமானதால் தேவதோபாசகனுக்குக் கிடைக்கும் சமயத்தைவிட அவித்யோபாசகனுக்கு சமயம் அதிகமாகக் கிடைக்கிறது. அவனுக்கு முன்னும் இவன் ஞானத்தைச் சம்பாதித்து மோக்ஷமடையக் கூடுமானதால், இவன் (கர்மோபாசகன்) அனுஷ்டிக்கும் மார்க்கத்தைவிட அவன் (தேவதோபாசகன்) அனுஷ்டிக்கும் மார்க்கம் அதிக இருட்டாயிருக்கிறது என்று சொல்லப்படுகிறது.

மரணத்தை அதிக்கிரமித்தல் என்பது பூலோக வாசத்திற்கும் ஸ்வர்க்க வாசத்திற்கும் மத்தியிலுள்ள புவர்லோகத்தின் பயங்கரமான ஸ்திதியை அபாயமின்றிக் கடந்துபோதலாம்.

15-16. பிரத்தியக்ஷப் பிரமாண்டத்தில் பரமாத்மாவுக்குப் பிரதீகமாயிருக்கிற சூரியனைப்பார்த்து ஸ்துதி. சூரிய தேஜஸும் ஜீவதேஜஸும் தேஜஸுக்கெல்லாம் தேஜஸாயிருக்கிற பரமாத்ம தேஜஸின் அம்சங்களாம்.

17-18. இவ்விரண்டு மந்திரங்களும் மரணசமயத்தில் சொல்லத்தக்கவை. அந்தியகாலத்தில் ஒருவனுக்கு இருக்கும் மனோபாவங்களுக்குத் தக்கபடி மரணத்திற்குப் பிறகு அவனுக்கு நல்ல ஸ்திதியேனும் கெட்டஸ்திதியேனும் அமையும் (பிரச்னோபநிஷத்து III-10-பார்க்க). முந்தின ஜன்மங்களின் ஞாபகத்தைத் தரிப்பது மனதேயாம். மரண சமயத்தில் தத்துவத்தை ஏகாக்கிரமாய் தரிப்பதினுல் மறுஜன்மத்தில் முந்தின ஜன்மத்தின் ஸ்மரணை சுலபமாய் உண்டாகும்.

இந்த ஈசாவாஸ்ய உபநிஷத்துக்கு **சங்கரபாஷ்யம், ஆநந்தகிரிடீகை,** இவைகளைத்தவிர, அடியிற்கண்ட வியாக்கியானங்கள் ஏற்பட்டிருக்கின்றன. அவைகளிற் காணப்படும் விசேஷார்த்தங்களை விஸ்தாரபயத்தால் இவ்விடத்தில் கொடுக்கவில்லை.

1. பிரம்மாநந்த ஸ்வாமிகளாற் செய்யப்பட்ட ஈசாவாஸ்ய இரகசியம்.
2. சங்கராநந்தராற் செய்யப்பட்ட ஈசாவாஸ்யதீபிகை.
3. இராமசந்திரபண்டிதராற் செய்யப்பட்ட ஈசாவாஸ்ய இரகஸ்யவி விருத்தி.
4. உவடாசார்யருடைய ஈசாவாஸ்ய பாஷ்யம்.
5. ஆநந்தபட்டோபாத்தியாயருடைய ஈசாவாஸ்ய பாஷ்யம்.
6. அநந்தாசாரியருடைய ஈசாவாஸ்ய பாஷ்யம்.

இந்த உபநிஷத்தின் மந்திரங்களுக்கு ஸ்வரமும் கொடுக்கப்பட்டிருக் கிறது.

---

## விசிஷ்டாத்வைதம்.

**விசிஷ்டாத்வைதம்=விசிஷ்டம்+அத்வைதம். அத்வைதம்** என்றால் இரண்டற்றது. **விசிஷ்டம்** என்றால் விசேஷணங்களுடன் கூடினது. ஆகவே **விசிஷ்டாத்வைதம்** என்றால் சித் (சேதனம், ஆத்மா,) அசித் (அசேதனம், ஜடம்) ஆகிய விசேஷணங்களுடன் கூடிய **பரபிரம்மமே** ஒன்று என்னும் சித்தாந்தம். **சித், அசித், பரப்பிரம்மம்** இம்மூன்றும் **தத்துவத்திரயங்கள்.** இவைகளில் பரப்பிரம்மம் ஸ்வதந்திர தத்துவம். இது ஒன்றே சத்தியம். மற்றவைகள் பரப்பிரம்மத்தை ஆசிரயித்த சத்திய தத்துவங்கள். ஒரு பதார்த்தம் அதின் வர்ணம் முதலிய குணங்களுடன் கூடியிருப்பது போலும், பதார்த்தத்தையும் அதின் குணங்களையும் பிரிக்க முடியாததுபோலும், பரமாத்மா சித், அசித்துக்களுடன் சேர்ந்தும் இவைகளினின்றும் பிரிபடாமலும், பதார்த்தம்போல், ஒருவஸ்துவாயிருக்கிறது. சித் அசித்துக்கள் பரமாத்மாவுக்குச் **சரீரம்** என்றும் பரமாத்மா **சரீரி** என்றும் சாஸ்திரத்தில் சொல்லியிருக்கிறது. இந்த தத்துவத்திரயங்களின் சேர்க்கையால் விசிஷ்டாத்துவைதம் சித்திக்கிறது.

சித், ஈசுவரன், இவர்களுக்கு வேறான **அசித்** என்பதில் (1) காலம், (2) மூலப்பிரகிருதி, (3) சத்வம், இராஜஸம், தாமஸம், என்னும் முக்குணங்கள், ஆகிய இவைகள் அடங்கியிருக்கின்றன. காலம் அநித்தியம். மூலப்பிரகிருதி நித்தியம். கடத்துக்கு மண் உபாதானகாரணமாயிருப்பதுபோல் பிரம்மாண்ட சிருஷ்டிக்கு மூலப்பிரகிருதியே உபாதான காரணம்.

**சித்** என்பது ஜீவாத்மா : இது நித்தியம், அசித், ஈசுவரன் இவர்களை விட வேறானது. ஒவ்வொரு மனிதனிடத்திலும் இருக்கும் ஜீவாத்மா வெவ்வேறு. ஜீவனும் ஈசுவரனும் இருவரும் ஞானமுடையவராயினும் ஈசுவரனுடையஞானம் நித்தியமாயும் அளவற்றதாயுமிருக்கிறது. ஜீவனுடைய ஞானம் பந்தத்தால் அடங்கியிருக்கிறது; ஆகையால் விருத்தி அடையக்கூடியதாயிருக்கிறது. ஜீவன் மோக்ஷமடையும் வரையிலும் கர்மாதீனன். மோக்ஷமென்பது கைவல்யம் என்றும் பிரம்மாநந்தம் என்று மிருவகை. ஜீவன் தன்னுடைய வாஸ்தவமான ஸ்திதியிலிருந்துகொண்டு ஆநந்தத்தை அனுபவிப்பது கைவல்ய மோக்ஷம். இதை அடைந்தவன் பிரகிருதி மண்டலத்துக்கு வெளியில் விரஜா நதிக்கு இக்கரையில்இருப்பதாகச் சிலர் சொல்லுகிறார்கள். வேறு சிலர் இவன் முக்தர்களுடையும் வைகுண்டலோகத்தை அடைகிறான்

என்றும், அப்படி அடைந்தாலும் பரமாத்மாவிற்குச் சமீபத்திற் செல்லுகிற தில்லை என்றும், பரச்சேரிக்கு ஒப்பான வைகுண்டத்தின் ஒரு மூலையில் இருக்கிறான் என்றும் சொல்லுகிறார்கள்.

ஜீவன் வைகுண்ட லோகத்திற் பரமாத்மாவுக்குச் சமீபமாய்ச் சென்று பரமாத்மாவைப் போல் பிரம்மாநந்தத்தை அநுபவித்தலே பிரம்மாநந்த மோக்ஷம். ஜீவன் பிரம்மத்தில் லயமாகிறான் என்பது அர்த்தமன்று. அவன் சாயுஜ்ஜிய சாலோக சாரூபங்களை அடைகிறான் என்பது அர்த்தம். ஜகத்சிருஷ்டி ஸ்திதி சம்ஹாரம் முதலிய ஜகத் வியாபாரங்கள், லக்ஷ்மீ பதித்துவம், இவைகள் பரமாத்மாவுக்குத்தான் சேர்ந்தவை. இவைகள் தவிர மற்ற எல்லா விஷயங்களிலும் முக்த ஜீவன் சமானனே.

இந்த மோக்ஷத்தையடைவதற்கு நான்கு உபாயங்களுள :—

(1) **கர்மயோகம்.**
(2) **ஞானயோகம்.**
(3) **பக்தியோகம்.**
(4) **பிரபத்தி.**

**கர்மயோகம் :**—சாஸ்திரங்களின் மூலமாய்த் தத்துவத்திரயத்தின் ஞானத்தை அடைந்து, பரமாத்மாவின் ஸ்மரணையை எப்போதும் மனதில் தரித்து, பலாபேக்ஷை யின்றிக் கர்மங்களைச் செய்வது கர்மயோகம்.

**ஞானயோகம் :**—யோகசாஸ்திரங்களிற் சொல்லிய யமநியமாதி அங்கங்களுடன் மனதை ஜீவஸ்வரூபத்தில் ஏகாக்கிரப் படுத்துவது ஞானயோகம். கர்மயோகம் ஞானயோகம் இவைகளினின்றும் ஜீவசாக்ஷாத்கார ஞானம் உண்டாகி மோக்ஷம் சித்திக்கும். இதுவேகைவல்ய மோக்ஷம்.

**பக்தியோகம் :**—இதுவே உபாசனை எனப்படும். கர்மங்களைச்செய்து கொண்டுஆயுள் உள்ளவரையில் பரப்பிரம்மத்தையும் அதன்குணவிசேஷங்களையும் இடைவிடாமல் தியானிப்பது பக்தியோகம், ஞானயோகத்துடனும் இதை அப்பியசிக்கலாம். இந்தப்பக்தியோகமே பிரம்மசாம்யம் என்னும் பிரம்மாநந்த மோக்ஷத்தைக் கொடுக்கும்.

**பிரபத்தி :**—மேற்சொன்ன மூன்று உபாயங்களையும் விட்டு விட்டு (1) அவைகளை அப்பியசிக்க முடியாத தன்மையையும், (2) பரமகதியாக ஈசுவரனையும் தியானித்து மரணம் வரையில் அவருடைய ஆஜ்ஞைக்கு விருத்தமாய் ஒன்றும் செய்யாமலும், அவரே இரக்ஷகர் என்னும் பூர்ணவிச்வாசத்துடன் இருப்பது பிரபத்தி. இதில் பூர்ணநம்பிக்கையே முக்கியமானது.

இந்த நான்கு சாதனங்களையும் அப்பியசிக்க இச்சிக்கிறவன் அடியில் கண்ட சாதனங்களை அடைய வேண்டும்.—

(1) ஆசாரியரிடத்திருந்து கிரகிக்கப்பட்ட சித்-அசித்-ஈசுவரன் ஆகிய இவர்களின் யதார்த்த ஞானம்.

(2) ஆசாரியரிடத்தில் பிரீதி.
(3) வேதங்களிடத்தில் பக்தி.
(4) மோக்ஷ இச்சை.
(5) வைராக்கியம்.
(6) கர்மத்தில் ஆஸக்தி.
(7) வேதாந்த அப்பியாசம்.

மேற்சொன்னவைகளைப்பிரதிபாதிக்கும் மதம் விசிஷ்டாத்வைத மதம் எனப்படும். இதில் முக்கியமான ஈசுவரஸ்வரூபம், ஜீவஸ்வரூபம், மோக்ஷம், அதை அடையும் உபாயங்கள், அதிகாரிக்கு வேண்டிய சாதனங்கள் இவை எல்லாம் இந்த ஈசாவாஸ்ய உபநிஷத்தில் சொல்லப்பட்டிருக்கின்றன.

இந்த உபநிஷத்துக்கு **வேதாந்த தேசிகர்** என்பவரும் **கூரநாராயண சுவாமி** என்பவரும் வியாக்கியானம் செய்திருக்கிறார்கள். சுவாமிகளுடைய வியாக்கியானந்தான் மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது.

இந்த உபநிஷத்தின் முக்கியமான விஷயங்களாவன:—

1. சகலத்திற்கும் ஆதாரமாய் சகலத்திலும் வசிக்கிறவன் பரமாத்மா. அவனே ஸ்வதந்திரன். சகல ஜீவர்களும் சகல ஜகத்தும் அவனுக்கு ஸ்வாதீனமானவை. அவனே போக்கியன். அவனே சகலத்தையும் வியாபித்திருக்கிறான். சமஸ்த ஜகத்திலும் அபிமானம் விட்டு பகவானுடைய சேவைக்கு உபயோகமானவைகளை மட்டும் ஸ்வீகரிக்கவேண்டும் (அல்லது) பகவத்கலியாண குண விசேஷங்களைப் பூஜிக்கவேண்டும். எவனுடைய தனத்தையும் இச்சிக்கலாகாது.

2. பிரம்மோபாசகன் ஜீவித்திருக்கும்வரையில் கர்மத்தை செய்துக் கொண்டே இருக்கவேண்டும். ஆக இவ்விரண்டு மந்திரங்களால் தத்துவத்திரயம் வைராக்கியம் கர்மயோகம் இவைகள் சொல்லப்பட்டிருக்கின்றன.

3. தத்துவத்தை யறியாமலும் கர்மயோகத்தைச் செய்யாமலுமிருக்கிறவர்கள் பயங்கரமான நரகங்களை அடைகிறார்கள்.

4-5. பரமாத்மாவை சகலத்துக்கும் ஆதாரமாயும் சகலத்திலுமிருப்பதாயும் தியானிக்கிறவன் ஒன்றினிடத்திலும் வெறுப்பு அடைகிறதில்லை; சோகமோஹங்களை அடைகிறதில்லை.

8. மோக்ஷசாதனங்களான (3-ல் சொல்லிய கர்மயோகத்தைத்தவிர) ஞானயோகம், ஜீவாத்மயோகம், ஞானியின் ஸ்வரூபம், அவன் அடையும் பலன் இவைகள் சொல்லப்பட்டிருக்கின்றன.

9 - 11. மோக்ஷமடைய விஹிதகர்மத்தைச் சேர்த்தே உபாசனையைச் செய்யவேண்டியது.

12 - 14. மோக்ஷத்துக்குப் பாதகமான நிஷித்தகர்மங்களை விட்டு விட்டே உபாசனையை அனுஷ்டிக்கவேண்டியது.

15 - 16. சமாதிக்கு விருத்தமானவைகளின் நிவர்த்தியின்பொருட்டும், பரமாத்மதர்சனத்தின்பொருட்டும், பரமாத்மாவின் பிரார்த்தனை.

17 - 18. சரணாகதி என்னும் பிரபத்திமார்க்கம்.

---

## கூரநாராயணசுவாமிகளின் சுருக்கம்.

இந்த அனுவாகத்தில் முதல் மந்திரம் முதல் 8 - வது மந்திரம் வரையில் சேதனம், அசேதனம் ஆகிய இரண்டு **அபரதத்துவமும், கர்மயோகம் ஞானயோகம்** என்னும் வியவஹிதமான (உபாசனை வழியாய் கொடுக்கும்) இரண்டு மோக்ஷோபாயங்களும், முக்கியமாய் சொல்லப்பட்டிருக்கின்றன.

மேல் 8 மந்திரங்களில் பரதத்துவமென்னும் பரமபுருஷனுடைய **பக்தி யோகம்** என்னும் நேரான மோக்ஷோபாயம் முக்கியமாய் சொல்லப்பட்டிருக்கிறது. பாக்கி இரண்டு மந்திரங்களால் எல்லா பலத்தையும் கொடுக்கும் **பிரபத்தி**: அதாவது, சரணாகதி முக்கியமாய் சொல்லப்பட்டிருக்கிறது. **பகவத்கீதை**யின் முதல் ஆறு அத்தியாயங்கள் முதல் 8 மந்திரங்களிற் சொல்லிய விஷயத்தையும், இரண்டாவது ஆறு அத்தியாயங்கள் பின் 8 மந்திரங்களிற் சொல்லியவிஷயத்தையும், கடை ஆறு அத்தியாயங்கள் கடை இரண்டு மந்தரவிஷயத்தையும் சொல்லுகின்றன. கீதையின் 3-வது ஆறு அத்தியாயங்கள் முதல் இரண்டு ஆறு அத்தியாயங்களால் சொல்லிய தத்துவம், உபாயம், புருஷார்த்தம் இவைகளை விவரிப்பதோடு சரணாகதியை முக்கியமாய்ச் சொல்லுகின்றன. அவ்விடத்திலுள்ள

**सर्वधर्मान्परित्यज्यमामेकं शरणंव्रज**
**अहंत्वासर्वपापेभ्यो मोक्षयिष्यामिमाशुच ।**

என்னும் சரமசுலோகத்தின் பூர்வார்த்தம், **वायुरनिलममृतम्** என்னும்மந்திரத்திற் சொல்லிய அனுஷ்டானத்தைச் சொல்லுகிறது. உத்தரார்த்தமும் **युयोध्यस्मज्जुहुराणमेनः** என்னும் மந்திரத்தால் கோறப்படும் பிரார்த்தனையை பூரணம் செய்யும் ஈசுவரசங்கற்பத்தைச் சொல்லுவதோடு சோகநிவர்த்தியையும் சொல்லுகிறது. ஆகையால் சரமசுலோகம் இரண்டுமந்திரங்களுக்கும் வியாக்கியான ரூபமாயிருக்கிறது. மேற்சொல்லியபடி பரதத்துவம், அதின் விபூதி யோகம், அதின் உபாசனம், அதின்பிரபத்தி, உபாசன பிரபத்திகளின் பலவிசேஷங்கள் ஆகிய இவைகளை சுருக்கமாய்ச்சொல்லி இந்த சம்ஹிதை முடிவு அடைகிறது. **हरिः ओं.**

---

## துவைதம்.

**விஷ்ணுவே** சர்வேசுவரன், திவ்விய கலியாணகுணசம்பன்னன். **ஜடப்பிரகிருதியி**னின்றும் ஜகத்தை விஷ்ணு சிருஷ்டித்தபடியால் விஷ்ணு **நிமித்த காரணம்**. ஜடப்பிரகிருதி **உபாதானகாரணம்**. **விஷ்ணு, ஜீவன், பிரகிருதி** இம்மூன்றும் நித்தியம், நாசமற்றவை. இவைகள் தனித்தனியே சத்தியம், ஒன்றுக் கொன்று வேறானவை. ஆனால் பிரகிருதியும் ஜீவனும் விஷ்ணுவின் ஆதீனத்துக்குட்பட்டவைகள். பிரகிருதியின் சத்வ, ரஜஸ், தமஸ் ஆகிய குணங்களால் பாதிக்கப்பட்டு ஜீவன் பலவித கர்மங்களைச் செய்கிறான். அதனால் ஜீவன் ஜனனம், மரணம், புனர்ஜன்மம் இவைகளுக்கு உட்படுகிறான். கர்மக்ஷயத்தை அடையும்போது ஜீவன் முக்தனாகிறான். முக்திக்குச்சாதனம் விஷ்ணுவினிடத்திற் **பக்தி**. இந்தப்பக்தியால் விஷ்ணுவின் **பிரசாதத்தை** அடைந்து ஜீவன் முக்தி, அதாவது, **மோக்ஷத்தை** அடைகிறான்.

தசோபநிஷத்துக்களுக்கும் ஸ்ரீ **ஆனந்ததீர்த்தாசாரியர்** அவர்கள் பாஷ்யம் செய்திருக்கிறார்கள். இந்தப்பாஷ்யத்தில் விசேஷமாய் புராணாதிகளினின்றும் பிரமாண வசனங்கள் எழுதப்பட்டிருக்கின்றன. **ஜயதீர்த்தர்** என்பவரும் இன்னும்சிலரும் இந்த பாஷ்யத்துக்கு டீகை எழுதியிருக்கிறார்கள். இந்த டீகையில் பாஷ்யத்துக்கு வியாக்கியானமும் இதரமதகண்டனமும்

விசேஷார்த்தமும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இராகவேந்திரசுவாமி அவர்கள் மேற்கண்ட டீகையினின்றும் முக்கியவிஷயங்களை மட்டும் எடுத்துக்கொண்டு கண்டார்த்த மென்னும் கிரந்தத்தை எழுதியிருக்கிறார்கள். இந்தத் தமிழ்மொழிபெயர்ப்பில் கண்டார்த்தத்திலிருந்து வாக்கியார்த்தமும், டீகையிலிருந்து பரமதகண்டனம்முதலியவைகளும், பாஷ்யத்திலிருந்து பிரமாண வசனங்களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

இந்த உபநிஷத்தின் விஷயம் ஸ்ரீமத் பாகவதத்தின் 8-வது ஸ்கந்தத்தின் 1-வது அத்தியாயத்தில் பிரஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. ஸ்வாயம்பு மனுவானவர் தன்னுடைய பெண்ணான ஆகுதியின் பிள்ளையாகிய (விஷ்ணுவின் அவதாரமான) யஜ்ஞன் என்பவனை ஸ்தோத்திரம் செய்துகொண்டிருந்தார். அக்காலத்தில் அவர் இராக்ஷஸர்களால் பீடிக்கப்பட்டார். யஜ்ஞன் அந்த இராக்ஷஸர்களையும் சம்ஹாரஞ்செய்து பாட்டனுருக்கும் அநுக்கிரகம் செய்தார். இந்த உபநிஷத்துக்கு ஸ்வாயம்புவமனுவே இரிஷி. யஜ்ஞன் என்று பெயருள்ள ஹரியே தேவதை. அநுஷ்டுப் முதலியவை சந்தஸ்கள். இந்த உபநிஷத்தின் முக்கிய விஷயங்கள்:—

1-2. ஞானத்தை இச்சிக்கிறவன் உபநிஷத்தில் அதிகாரமடையும் பொருட்டு ஈசுவரனைத்தவிர வேறு ஒருவனும் ஸ்வதந்திரனல்லன் என்னும் ஞானத்தால் வைராக்கியத்தைச் சம்பாதித்து பகவானுடைய பூஜாத்மகமாயும் தன்னுடைய வர்ணாசிரமங்களுக்கு யோக்கியமாயு மிருக்கிற கர்மங்களைச் செய்யவேண்டும். இவனே அதிகாரி.

3. பகவானை உள்ளபடி அறியாமல் விபரீதமாய் அறிகிறவன் ஆத்மஹத்தி செய்கிறவன். அவன் துக்கலோகத்துக்குப் போகிறான். இவன் அனதிகாரி.

4-5. பரமாத்மஸ்வரூபம். தேவதைகள்கூட இதை அறியவில்லை.

6-8. தத்துவ ஞானபலன், பகவத்சாக்ஷாத்காரம்.

9-14. மோக்ஷத்துக்குச் சாதகங்கள்:—

அவித்தையின் நிந்தை, வித்தை, ஈசுவரன் சிருஷ்டிகர்த்தா சம்ஹாரகர்த்தா வென்னும் ஞானம்.

15-18. மோக்ஷத்துக்காகவும், சாக்ஷாத்காரத்துக்காகவும் வேண்டிய பகவத் பிரசாதத்தை அடையும் பொருட்டு பகவத்பிரார்த்தனை.

---

## ஷட்வித லிங்கதாற்பரிய நிரூபணம்.

* ஞானப்பிரதிபந்தங்களில் ஒன்றாகிய **பிரமாணகதசம்சயம் ஷட்விதலிங்க** தாற்பரிய நிச்சயமாகிய **சிரவணத்தினாலேயே** கெடுக்கப்படுமாதலின் அந்த ஷட்விதலிங்கங்கள் (யுக்திகள்) இங்கு நிரூபிக்கப்படுகின்றன. அவைகளாவன:—(1) **உபக்கிரம உபசம்ஹாரம்** (2) **அப்பியாசம்** (3) **அபூர்வதை,** (4) **பலம்,** (5) **அர்த்தவாதம்.** (6) **உபபத்தி.**

(1) பிரகரணத்தின் ஆரம்பத்தில் பிரம்மத்தைப் பிரதிபாதித்தல் **உபக்கிரமம்**; முடிவில் பரதிபாதித்தல் **உப்சம்ஹாரம்**; இவ்விரண்டும் ஒரு லிங்கம்.

(2) பிரகரணத்தின் மத்தியிலும் அடிக்கடி பிரம்மத்தைப் பிரதிபாதித்தல் **அப்பியாச** லிங்கம்.

(3) வேறு பிரமாணங்களால் தெரிந்துகொள்ள அசக்கியார்த்தத்தை சுருதி பிரதிபாதிப்பதே **அபூர்வதை**யாம்.

(4) பிரகரணத்தில் பிரதிபாதிக்கப்படும் வஸ்துவை அறிவதனால் அஃது அடையக்கூடியதாமெனக் கூறிய பிரயோசனமாகிய மோக்ஷமே **பலம்.**

(5) பிரகரணத்திற் சொல்லிய பிரம்மத்தின் ஸ்துதியும் அந்நிய வஸ்துக்களின் நிந்தையும் **அர்த்தவாதமாம்.**

(6) பரமாத்ம தத்துவத்தை யுக்திகளாலும் திருஷ்டாந்தங்களாலும் பிரதிபாதித்தல் **உபபத்தியாம்.**

இந்த லிங்க விசாரத்தால் தாற்பரியம் நிச்சயிக்கப்படுகிறது. அத்வைத பிரம்மமே வேதாந்தத்தின் நிச்சயம் என்னும் சிரவண சித்தியின்பொருட்டு இவ்வாறு லிங்கங்களும் அவசியமாம்.

துவைதிகள்பக்ஷத்தில் முன்வரும் லிங்கத்தைப்பார்க்கிலும் பின்வரும் லிங்கம் பிரபலம். இவைகள் வாமனாதிகரணத்தில் சொல்லப்பட்டிருக்கின்றன.

---

* ஞானப்பிரதிபந்தங்கள் :—(1) விஷயாசக்தி. (2) பிரமாணகத சம்சயம், அதாவது, வேதாந்தவாக்கியம் அத்விதீயப் பிரம்மத்தைப் பிரதிபாதிக்கிறதா? அல்லது வேறு அர்த்தத்தைப் பிரதிபாதிக்கிறதா? என்னும் வேதாந்தமாகிய பிரமாணத்திலுண்டாகும் சம்சயம். (3) பிரமேயகத சம்சயம், அதாவது, ஜீவப்பிரம்ம ஐக்கியம் முதலிய பிரமேய விஷயமாய் சந்தேகம். (பிரமேயம்=அறியவேண்டிய விஷயம்). (4) பிராந்தி, அதாவது, விபரீதபாவம். மேற்சொல்லிய நான்கு தோஷங்களில் முன் சொல்லியவைநிவர்த்தியாகாமல் பின் சொல்லியவை நிவர்த்தியாகமாட்டா.

அவற்றின் நிவர்த்தி முறைமை வருமாறு :—(1) விவேகம், வைராக்கியம், சமாதிஷட்கசம்பத்தி, முமூக்ஷை, (2) சிரவணம், (3) மனனம், (4) தியானம். ஒருவன் வர்ணாசிரம தர்மங்களை அனுசரிப்பதினாலும், ஈசுவர் சேவையாலும், பூததயை முதலியவைகளாலும், வைராக்கியம் முதலிய சாதனங்களைச் சம்பாதித்து, சத்குருவை அடைந்து அவரிடம் மகாவாக்கியத்தைச் சிரவணம் செய்யவேண்டியது. விசாரசாகரத்தின் முதலாவது அத்தியாயத்தில் இவ்விஷயம் விஸ்தாரமாய் சொல்லியிருப்பதால் அந்தக் கிரந்தத்தைப் பார்த்துக்கொள்ளவும்.

**शब्दादेवप्रमितः** என்னும் சூத்திரத்தில் சொல்லப்படும் விஷயத்தை வாமனுதிகரணம் எனப்படும்.

1-வது ஈசாவாஸ்யத்தில்

1. **ईशावास्यं इदं सर्वं** (இந்த சமஸ்தப் பிரபஞ்சமும் ஈசுவரனுல் வியாபிக்கப்பட்டிருக்கிறது) என்னும் 1-வது மந்திரத்தால் **உபக்கிரமம்,** **सपर्यगात् शुक्र** (அவர் எல்லாவற்றையும் வியாபித்திருக்கிருர், சுத்தம்) என்னும் 8-வது மந்திரத்தில் **உபசம்ஹாரமுமாகிய** முதலாவது லிங்கம் காணப்படுகிறது.

2. **अनेजदेकं** (ஆத்மா அசல, ம்அத்விதீயம்) என்னும் 4-வது மந்திரத்தாலும், **तदन्तरस्यसर्वस्य** (அவர் சமஸ்தமான ஜகத்துக்கும் உள்ளேயிருக்கிருர்) என்னும் 5-வது மந்திரத்தாலும் **அப்பியாசலிங்கம்** காணப்படுகின்றது.

3. **नैतद्देवाआप्नुवन्** (சக்ஷுராதி இந்திரியங்கள் ஆத்மாவை அடைகிறதில்லை) என்னும் 4-வது மந்திரத்தினுல் அந்நியப் பிரமாணங்களை அபேக்ஷிக்காத **அபூர்வதை** என்னும் லிங்கம் காணப்படுகின்றது.

4. **तत्रकोमोहः कः शोकः एकत्वमनुपश्यतः** (ஆத்மா ஒன்று என்று பார்க்கிறவனுக்கு மோஹம் எங்கிருந்துவரும், சோகம் எங்கிருந்துவரும்) என்னும் 7-வது மந்திரத்தினுல் சோக மோஹ நாசமாகிய **பலன்** என்னும் லிங்கம் காணப்படுகின்றது.

5. **कुर्वन्नेवेहकर्माणि** (இச்சையுள்ளவன் கர்மத்தைச் செய்துகொண்டே இருக்கவேண்டும்) என்னும் 2-வது மந்திரத்தினுல் பேதத்தைப் பார்க்கிறவன் கர்மத்தைச் செய்யவேண்டும் என்றுசொல்லி, **असुर्यानामतेलोकाः** (ஆத்மஹத்தி செய்கிறவன் அஞ்ஞான மயமான ஸ்தாவர யோனியை அடைகிருன்) என்னும் 3-வது மந்திரத்தால் அஞ்ஞானியின் நிந்தையும் ஊஹிக்கப்படுவதாகிய ஆத்மைக்கியத்தைக் காண்பவனது ஸ்துதியுமான **அர்த்தவாதம்** என்னும் லிங்கம் காணப்படுகின்றது.

6. **तस्मिन्नपो मातरिश्वा दधाति** (பரமாத்மாவினிடத்தில் வாயு ஜலத்தைத் தரிக்கிருன்) என்கிற 4-வது மந்திரத்தால் **உபபத்தி** என்னும் லிங்கம் காணப்படுகின்றது.

இந்த லிங்கங்களால் ஈசாவாஸிய உபநிஷத்தின் தாற்பரியம் அத்துவைத பரமாக நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது.

---

## சாந்தி மந்திரம்.

ओं पूर्णमदः पूर्णमिदं पूर्णात्पूर्णमुदच्यते ।
पूर्णस्यपूर्णमादाय पूर्णमेवावशिष्यते ॥
ओं शान्तिः शान्तिः शान्तिः.
हरिः ओं.

ओं=ஓம்.

अदः = அது, தேசகால வஸ்து பரிச்சேத சூன்னியமாயும் பரோக்ஷமாயு மிருக்கிற பிரமம்.

पूर्ण = உபாதியற்றபடியால் ஸம்பூர்ணம்.

इदं = இது, தேசகாலாதி வியவஹாரத்தை அடைந்திருக்கிற இந்த ஜகத்து.

पूर्ण = மாயாசபளிதமான (மாயையுடன் கூடிய) பிரம்மத்தால் வியாபிக்கப் பட்டிருப்பதினால், பூர்ணம்.

पूर्णात्=इदं சப்தத்தால் குறிப்பிடப்படுகிற த்வைதப்பிரபஞ்சா ரோபத்தை அடைந்திருக்கிற பிரம்மத்தைக் காட்டிலும்.

पूर्ण = அந்தப் பிரபஞ்ச அபவாதத்திற்குக் காரணமான பிரம்மம்.

उदच्यते = சிரேஷ்டமானது.

पूर्णस्य = காரியகாரணாத்மகமாய் பூர்ணமாயிருக்கிற வஸ்துவுக்கு

पूर्णम् = வியஷ்டி, சமஷ்டி, அவித்தியோபாதி, காரிய காரணங்கள் முதலியவை யாதொன்றுமில்லாத நானே பிரம்மம் என்கிற பூர்ண பாவத்தை.

आदाय = அறிந்து, அப்படி அறிந்த மாத்திரத்தில்.

पूर्ण एव = தனக்கு வேறாகாததாயும், காரிய காரண பாவங்களற்ற தாயு மிருக்கிற நிருபாதிகப் பிரம்மமே.

अवशिष्यते = மிஞ்சுகின்றது.

ओं = ஓம்.

शान्तिः = ஆத்தியாத்மிக துக்கம் ஒழிக.

शान्तिः = ஆதி பௌதிக துக்கம் ஒழிக.

शान्तिः=ஆதி தைவிகதுக்கம் ஒழிக.

हरिः=ஹரி:

ओं = ஓம்.

ஷை. பதங்களுக்கு வேறுவிதமாயும் சிலர் அர்த்தம் செய்கிறார்கள். எப்படியெனின், (1) பிரம்மம் (2) பூரணம் (3) ஜகத்து (4) பூரணம் (5) பிரம்மத்தினின்றும் (6) ஜகத்து (7) வெளிப்படுகிறது (8) பிரம்மத்தினின்றும் (9) ஜகத்தை (10) எடுத்துவிட்டால் (11) பிரம்மமே (12) மிஞ்சுகின்றது. மற்றவை முன்போலவே.

கருத்து :—நிருபாதிகமான பிரம்மம் காரிய உபாதியை அடைந்ததாகக் காணப்படுகின்றது. வாஸ்தவத்தில் பிரம்மத்துக்குக் காரிய உபாதியுமில்லை, காரண உபாதியுமில்லை. இந்தச்சாந்தி மந்திரம் ஜீவாத்மபரமாத்மா ஆகிய இவ்விரண்டின் ஐக்கியத்தைச் சொல்லுகின்றது. ஸகலமும் பூரணத்தினின்றே உண்டானாலும் பூரணம் குறைந்து போகிறதில்லை. பாபங்களை நாசஞ்செய்யும் பரமாத்மாவின் ஸ்வரூபத்திற்கு ஹரி என்று பெயர். ஓம் என்பது முண்டகோபநிஷத்தில் விஸ்தரிக்கப்படும்.

மத்துவ மதத்தில் ஒவ்வொரு உபநிஷத்துக்கும் வெவ்வேறு சாந்தி மந்திரத்தைச் சொல்லும் சம்பிரதாயமில்லை, சகல உபநிஷத்துக்களின் ஆரம்பத்தில் தைத்தரீயத்தின் சாந்தியைச் சொல்லுவதே வழக்கமாயிருக்கிறது.

இந்தச் சாந்தி மந்திரம் பிருகதாரணியக உபநிஷத்தின் 5-வது அத்தியாயத்தின் முதலாவது பிராமணத்தின் முதலாவது மந்திரமாக ஏற்பட்டிருக்கிறது.

---

1. ई॒शा वा॒ स्य॒ मि॒ द ँ सर्वं यत्किञ्च जगत्यां जगत्।
तेन त्यक्तेन भु॒ञ्जी था॒ मा गृधः कस्य स्वि॒ द्धनम्॥

• जगत्या=பிருதிவியில் (பிரம்மாண்டத்தில்)

इदं =இந்த

यत्किञ्च=யாதொரு

जगत्=(ஸ்தாவர ஜங்கம வடிவமான) பிரபஞ்சம் (உண்டோ)

(तत्)=(அது)

सर्वं=முழுவதும்

ईशा=ஈசுவரனால் (பரமாத்மாவினால்)

वास्यं=மறைக்கப்படத்தக்கதாம். (இவ்வபிப்பிராயத்தினால் நீ எல்லாவற்றையும் விட்டு)

तेन=அந்த

त्यक्तेन=தியாகத்தினால்

(आत्मानं) (ஆத்மாவை)

भुञ्जीथा:=பாலனஞ்செய்.

कस्यस्वित्=எவனுடைய

धनं =தனத்தையும்

मागृध:=அபேக்ஷிக்கவேண்டாம்.

ஸ்ரீ கணேசாயநம:

[பகவான் பாஷியகாரர் 'ஈசாவாசியம்' என்பவை முதலிய மந்திரங்களின் வியாக்கியானத்தை ஆரம்பித்தற்குமுன், அம்மந்திரங்கள் கர்மத்திற்கு அங்கமாமென்னுஞ் சிலர் சங்கையை நிராகரிக்கிறார்.]

சங்கர பாஷியம்.

(உபோற்காதம்) 'ஈசாவாசியம்' 1 முதலிய வேத மந்திரங்கள் கர்மத்தில் விநியோக 2 மாக்கப் பட்டவைகளன்று; அவை

---

விசிஷ்டாத்வைத பாஷியம்.

विश्वं व्याप्यं धार्यं तेन विचित्राश्चशक्तयोयस्य।
श्रीरंगेशं तमृषिं तनुवाक्चित्तै रुपास्महेपुरुषम्॥

எவனால் சகல ஜகத்தும் வியாபிக்கப்பட்டும் தரிக்கப்பட்டுமிருக்கிறதோ, அதனால் எவனுடைய சக்திகள் ஆச்சரியப்படத்

---

துவைத பாஷியம்.

1. அ-கை:—இலக்ஷ்மி நாராயணனுக்கு நமஸ்காரம். குருக்களுக்கு நமஸ்காரம். अनेजत् (4-வது மந்திரம்) முதலிய மந்திரங்க

---

டிப்பணி.—(1) ஈசாவாசியாதி மந்திரங்கள் கர்மத்திலுபயோகமுள்ளனவாம், மந்திரமாயிருத்தலால்; அந்நியமந்திரங்களைப்போல; ஆதலால் இம் மந்திரங்களுக்கு வேறு பிரயோசன முதலிய அநுபந்த மின்மையால், இவை வியாக்கியானஞ் செய்யத்தக்கவைகளன்று எனச்சில கர்மஜடர் கருதுகின்றனர். அவர்களை நோக்கிக் கூறுகின்றார்.

(2) इषेत्वोति शखांछिनाति = इषेत्वा— இஷேத்துவா என்னும் மந்திரத்

ச:—கர்மத்திற்குச் சாதனமாகாத ஆத்மாவின் யதார்த்தத் தன்மையை (சுபாவத்தை)விளக்குகின்றன. ஆத்மாவின் யதார்த்தத்தன்மையாகிய நிஜ சொரூபமோ சுத்தத் தன்மை, பாபத்தாற் பற்றப் படாமை, ஏகத்துவம், நித்தியத்துவம், சரீரமின்மை, எங்கும் வியாபித்திருத்தல் என்பன முதலியனவாக இனிச்சொல்லப்படுவதாம். அதுவுங் கர்மத்தோடு விரோதிக்கிறது.[3] ஆதலால் இம்மந்திரங்கட்குக் கர்மத்தில் விநியோக (சம்பந்த) மின்மை யுக்தமேயாம். இந்த

வி:—தக்கவைகளாக இருக்கின்றனவோ, எவன் எங்கும் நிறைந்து, எல்லாருக்கும் முன்னிருக்கிறவனும், சகல வேதங்களையும் அறிந்தவனுமிருக்கிறானோ, அந்த ஸ்ரீரங்கநாதனைச் சரீரம் வாக்கு மனது இவைகளால் உபாசிக்கிறோம்.

அஜடமும் ஜடமுமாகிய பார்க்கப்படுகிறவையெல்லாம் எவனால் வியாபிக்கப்பட் டிருக்கின்றனவோ, அந்த தோஷமற்ற திருக்கல்யாண குணங்கள் நிரம்பிய ஸ்ரீ வாசுதேவனை நமஸ்கரிக்கிறோம்.

எல்லாவற்றையும் நடத்துபவனும், தன்னுடன் பிறந்த மகிமையுடையவனும், எல்லாவற்றிற்கும் அந்தர்யாமியாயும், தோஷங்களெல்லாவற்றையும் தன்னாலேயே தான் கடந்தவனும், வித்தையெல்லாவற்றிற்கும் முக்கிய விஷயமானவனும், எல்லாவித கர்மங்களுக்கும் தானே ஸ்வாமியாகவும், பாபங்களை நிவர்த்திசெய்பவனும், ஏற்கனவே ஏற்பட்ட (புருஷனால் ஏற்படுத்தத்தகாத)

து:—ளாற் சொல்லப்போகிற தத்துவங்கள் அதிகாரியின் மனதில் தான் தங்கும், மற்றவர்களின் மனதில் தங்கமாட்டாவாகையால், இந்த உபநிஷத்தில் அதிகாரம் சித்திக்கும்பொருட்டு விஷயத்தில் இச்சையை விடவேண்டுமென்று முதல்மந்திரம் யுக்தியுடன்விதிக்கிறது.

தைச்சொல்லி கிளையை முறிக்கவேண்டும் என்று மிதுமுதலிய வசனங்களுக்கு எப்படி அவ்வவ்வேத வாக்கியங்களின் கர்மத்தில் விநியோகம் சொல்லப்பட் டிருக்கின்றதோ, அதுபோல ஈசாவாசியமென்னு மிவைமுதலிய மந்திரங்களுக்கு விநியோகஞ் சொல்லப்படவில்லை. அன்றியும் இவற்றின் பாடம் கர்மப்பிரகரணங்களின் இடையிலிருக்குமாயின், இவற்றைக் கர்மசாதனமென்று சொல்லலாம். அத்தன்மையாகவுமில்லை. உபநிஷத்தென்னும் இப்பிரகரணங்கள் வேறாயிருக்கின்றன.

(3) बाहिर्देवसदनदामि—வெளியில் தேவக்கிரகத்தை (தருப்பையை) அறுக்கிறேன் என்னும் மந்திரம் பிரத்தியக்ஷமாக விநியோகிக்கும் சுருதியன்றாயினும், லிங்கத்தால் (சப்த சாமர்த்தியத்தால்) தருப்பையை அறுத்தலில் விநியோகிக்கப் படுகின்றது. அதுபோல உபநிஷத்து வாக்கியங்கள் பிரத்தியக்ஷமாய் கர்மத்தில் விநியோக மாகாவிடினும் கர்ம சாதனமாகிய ஆத்ம சுபாவத்தைப் பிரதிபாதிப்பனவா யிருக்கின்றன வென்னு மிலிங்கத்தால் இவ்வாக்கியங்களுக்கு விநியோகங் கற்பிக்கவேண்டும். ஆனால் இங்ஙனங் கூறுதல் முற்றும் சம்பவியாது. ஏனெனின், உபநிஷத்திற் சொல்லப்பட்ட ஆத்ம சொரூபம் கர்ம சாதனமன்றென்பது மாத்திரமன்று ; கர்மத்திற்கு விரோதமுள்ளதுமாம். யான் சுபாவமாய்ச்சுத்தன், ஒருபாவமுமில்லாதவன், எங்குமேகன், அசரீரி, ஆகாயத்தைப்போல் வியாபகன் என்று தன்னையறிகிற புருஷன் கடைக்கண்ணினாலும் கர்மத்தைப்பாரான். ஆனால் உலகானுக்கிரகத்தின் பொருட்டு மேற்பார்வையாகவேனும் உலகத்தாராலேனும் மாறான கர்மத்தைச்செய்கிறான். அப்படிச்செய்யுங் காலத்தும் அஞ்ஞானதசையிற்போல கர்மபிரவிருத்தியைச் செய்யாது தடுக்கின்றானென்று மபிப்பிராயமாகக் கூறுகின்றார்.

ச:—(முற்கூறப்பட்ட)இலக்ஷணமுள்ள [4] ஆத்மாவின் யதார்த்தத்தன்மை உற்பாத்தியமாக (உற்பத்தியாகத்தக்கதாக) வேனும், விகாரியமா (விகாரப்படத்தக்கதாக) வேனும், ஆப்பியமாக (அடையத்தக்கதாகவேனும், சம்ஸ்காரியமாக (சம்ஸ்காரஞ்செய்யத்தக்கதாக) வேனும்,கர்த்தா, [5] போக்தாவடிவாகவேனுமிருக்குமாயின் ஆத்மாகர்மத்

---

வி:—மோக்ஷோபாயமாயுமிருக்கிற முக்தர்களனுபவிக்கும் பொருளானது வாஜஸனேய சம்ஹிதையின் முடிவாகிய ஈசாவாஸ்யோபநிஷத்தில் தெளிவாய் பிரதிபாதிக்கப்படுகிறது. ईशावास्यमिदंसर्वं என்று தொடங்கி இந்த உபநிஷத்துமுழுவதும் ஒரு குரு தன் சிஷ்யனுக்குச்செய்யும் பிரம்மவித்தையின் உபதேசமாம்.

அ-கை:—ஈசாவாசியம் என்னும் அநுவாகம் (சுக்கிலயஜுர் வேதத்தின் ஒருபாகம்) 18 மந்திரங்களுள்ளது. புருஷசூக்தத்திற் சொல்லிய (1) பரமபுருஷன், அவனுடைய ஸ்வரூபம் ஆகியதத்துவமும், (2) அவனுடைய உபாசனம் (பக்திசெய்தல்) பிரபத்தி (சரணாகதி அடைதல்) ஆகிய உபாயமும், (3) அவனுடைய பிராப்தியாகிய புருஷார்த்தமும் இந்த உபநிஷத்திற் சுருக்கமாயும் செவ்வையாயும் சொல்லப்படுவதாலும், கல்ப சூத்திரத்தின் கர்த்தாவான காத்தியாயினரால் கர்மங்களில் இந்தமந்திரங்கள் உபயோகிக்கப்பட்டிருப்பதாலும், இந்த 18 மந்திரங்களும் (எல்லா உபநிஷத்துக்களுக்குள்) சாரமானவை. பகவத்கீதைமுதலியகிரந்தங்கள் இந்த மந்திரங்களுக்கு வியாக்கியானங்களாக இருக்கின்றன.

பிரம்மஸ்வரூபம் முதலியவற்றைப் பிரதிபாதிக்கும் இந்த மந்திரங்கள் பிரம்மகாண்டமாகிய பிருகதாரணியகத்தில் படிக்கப்படவேண்டியதே ஒழிய கர்மகாண்டமாகிய சம்ஹிதையில் படிப்பதில் பிரயோசனமில்லை என்று ஒருவன் ஆக்ஷேபித்தால், அதற்குச் சமாதானம் என்னவெனின், 1. இதில் சாரபூதமான 5-6 மந்திரங்கள் (3-9-15-16-17-18-வது மந்திரங்கள்) பிருகதாரணியகத்திலும்படிக்கப்பட்டிருக்கின்றன.

---

(4) கர்மத்தில் உபயோகமாகும் பதார்த்தம் புரோடாசை முதலியவற்றைப்போல உண்டாகத்தக்கதும், சோமமுதலியவற்றைப்போல விகாரமடையத்தக்கதும், மந்திரமுதலிய வற்றைப்போல அடையத்தக்கதும், அரிசிமுதலியவற்றைப்போல சம்ஸ்காரம் செய்யத்தக்கது மாகக்காணப்படுகின்றது. ஆத்மாவின் சுபாவம் அப்படிப்பட்டதன்று. ஆதலால் உற்பத்தி, விகாரம், பிராப்தி, சம்ஸ்காரம் என்னும் கர்ம சாதனங்களில் வியாபகமான தர்மங்கள், தாம் ஆத்மாவின் சுபாவத்திற்கு வேறாகி ஆத்மாவின் சுபாவம் கர்மத்திற்குச் சாதனமா மென்பதை விலக்குகின்றன வென்னும் அபிப்பிராயமாக ஆசாரியர் இங்கே கூறுகின்றார்.

(5) ஆத்மாகர்த்தா போக்தாவாயிருக்குமாயின் 'எனது இக்கர்மம் விரும்பிய பலனுக்குச் சாதனமாயிருத்தலால் என்னுற்செய்யத்தக்கதாம்' என்னும்

ச:—திற்குச்சேஷ(அங்க)மாகும். ஆத்மாவின் நிஜசொரூபம் அவ்வாறில்லாமையால் ஆத்மா கர்மாங்க(கர்மத்திற்குச்சாதன)மன்று. அன்றியும் 6 எல்லா உபநிடதங்களும் ஆத்மாவின் சொரூபத்தை நிரூபணஞ் செய்தேமுடிதலாலும், கீதை 7 முதலிய மோக்ஷசாஸ்திரங்களிற் சொல்லப்பட்ட மோக்ஷ தர்மங்களும் இதை (ஆத்ம சுபாவத்தைப்) பற்றினவாகவே இருத்தலாலும், ஆத்மாவின் நிஜசொரூபம் கன்மசாதனமன்று. ஆதலால் ஆத்மாவின் கர்த்திருத்துவ போக்திருத்துவ முதலியவற்றையும், அசுத்தத்தன்மை பாபத்தோடு கூடியதன்மை முதலியவற்றையுங் கொண்டு உலகத்தாரது புத்தியினுற் சித்தித்தகர்

வி.—2. (a). तमेतं वेदानुवचनेन ब्रह्मणाविविदिषान्ते ।
यज्ञेव दानेन तपसाऽनाशकेन ॥ (बृ IV-4-22)
(b). विद्यांच अविद्यांच यस्तद्वेदोभयँसह ।
अविद्ययामृत्युं तीर्त्वा विद्ययाऽमृतमश्नुते ॥ (ई XI)

இந்த மந்திரங்களில் கர்மம் வித்தையில் உபயோகப் படுவதாகச் சொல்லப்படுவதால், வித்தையைச் சொல்லும் உபநிஷத்தும் கர்ம காண்டத்தில் படிக்கப்படலாம்.

3. மேலும், கர்மங்கள் வித்தைக்குச் சாதனம் என்றுசொல்லும்பொருட்டுப் இந்த மந்திரங்கள் சம்ஹிதையில் படிக்கப்படலாம்.

கர்மங்களில் இவைகள் உபயோகப்பட்டிருப்பதாலும், மேற்சொன்ன தத்துவம், உபாயம், பிரயோசனம், இவைகளைச்செவ்வையாய்ச் சொல்லுகிறபடியாலும் இந்தமந்திரங்கள் உபநிஷத்து என்றே நிச்சயம்.

இரஜஸ் தமஸ் இவைகளின் ஆதிக்கியத்தோடு கூடிய தேகம் இந்திரியங்கள் முதலியவைகளுடன் கூடியிருப்பதால், ईश्वरोहं अहंभोगी (நான் ஈசுவரன், நான்போக்தா) என்னும் பகவத்கீதையின் (XVI-14) சுலோகப்படி நான் ஸ்வதந்திரன் என்றும், (இதரகாரணங்களால்)பரம புருஷனைத் தவிர இதர தேவதைகளுக்கு அடங்கினவன் என்றும் பிரமித்து தத்துவத்தை அறியவேணும் என்னும் இச்சையால் தன்னை அடைந்த சிஷ்யனுக்கு மேற்சொன்ன பிரமையை நிவர்த்திசெய்யும் பொருட்டு, சித் அசித்ரூபமான சகல பிரபஞ்சமும் பரமபுருஷனால் ஸ்வரூபத்தையும் ஸ்திதியையும் பிரவிருத்தியையும் அடைந்திருக்கிறதென்பதைக் குருவானவர் ஈசாவாசியம் முதலிய மந்திரங்களால் உபதேசிக்கிறார்.

அகங்கார சம்பந்த பூர்வகமாய் கர்மத்திற்கு ஆத்மாவோடு சம்பந்த முண்டாகும். ஆத்மாவோ கர்த்தா போக்தாவன்று. இதனுனும் ஆத்மா கர்மத்தில் உபயோக முடையதன்றென ஈண்டுக்கூறுகின்றார்.

(6) 'எந்த அர்த்தத்தில் சப்தத்தின் தார்ப்பரியமிருக்கின்றதோ, அது சப்தத்தின் அர்த்தமா' மென்று மீமாம்ஸ சாஸ்திரத்தில் காணப்படுதலாலும் எல்லா உபநிஷத்துகளுக்கு ஆத்ம சுபாவம் ஒன்றன்கண்ணே தாற்பரியங்காணப்படுதலாலும் உபநிடதங்கள் கர்ம சம்பந்தமான ஜபத்தில் உபயோகமாமென்று சொல்லுதல் கூடாது. எல்லா உபநிடதங்களுக்கு ஆத்ம சுபாவமொன்றே தாற்பரிய மாதலே அவ்வவ்வுபநிடதத்தின் ஆரம்பத்திற் குறிக்கப்பட்டிருக்கும் ஷட்வித லிங்கதாற்பரியத்தாற் கண்டு கொள்க.

(7) ஆத்ம ஐக்கியத்தின் பொருட்டு உபநிஷத்தைவிட வேறு பிரமாணமின்மையால், உபநிடதங்களுக்கு ஆத்ம ஐக்கியத்தைப் பிரதிபாதித்தலில் தாற்பரியமா மென்று சொல்லுதல் தகுதியன்றென்பாரை நோக்கி, கீதை முதலிய வேறுபிரமாணங்களும் ஆத்ம ஐக்கியத்தைப்பற்றியனவா மென்றார்.

ச:—மங்கள் விதிக்கப் 8 பட்டிருக்கின்றன. எவன் 9 பிரம்மதேஜசு 10 முதலியதிருஷ்டமும் (காணப்படுபவைகளும்) சுவர்க்கமுதலிய அதிர்ஷ்டமும் (காணப்படாதனவும்), ஆகிய கர்ம பலத்தை விரும்புகிறானோ, நான் துவிஜாதி (இருபிறப்பாளன்=பிராமணன், க்ஷத்திரியன் வைசியன்) ஒற்றைக்கண்ணுடைமை கூன் முதலிய அநதிகார தர்மமுடையவனல்லன் என்று தன்னை மதிக்கின்றானோ அவன் 11

அந்தப்பிரமாணங்கள் வருமாறு:—

समंसर्वेषु भूतेषु तिष्ठन्तपरमेश्वरम् ।

विनस्यत्स्वाविनश्यन्तंयःपश्यति सपश्याति= சகல பூதங்களுள்ளு மிருக்கின்ற பரமேசுவரன் ஒருவர். பூதங்களொடுங்கும் காலத்தும் அவர் அழியார். இவ்வாறுள்ள அவரை எவனறிகின்றானோ, அவனே ஞானி. गी. XIII. 27.

एकएवहिभूतात्मा भूतेभूतेव्यवस्थितः ।
एकधाबहुधाचैव दृश्यतेजलचन्द्रवत् ॥

பூதங்கள்தோறும் நிற்கின்ற பரமாத்மா ஒருவரே சலசந்திரனைப் போல ஒருவிதமாயும் வெகுவிதமாயும் காணப்படுகின்றார்.

பாரதம்-சாந்தி-மோக்ஷதர்மம்-351-10.

एकोहुताशोबहुधा सामिध्यतेएकः सूर्यस्तपसोयोनिरेका ॥
एकोवायुर्बहुधावातिलोके महोदधिश्चांभसांयोनिरेकः ॥
पुरुषश्चैकोनिर्गुणोविश्वरूपः । அக்கினி யொன்றாயிருந்தும் வெகுவிதமாய் எரிகின்றது. சூரியன் ஒன்றே பிரகாசங்களுக்கு ஒப்பற்ற காரணமாம். வாயு ஒன்றே உலகத்தில் வெகுவிதமாய் வீசுகின்றது. சமுத்திரமொன்றே ஜலங்களுக்கெல்லாம் ஆசிரயமாம். அதுபோல நிர்க்குணமான பரமாத்மா ஒருவனே பிரபஞ்ச வடிவமாயிருக்கிறான்.

(8) எவனுக்கு உபநிடதங்களிற் சொல்லப்பட்ட ஆத்மாவின் நிச சொரூபத்தின் விஞ்ஞானமிருக்கின்றதோ, அவனுக்குக் கர்மகாண்டம் அப்பிரமாணமாதல் இஷ்டமேயாம். அஃதெங்ஙனமெனின் नाहिंस्यात्सर्वभूतानि 'எல்லாச் சீவர்களையும் இம்ஸிக்கலாகாது' என்னும் நிஷேத சாஸ்திரத்தின் அர்த்தநிச்சயம் அறிந்தவனுக்கு சியேனயாக முதலிய புன்மை (அபிசார) விதி அப்பிரமாணமாம். எவன் அந்தக்கரணம் தீவிரகுரோதத்தால் வியாபித்திருக்குமோ அவனுக்குத்தான் அதர்வண வேதத்திற் கூறிய சத்துருவை நாசஞ்செய்யும் சியேனயாக முதலிய விதி பிரமாணமாம். அதுபோல ஆத்மாவின் யதார்த்தஞானம் எவனுக்கில்லையோ அப்படிப்பட்ட பொய்யுணர்வுள்ளவனுக்குத்தான் கர்மகாண்டம் பிரமாண மென்றறிக.

(9) இதனை ஜைமினி பகவான் துவாதசலக்ஷணியின் ஆறாவது அத்தியாயத்தில் விளக்கமாய்க் கூறியிருக்கின்றார். அது விரிவஞ்சி விடுக்கப்பட்டது.

(10) விதிப்படி நல்லொழுக்கத்துடன் சாங்கோபாங்கமாக அத்தியயனஞ்செய்கிறவர்களுக்கு அலௌகிகமான தேஜஸிருக்கும். அந்தத் தேஜஸைப் பிரமவர்ச்சஸென்றும் பிரமதேஜ சென்றும் கூறுவர்.

(11) 'கர்மபலத்தின் இச்சையாவது' 'யான் நன்றாய்ப் புஷ்டியாயிருக்கிறேன்' 'என் இந்திரியங்கள் தெளிவாயிருக்கின்றன' என்னும் அபிமானமாவது இருத்தற்குக் காரணம் மித்தியாஞானமாம் (பொய்யுணர்வாம்). ஆகாயத்தைப்போல கிரியையில்லாதவனும் துக்கசம்பந்த மில்லாதவனும் பரமாநந்தவடிவாயு மிருக்கின்றவனுக்கு மித்தியாஞானமின்றி, 'எனக்குச் சுகமுண்டாகவேண்டும் துக்கம் உண்டாகலாகாது' என்னும் இச்சையும்,

ச:—கர்மத்திற்கு அதிகாரியாவன் என்று கர்மாதிகாரமுணர்ந்த ஜைமினி முதலியோர் கூறுகின்றனர்.

ஆதலால் [12] இம்மந்திரங்கள் ஆத்மாவின் சுபாவத்தைப் பிரகாசிப்பித்தலால் ஆத்மாவை விஷயஞ்செய்யு மியற்கையாயுள்ள (அநாதியஞ்ஞானத்தின் காரியமான) அஞ்ஞானத்தை (கர்மஞானத்தை) நிவர்த்திப்பனவாய்ச்சோகமோக முதலிய சம்சாரத்தைக் கெடுப்பதற்குச் சாதனமான ஆத்மவைக்கிய முதலியவற்றின் விஞ்ஞானத்தை யுண்டுபண்ணுகின்றன. இப்படிச் சொல்லப்பட்ட அதிகாரி, விஷயம், சம்பந்தம், பிரயோசன மென்பவற்றையுடையமந்திரங்கட்குச் சுருக்கமாக வியாக்கியானம் செய்கின்றோம்.

வி:—इदंसर्वं=பிரத்தியக்ஷம் முதலிய பிரமாணங்களால் ஏற்படும் ஈசுவரனைத்தவிர மற்றசேதனுசேதனரூப சமுதாயம். இதுசிந்திக்கத் தக்கதல்ல; அநேகவிதம்; ஆச்சரியகரம். (இது என்பது எதிர்நிற்பதை மாத்திரம் தெரிவிக்கும் சொல்லாயினும் சேதனமாகிய ஆத்மா பிரத்தியக்ஷத்திற்கு எட்டாத பொருளானதால், அது சாஸ்திரத்தாலும் அனுமானத்தாலும் ஏற்பட்டதாக அங்கீகரிக்கப்பட்டிருப்பதைக்கொண்டு "இது" என்று கூறப்பட்டிருக்கிறது).

து:—यत्किञ्च=யாதொரு

इदं=இந்த

जगत्=ஜகத்து (உண்டோ)

(तत्) सर्वं=(அது) எல்லாம்

ईशावास्यं=आवासं + अर्हति इति आवास्यं· ईशस्य+ आवास्यं=ईशावास्यं=
ஈசுவரனுடைய வாஸஸ்தானம்; ஈசுவரனால் உட்பிரவேசிக்கப்பட்டிருக்கிறது. ஜகத்து தானாகவே பிரவர்த்திக்கச் சக்தியற்றது. तत्सृष्ट्वा तदेवानुप्राविशत् (அதை சிருஷ்டித்து அதையேபிரவேசித்தான்) என்னும் சுருதிப்படி ஜகத்து தானாகவே பிரவர்த்திக்காதென்பதும், ஆகையால் பரமேசுவராதீனம் என்பதும் தெரியவருகிறது. மேலும்,

---

என்சரீரம் மிகத்திடமாயிருக்கின்றது, இந்திரியங்கள் தெளிவுள்ளனவாயிருக்கின்றன' என்னும் அபிமானமும் இருத்தல் அமையாது.

12. எதனால் ஆத்மாவின் சுபாவத்தை (தன்மையை) விளக்கும் இம்மந்திரங்கள் கர்மசாதனமன்றோ, வேறு பிரமாணங்களின் விரோதமுடையதுமன்றோ, அதனால் அவற்றிற்கு அதிகாரி, விஷயம், பிரயோஜனம், சம்பந்தம் என்னும் நான்கு அநுபந்தங்களோடு கூடிய தன்மையும் சித்தித்ததென ஈண்டுக் கூறுகின்றார்.

இந்நூலிற்கு துக்கத்திற்குக் காரணமான தன் அஞ்ஞானத்தை நிவர்த்திக்கவிரும்புவோன் அதிகாரி. அதாவது விவேகம், வைராக்கியம், சமாதிஷட் சம்பத்தி, முமுக்ஷுத்துவம் என்னும் நான்கு சாதனங்களையுடையவன், அதிகாரி. சொல்லப்படும் ஆத்மாவின் யதார்த்தத்தன்மைவிஷயம். ஆத்மயதார்த்தத்தன்மைக்கும் அதைச்சொல்லும் வாசகத்திற்குமுள்ள பிரதிபாத்திய பிரதிபாதகபாவம் (சொல்லப்படுவது சொல்லுவது என்னுந் தன்மை). சம்பந்தம் தன்னிடத்துள்ள அஞ்ஞானம் நீங்கி சத்தியமான ஆத்மசொரூபத்தின் சாக்ஷாத்காரமுண்டாதல், பிரயோஜனம்,

முதல்மந்திர பாஷ்யம்.

ச:—**ईशा**:—எல்லாவற்றிற்கும் ஈசிதா [13] (நடத்துவோன்) பரமேசுவரனாகிய பரமாத்துமா. அவனே சர்வ ஜந்துக்கட்கும் ஆத்மாவாய் (சொரூபமாய்) எல்லாவற்றையும் நடத்துகின்றான்[14].

---

வி:—**ईशा**=சர்வத்தையும் நியமனம்செய்கிற மகாபுருஷனால். சிலரைமட்டும் நியமனம்செய்கிறார் என்னும்விஷயத்தில் பிரமாணமில்லை.

**यो सा वसौ पुरुषः** என்று மேல் 16 - வது மந்திரத்தில் இவ்விடத்தில் குறிப்பிட்டவனையே குறிப்பிடுவதால் ஈசா என்பதற்குமகாபுருஷனால் என்று அர்த்தம் செய்யவேண்டும். அந்த மகாபுருஷனே சகலத்திற்கும் ஈசுவரன். அப்படியேபுருஷசூக்தத்தில் (நாராயண அநுவாகம்) **पतिं विश्वस्यात्मेश्वरं** (எல்லாவற்றையும் இரக்ஷிக்கிறவனும், தனக்குத் தானே ஈசுவரனாயும்) என்கிற வாக்கியத்திற் சொல்லியிருக்கிறது.

ஒரு சப்தத்திற்கு ரூடி (இடுகுறி) அர்த்தமும், யோகார்த்தமும் (காரணார்த்தமும்) சம்பவிக்குமிடத்தில் ரூடி அர்த்தத்தையே கொள்ளவேண்டியது என்கிற நியாயத்தால், இவ்விடத்தில் 'ஈச' பதத்திற்கு ரூடி அர்த்தமான ருத்திரன் என்று சொல்லவேண்டும் எனின், அப்படிச் சொல்லக்கூடாது. ஏனெனின், **एको हवै नारायणासीन्नब्रह्मानेशानः (महोपनिषत्)** என்கிற வாக்கியத்தால்பிரளயகாலத்தில் நாராயணன்

---

13. ஐசுவரியத்தோடிருத்தல் என்னும் பொருளுடைய **ईश्** ஈசு என்னும் முதனிலையோடு வினைமுதற் பொருளுணர்த்தும் **क्विप्** க்விப் என்னும் விகுதி புணர்ந்து கெட்டகாலத்து அது **ईश्** என்னும் வினைமுற்றுப் பெயராய் நிற்கின்றது. அதனோடு மூன்றாம் வேற்றுமை ஒருமையுருபு சேருங்கால் **ईशा** ஈசா (ஈசனால்) எனத்திரிகின்றது. **'क्विप्च'** என்னும் பாணினிசூத்திரப் பிரமாணத்தால் **क्विप्** என்னும் விகுதி வினைமுதற் பொருளை யுணர்த்துவதாம். ஆகவே இந்த ஈசிதா என்னுஞ் சத்தத்திற்கு அக்கிரியனாகிய பரமேசுவரன் வாச்சியமாதல் எப்படிப் பொருந்தும்? அதனைப்பின் பாஷியகாரர் ஈசிதா என்னும் பதத்தாற் கூறியிருக்கின்றாரென்னின், அதற்குச் சமாதானம் வருமாறு:—மாயோபாதியுடைய பரமேசுவரன் எல்லா வற்றையும் நடத்துந் தொழிற்குக் கருத்தா வாதல்கூடும். ஆதலால் அவர் ஈசிதாவென்னுஞ் சொல்லிற்கு வாச்சிய மாதலில் விரோதமின்று மாயாவுபாதியின்றிய பரமேசுவரனுக்கு இலக்ஷியத்தன்மை யுண்டாகும். ஆதலால் இங்கே பரமேசுவரனுக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் ஈசிதா, பரமாத்மா என்னும் இரண்டு விசேஷணங்களும் பொருத்த முள்ளனவாம்.

14. எப்போது பரமேசுவரன் ஈசிதா(நடத்துகின்றவனா)வாகின்றானோ, அப்போது அவன் இராஜாவைப்போல எல்லா ஜீவர்களையும் நடத்தும் கர்த்தாவாகின்றான். சகலஜீவர்களும் பிரஜைகளைப்போல அவனால் நடத்தப்படுவாராகின்றார்கள். இதனால் அவற்றிற்குப் பேதம்வந்து பொருந்துமேயென்னுஞ் சங்கை பொருந்தாது. ஏனெனின், கண்ணாடி முதலியவற்றில் ஒரு புருஷனுடைய அநேக பிரதிபிம்பங்களுண்டாகின்றன. அவற்றின் நிஜசொரூபமான பிம்பவடிவ புருஷன் ஈசிதாவாகின்றான். அதுபோல பரமேசுவரன் சர்வஜீவர்களது ஆத்மாவாகியும் ஈசிதாவாதலுங்கூடும். ஆதலால் இங்கே பேதமாமென்னும் சங்கையில்லை.

ச:—ईशा ... जगत्—அப்பரமாத்மாவாகியதனது சொரூபத்தினால் ஜகத்தின் (பிருதிவியின்) கண்யாதொரு ஜகத்துளதோ [15], அவ்வெல்லாச்சராசரமும் இது முழுவதும் நானே யென்னும் பரமார்த்த சத்திய வடிவத்தால் வாசியமாம் [16] (மறைக்கத் தக்கதாம்).

---

வி:—இருந்தான் என்றும் பிரம்மாவும் ருத்திரனுமில்லை என்றும் சொல்லியிருப்பதால், ருத்திரன் காரியகோடியில்சேர்ந்தவனாய் ஏற்படுகிறான். மேலும், अनपहतपाप्मावा अहं अस्मि नामेधयानि मेधेहि என்கிற (शतपथ)வாக்கியத்தால் நான் பாபமற்றவனாக இருக்கவில்லை; எனக்கு நாமதேயங்கள் கொடுக்கவேண்டும் என்று சர்வேசுவரனை நாராயணனை ருத்திரன் கேட்பதாகச் சொல்லியிருப்பதாலும், ருத்திரன் கர்மவசியன் என்று ஏற்படுகிறான். பகவத்காரியனாயும் கர்மவசியனாயுமிருக்கிற ருத்திரனிடத்தில் ஆகாசாதிகளிடத்திற்போல் எங்கும் வியாபிக்குந் தன்மை, சகலத்திற்கும் ஆதாரமாயிருக்குந்தன்மை முதலியவை சம்பவிக்கமாட்டாவாகையால் 'ஈசா' என்பதினால் யோகார்த்தத்தால் சர்வேசுவரனை வாசுதேவனென்றே அர்த்தம்செய்ய வேண்டும். 'ஈசா' என்பது 'ஈட்' என்பதின் மூன்றாம் வேற்றுமை.

सर्वत्रासौ समस्तञ्च वसत्यत्रेतिवैयत: ।
ततस्सवासुदेवेति विद्वद्भि: परिपठ्यते ॥

எதனால் சர்வேசுவரன் எல்லாவற்றிலும் தானும், தன்னிடத்தில் யாவும் வசிப்பதற் குரியவனாகிறானோ, அதனாற்றான் அவன் வாசுதேவன் என்று ஞானிகளால் சொல்லப்படுகிறான். வாசு=வசிப்பதற்குரியவன், தேவன்=ஈசுவரன், என்று விஷ்ணுபுராணத்தில் 6 - வது அம்சத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

वास्यं=வசிக்கத்தகுந்தது, வியாபிக்கத்தகுந்தது. ஈசுவரன் சகலத்திற்கும் ஆதாரமாய் சகலத்திலும் வசிக்கிறான்; சகலத்திற்கும் ஆதாரமாயிருக்கிற தன்னிடத்தில் சகலத்தையும் வைத்துக்கொண்டிருக்கிறவன்.

जगत्या=என்பதற்கு பூமியில் எனப்பொருளாயினும் இங்கு எல்லா உலகங்களினும் எனப்பொருள் கொள்ளவேண்டும்.

---

து:—जगत्यां = பிரகிருதியினிடத்தில், அதாவது, இலக்ஷ்மியினிடத்தில்

---

15. இம்மந்திரத்தில் முன்னுள்ள जगत्यां பிருதிவியில் என்னும் பதத்தால் ஆதாரத்தன்மையாயுள்ள பிரபஞ்சம் முழுவதும், பின்னுள்ள जगत् பிரபஞ்சம் என்னும் பதத்தால் ஆதேயத் தன்மையாயுள்ள சகல சராசரப் பிரபஞ்சமும் கொள்ளப்படுவதால் புநருக்தி (கூறிய கூறல்) என்னும் தோஷமில்லை.

16. वस् (வஸ்) என்னும் வினைப்பகுதியானது ऋहलोर्ण्यत् என்னும் (பாணினி 3 - 1 - 121) சூத்திரத்தின்படி य (ய) என்னும் விகுதியோடு சேருங்கால், ஈற்றயல் அகரம் ஆகாரமாகி (வாஸ்யம்) என உருக்கொண்டது. சகலஜகத்தும் உண்மையில் ஈசுவர வடிவாயிருந்தும் பிராந்தியினால் அநீசுவர வடிவாய் அறியப்படுகின்றது. "அவைமுழுவதும் ஈசுவரனே, ஆத்மாவே" என்னும் ஞானத்தால் மறைக்கவேண்டு மென்பது "எல்லாவற்றின் ஆத்மாவாகிய ஈசுவரன் யான்" என்று அறியவேண்டு மென்பதாம். சாந்தோக்கிய உபநிஷத்தின் தத்துவமஸி என்னும் மகாவாக்கியம் போல இதுவும் தத்துவோபதேசமாம்.

ச:—சந்தனம் [17] அகில்முதலியவற்றிற்கு நீர்முதலியவற்றின் சம்பந்தத்தால் உண்டாகும் ஈரத்தாலாகிய உபாதியினுலாக்கப்பட்டமித்தையான துர்க்கந்தமானது அதன் (சந்தனுதியின்) சொரூபத்தைத் தேய்த்தலாலுண்டாகுந் தனது சுபாவமான கந்தத்தால் மறைக்கப்

---

வி:—जगत् = ஸ்வரூபத்திலாவது [18], ஸ்வபாவத்திலாவது [19], வேறுபாட்டை அடைவதானபொருள் எல்லாம். போக்தா என்று சொல்லப்பட்ட ஜீவனுடைய உருவம் மாறுதாயினும் ஞானம், ஆநந்தம் முதலிய குணங்கள் பிரகிருத சம்பந்தத்திற்குத் தக்கபடி மாறும். போக்கியமாகிய ஜடத்தின் உருவமே மாறுகிறது.

यत्किञ्च = ஈசுவர வியாப்தியில்லாதபொருள் [ஒன்றுமில்லை என்று உறுதிப்படுத்துவதற்காக यत्किञ्च எதெதுண்டோ அஃதெல்லாம் என்று கூறப்பட்டது.

ईशा ...जगत् = உலகங்களில் அனுபவிக்கக்கூடிய வஸ்துக்கள், அனுபவிக்கிற ஜீவர்கள் இவைகள் ரூபமாயுள்ள எந்த ஜகத்துண்டோ அஃது எல்லாம் வாசுதேவனுல் வியாபிக்கத்தகுந்தது, தரிக்கத் தகுந்தது.

(1) इन्द्रियाणि मनोबुद्धिस्सत्वं तेजोबलंधृतिः ।
वासुदेवात्मकान्याहु: क्षेत्रं क्षेत्रज्ञमेवच ॥

ஞானேந்திரியங்கள், கர்மேந்திரியங்கள், மனது, புத்தி (ஞானம்), சத்வகுணம், சௌரியம் (பராக்கிரமம்), தேகபலம், மனோதைரியம், சரீரம், ஆத்மா (ஜீவன்) ஆகிய இவைகள் வாசுதேவாத்மகம், அதாவது, வாசுதேவன் எல்லாவற்றிலும் வியாபித்தும், வாசுதேவனிடத்தில் எல்லாம் இருந்துகொண்டும் இருக்கின்றன என்று சொல்லுகிறுர்கள் (விஷ்ணு சஹஸ்ரநாமம்).

(2) पृथ गात्मानं प्रेरितारञ्चमत्वा (தன்னையும் தன்னை ஏவுகிறவனை ஈசுவரனையும் வேருகநினைந்து) श्वेत I - 6.

---

து:—इदं सर्वं (आश्रितं)=இந்த சமஸ்த ஜகத்தும் ஆசிரதமாயிருக்கிறதென்பது आकाशएवैतदोतञ्चप्रोतञ्च (ஆகாசத்திலேயேஅது கோர்க்கப்பட்டிருக்கிறது) என்னும்சுருதியிலும்இதர சுருதிகளிலும்சொல்லப்பட்டிருக்கிறது. இலக்ஷ்மியும் ஈசுவராதீனமானதாலும் ஸ்வதந்திரமற்றவள். ஆகையாலும் ஜகத்து எல்லாம் அஸ்வாதந்திரம். பரமேசுவனே ஸ்வதந்திரன், இக்காரணத்தால்,

---

17. எவனுக்கு ஆசாரியன் உபதேசத்தாற் றேன்றிய ஞானமாத்திரத்தினுல் மித்தியா திருஷ்டி (பொய்யுணர்வு) நீங்கவில்லையோ, அவனது மித்தியா திருஷ்டியானது விசாரமுதலிய பிரயத்தினத்தால் (முயற்சியினுல்) பரமாத்ம ஐக்கியமாகிய தத்துவத்தின் அபரோக்ஷ முண்டாகவே நிவிர்த்தியாகின்றது என்னும் அபிப்பிராயமாக இங்கே சந்தன முதலியவற்றின் துர்க்கந்த திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றுர்.

18. ஸ்வரூபம் என்பது ஒன்றின் உருவத்தைச் சொல்லுகிறது.
19. ஸ்வபாவம் என்பது ஒன்றின் தன்மையைச் சொல்லுகிறது.

ச:—படுகின்றது. அதுபோலவே [20] தனது ஆத்மாவிற் (சொரூபத்தில்) கற்பிக்கப்பட்ட சுவாபாவிக (அவித்தையின் காரிய)மான கர்த்திருத்துவ போக்திருத்துவ முதலிய துவைத ரூபமான நாமரூப கர்மமெனப்படும விகாரக்கூட்டமாகிய சகல ஜகத்தும் பரமார்த்த சத்தியமான ஆத்மாவின் பாவனையினுல் தியாகஞ்செய்யவிடப்பட்டதாகின்றது. இவ்வாறு [21] ஈசுவரவடிவமான ஆத்மாவின் பாவனையோடு கூடிய புருஷனுக்குப் புத்திரேஷணை, வித்தேஷணை, உலகவேஷணை யென்னும் மூன்றேஷணைகளின் சந்நியாசத்தில் அதிகாரமாம்; கர்மத்தில் அதிகாரமன்று.

---

வி:—(3) ज्ञाज्ञौद्वावजावीशनीशौ (இருவர்கள் பிறப்பற்றவர்கள். அவர்களுக்குள் ஒருவன் சர்வஞ்ஞன், மற்றொருவன் கிஞ்சிஞ்ஞன். ஒருவன் ஈசுவான் (எல்லாவற்றையும் நடத்தவல்லவன்), மற்றொருவன் அநீசுவரன். (ஶ்வே 1 - 9)

(4) नित्योनित्यानां चेतनश्चेतनानां एको बहूनां योविदधाति कामान्, (ஜீவர்களைவிட நித்தியன், சேதனங்களுக்கு சேதனன், ஒருவனுக இருந்து அநேகர்களுக்கு இஷ்டமானவைகளைச் செய்கிறவன். (कट II - 2 - 13)

இந்த வாக்கியங்களில் ஏற்படும் ஜீவனுக்கும் ஈசுவரனுக்கும் ஏவப்படுகிறவன், ஏவுகிறவன் என்னும் முதலிய அத்தியந்தபேதம் இந்த மந்திரத்திலும் ஏற்படுகிறது.

---

20. சந்தன முதலியவற்றிற்கு நீர் முதலியவற்றின் சம்பந்தத்தால் உண்டாகும் ஈரமுதலியவற்ருலாகிய துர்க்கந்த மெதுவோ அது நீர்முதலியவற்றின் உபாதியினு லாக்கப்பட்ட மித்தையா யிருத்தலால், அதன் சொரூபத்தைத் தேய்த்தலால் வெளிப்படும் இயற்கைவாசனையால் திரஸ்கார(நீக்க)த்தை யடைகின்றது. விசாரமுதலிய பிரயத்தினமாகிய தேய்ப்பால் பிரகடமாகிய ஆத்மாவின் சுவாபாவிகமான (பரமார்த்த சத்தியமான) நிஜசொரூபத்தின் நிச்சயத்தால் கற்பிதமும் சுவாபாவிகமுமான கர்த்திருபோக்திருத்துவத்தின் பாவனையாகிய மித்தியாபுத்தி (விபரீதஞானம்) திரஸ்காரமாகின்றது. இங்கே சுபாவமென்பது, அநாதியவித்தை, அதன் காரியமாகிய கர்த்திருத்துவம் போக்திருத்துவ முதலிய பிரபஞ்சம் சுவாபாவிகமெனப்படும். இவை முதலாகிய பிரபஞ்சத்தின் விசேஷங்கள் எவையோ, அவையதன் பாதமாகத்தக்க தன்மையைக் காட்டுதற் பொருட்டா மென்னும் அபிப்பிராயமாக இனிக்கூறுகின்ருர்.

21. இவ்வாறு விசாரமுதலிய பிரயத்தினமுடைய புருஷனுக்கு 'இது மித்தியா திருஷ்டியாம்' என்னும் நிச்சயத்தைச் சொல்லி, (இனியுக்தியை அறிகின்றவனும், "எல்லாவற்றையு மறியும் ஈசுவரன்யானே" என்னும் பாவனையிலும் விசாரத்திலும் அதிகார முள்ளவனுமாகிய யுக்தி சாமர்த்தியமுள்ள புருடனுக்குச் சர்வகர்மங்களையும் விடுதலின் கண்ணே யதிகாரமாமென்று சொல்லக் கருதியதாம் இம்மந்திரம். ஏனெனின், 'तेनत्यक्ते அந்தத்தியாகத்தினுல்' என்னும் பிற்பாதியிலுள்ள சுட்டுவாக்கியத்தால் முன்னர் தியாகம் கருதப்படுதலாலும், 'எதனுல் தியாகஞ் செய்பவர்களால் அந்தப்பிரமம் அறியத்தக்கதோ, அதனுல் தியாகஞ் செய்பவர்களுக்கு எவற்றிற்கு முள்ளீடாகிய பரமபதம் கிடைக்கின்றது' என்று வேறிடத்திலுஞ் சொல்லுதலாலும், அன்றியும் தியாகஞ்செய்யத்தக்க புத்திராதிகளின் மூவேடணையும் சித்தவிக்ஷேபத்திற்கு கேதுவாதல் பிரசித்தமாதலாலும் என்க என்னும் அபிப்பிராயமாகக் கூறுகின்ருர்.

ச:-तेन त्यक्तेनभुञ्जीथा :—அந்த[22]த்தியாகத்தினுல்[23] ஆத்மாவை இரக்ஷி.[24]

வி:—तेन (அ - கை):— இந்தப்பிரகாரம் மோக்ஷ இச்சையுள்ளவனுக்கு சகலமும் ஈசுவரபரதந்திரம் என்னும் ஞானத்தை உண்டுபண்ணி இனி வைராக்கியத்தால் சிறந்த விர்த்தியை உபதேசிக்கிறுர்.

तेन ஈசுவரன் வாஸ்தவத்தில் நிரதிசயமான போக்கியனுயிருக்க ஜகத்துத்தான் நிரதிசய போக்கியம் என்கிற பிரமைக்கு விஷயமான

त्यक्तेन (1) அற்பத்தன்மை, சிறியதாயிருத்தல், (2) நிலையற்றதாயிருத்தல், (3) துக்ககாரணமாயிருத்தல், (4) துக்கத்துடன் சேர்ந்திருத்தல், (5) துக்க முடிவாயிருத்தல், (6) தேகமே ஆத்மா என்னும் அபிமானத்தால் உண்டாயிருத்தல், (7) இயற்கையா யிருக்கிற பிரம்மானுபவத்திற்கு விரோதமாயிருத்தல், ஆகிய இவ்வேழும் விஷயதோஷங்களாம். இவைகளை நிரூபிப்பதினுல் தோஷதிர்ஷ்டி உண்டாகி ஜகத்துமனதினுல் விடுபடுகிறது. ஆகவே त्यक्तेन - தோஷதிருஷ்டியுடன் ஜகத்தோடு சேர்ந்து

भुञ्जीथा: (1) பகவானுடைய உபாசனைக்கு உபயோகமான தேகத்தைத் தரித்தலுக்கு மட்டும் உபயோகமான அன்னபானுதிகளையும், யாகம், தானம், ஹோமம், அர்ச்சனை, முதலியவைகளுக்கு உபயோகமாகும் சேவகர்கள், திரவியம், முதலியவைகளையும் பூஜிக்கவேண்டும். (வேறு அர்த்தம்) (2) மேற்சொன்ன 7 தோஷங்களால் விடப்பட்டிருக்கிறதும், போக்கியம்போல் தோன்றுகிறதுமான ஜகத்துடன் சேர்ந்து இந்த தோஷங்களற்றவனுயும், அளவற்ற போக்கியனுயுமிருக்கிற மேற்சொல்லிய ஈசுவரனையும் அவருடைய கல்யாணகுண விசேஷங்களையும் இனி சொல்லும் பிரகாரம் புஜி. अस्यमहिमानं इति वीतशोकः (मुं III - 1 - 2) என்கிற வாக்கியத்தில் மஹிமையை அடைகிறவன் என்கிற அர்த்தத்தால் மஹிமை போக்கியம் என்று அர்த்தமாகிறது. (इति = एति) அடைகிறுன்.

து:—तेन=ஈசுவரனுல்

त्यक्तेन=கொடுக்கப்படும்

(वित्तेन=தனத்தால், அதாவது, தற்செயலாய்க் கிடைக்கும் தனத்தால்.)

भुञ्जीथा:=போகத்தை அனுபவிக்கவேண்டும்.

22. இனி முன்சொல்லப்பட்ட பிரபஞ்சத்தின் தியாகமாகிய சந்நியாசத்தைத் துதிக்கின்றுர்.

23. இங்கே தியாகத்தினுல் (விடுதலால்=சந்நியாசத்தினுல்) என்று பொருள் செய்யாது, நீக்கிவிடுதலால் என்று பொருள் செய்யின், நீக்கப்பட்ட புத்திரனுயினும் அல்லது இறந்துபோன வேலைக்காரனுயினும் தன்னை யிரக்ஷிக்கவேண்டும். அவர்களோ என்றும் இரக்ஷிக்கிறதில்லை ; அவர்களுக்குந் தனக்குஞ் சம்பந்தமே யில்லாமையால்.

24. இந்தத்தியாகம் நிஷ்கிரியமான ஆத்மசொரூபமாக நிலைத்தலில் அநுகூலமாயிருத்தலால், இந்தத்தியாகத்தினுல் ஆத்மா இரக்ஷிக்கப்படுகின்றது.

ச:—मागृध...धनं—இவ்வாறு[25] ஊடணையும் விட்ட நீ (தனது அன்னியனது வென்னும்) ஒருவனுடைய [26] தனத்தையும் இச்சியாதே. (மற்றோர் பொருள்) அல்லது இச்சியாதே; யாருடைய தனம்? ஒருவனது மன்றெனின் விரும்புவது எதை? ஆத்மாவே யாவுமா மென்னும் ஈசுவர பாவனையால் எல்லாம் விடப்பட்டிருக்கின்றது. எதனுல் இவ்வெல்லாம் ஆத்மாவினதாகவும் [27], ஆத்மாவே [28] இவ்வெல்லாமுமாகவு மிருக்கின்றதோ, அதனுல் மித்தையாகிய வஸ்துவில் (பொய்ப்பொருளில்) இச்சைவைக்காதே யென்பது பொருள். ॥ I ॥

---

வி:—कस्यश्चित् - எவனுடையதும், பந்து ஜனங்களுடைதானுலும் இதர ஜனங்களுடையதானுலும்

धनं தனத்தை, பொருளை

मागृधः இச்சிக்காதே.

எவன் மதிலலங்கி அயலார் பொருளை அபகரிப்பதும், ஜந்துக்களைக் கொல்வதும், அயலாரின் ஐசுவரியத்தைக்கண்டு பொறாமைப்படுவதும், பெரியோர்களை நிந்திப்பதும், இப்படிச்செய்துவருகிறானே, அவன் அயோக்கியன். எவன் ஆப்தசிநேகிதன், தன்பந்து, தன் பாரியை, தந்தை, தாய், வேலைக்காரர்கள், இவர்களிடத்திலுங்கூட கபட புத்தியோடு பொருளாசையை அடைகிறானே அவன் புருஷபசு (மானிட வடிவும், மிருகத்தன்மையு முள்ளவன்) என்றும் வாசுதேவ னிடத்தில் பக்தி யில்லாதவன் என்றும் யமதர்ம ராஜாவின் சேவகனுக்கு விஷ்ணு புராணத்தில் 3-வது அம்சத்தில் (हराति முதலான சுலோகத்தால்) சொல்லியிருக்கிறார்.

---

து:—कस्यस्वित्=அரசன்முதல் எவனிடமிருந்தும்

धन=தனத்தை

मागृधः=இச்சிக்கவேண்டாம். ஈசுவரனைத்தவிர வேறு ஒருவனும் ஸ்வதந்திரனுக இராதபடியால் வேறு ஒருவனும் யாதொன்றையும் கொடுக்கச் சமர்த்தனுகமாட்டான். ஆகவே ஈசுவரன் கொடுப்பதினுலேயே சந்துஷ்டி யடையவேண்டும்.

---

25. சந்நியாசியின் சரீரநிருவாகத்திற்கு உபயோகமானவை கீளும் கோவணமும் பிச்சையன்னமுமாம். இவற்றிற்கு அந்நியமான பதார்த்தங்களைக் கிரகிப்பதற்கு யாதேனும் ஓர்வகையாக இச்சையுண்டாகுமாயின் அப்போது அந்த இச்சைதத்துவ ஞானத்திற்கு முக்கிய விரோதியாயிருத்தலால் அதைத்தடுக்க முயற்சி செய்யவேண்டும் என்னும் அபிப்பிராயமாக சந்நியாசியை நோக்கித் தனத்தை யிச்சியாதே யென்னும் நியமவிதியைக் கூறுகின்றார்.

26. மூலத்திலிருக்கிற स्वित् என்னும் பதத்திற்கு சாதாரணமாய் விதர்க்கார்த்தமானுலும் (ஐயப்பொருளானுலும்) இவ்விடத்தில் யாதொரு அர்த்தமுமில்லை.

27. ஜடவஸ்துக்கள் சேதனுதீனமா யிருத்தலால் வியவகார திருஷ்டியாக இவ்வெல்லாப் பிரபஞ்சமும் ஆத்மாவினுல் புசிக்கப்பட்டதாம். ஆதலால் புசிக்கப்பட்ட (கிடைத்த) விஷயத்தில் இச்சையுண்டாதல் சந்நியாசிக்குத் தகுதியன்றென்பது அபிப்பிராயம்.

28. பரமார்த்தமாகப் பார்க்குங்கால் ஆத்மாவே யெல்லாமாய் இருத்தலால் இச்சைக்கு விஷயம் ஒன்றுமேயில்லை யென்பது தாற்பரியம்.

2. कुर्वन्नेवेह कर्माणि जिजीविषेच्छतꣳसमाः।
एवं त्वयि नान्यथेतोऽस्ति न कर्म लिप्यते नरे॥

इह = இந்த லோகத்தில்
कर्माणि = அக்கினி ஹோத்திர முதலிய கர்மங்களை
कुर्वन् एव = செய்து கொண்டே
शतं = நூறு
समाः = வருஷம்
जिजीविषेत् = ஜீவித்திருக்க இச்சிக்கக்கடவன்.
एवं = இப்படி (விரும்புகிற)
नरे = மனிதனாகிய
त्वयि = உனக்கு
इतः = இந்த அக்கினி ஹோத்திர முதலிய கர்மங்களைச் செய்வதைப்பார்க்கிலும்
(येन प्रकारेण) = (எந்தவகையால்)
कर्म = கர்மம்
न लिप्यते = பந்தப்படுத்த மாட்டாதோ (அப்படிப்பட்ட)
अन्यथा = வேறு வகை
न अस्ति = இல்லை.

---

வி:—नकांक्षेविजयंकृष्ण என்னும் இடத்தில் (கீதை, 1-32) எல்லாவஸ்துக்களினிடத்திலும் வைராக்கியம் சொல்லப்பட்டிருக்கிறது. இவ்விடத்திற் சொல்லிய பொருளாசையின்மை பரமாத்மாவுக்கு வேறான சகல விஷயங்களிலும் வைராக்கியத்தைக்குறிப்பிடுகிறது. இதற்குப் பிரமாணம்:—

परमात्मनियोरक्तो विरक्तो अपरमात्मनि

(பரமாத்மாவினிடத்தில் ஆசக்தி யுள்ளவன் பரமாத்மாவுக்கு வேறான வஸ்துக்களிடத்தில் வைராக்கியம் அடைகிறான். ॥ I ॥

---

து:—இந்த மந்திரார்த்தத்தையே அடியிற்கண்ட ஸ்மிருதிவசனம் சொல்லுகின்றது:

स्वतः प्रवृत्यशक्तत्वादीशावास्यमिदंजगत्।
प्रवृत्तयेप्रकृतिगं यस्मात्सप्रकृतीश्वरः।
तदाधीनप्रवृत्ति स्यात्तदीयं सर्वमेवतत्।
तद्दत्तेनैवभुंजीथा अतोनान्यंप्रयाचयेत्॥
(इतिब्रह्मांडे)॥ I ॥

ச:—அவதாரிகை:—இவ்வாறு 29 ஆத்மஞானியானவன் புத்திரன், தனம், உத்தமலோகம் என்னும் இம்மூன்றின் இச்சையைத் தியாகஞ்செய்து, ஆத்ம ஞானநிஷ்டையிலிருந்துகொண்டு ஆத்மாவை இரக்ஷிக்கவேண்டும் என்னும் இவ்வேதத்தின் அர்த்தம் முதல் மந்திரத்திற் சொல்லப்பட்டது. எவனுக்கு ஆத்மஞான மின்மையால் ஆத்மாவே இந்த சகலஜகத்துமாம் என்று பாவிக்கச் சாமர்த்தியமில்லையோ அவனுக்குச் (சித்தசுத்தியின் பொருட்டு) இந்த மந்திரம் கர்மத்தை உபதேசிக்கின்றது.

कुर्वन्...समा:—புருஷனுக்குப் பரமாயுள் நூறு வருஷமாதலால்,

---

வி:—அ-கை:—இந்தப்பிரகாரம் வைராக்கியத்தை அடைந்த புருஷன் பிரம்மவித்தைக்குச் சாதனமாயிருக்கும் கர்மங்களை பலாபேக்ஷையின்றியில் ஜீவித்திருக்கும் வரையில் செய்யவேண்டியது என்பதை இனி சொல்லுகிறார்.

शतंसम: = நூறு வருஷங்களை, தன் ஆயிசுவரையில். ஆயுளளவின் பெரும் பான்மையைப் பற்றி நூறு என்று குறிப்பிடப்பட்டது.

कर्माणि= நித்திய (நிச்சயமாய் நிமித்தம் ஏற்பட்டுள்ள தர்சசிராத்தம் முதலிய) நைமித்திக (நிமித்தம் ஏற்பட்டாற் செய்யவேண்டிய கிரகண சிராத்தம் முதலிய) கர்மங்களை

कुर्वन् एव = செய்துகொண்டே, வித்தைக்கு அங்கமான கர்மத்தை பிரமஞானியும் விடாமல் செய்யவேண்டும் என்பதை एव பதம் கூறுகிறது.

इह= இந்த லோகத்தில்.

जिजीविषेत्= ஜீவிக்க இச்சிக்கவேண்டும். பிரமோபாசகனுக்கு

---

து:—அ-கை:—ஞானத்தை இச்சிக்கிறவன் விஷயத்தில் இச்சையை விட்டுவிட வேண்டியதுபோல், தனக்கு யோக்கியமான கர்மத்தையும் செய்யவேண்டியது அவசியம் என்று இந்த மந்திரம் விதிக்கின்றது.

शतंसमा: = நூறு வருஷங்கள்

इह = இந்த மானிட ஜன்மத்தில்

(यावत्) जिजीविषेत् = எவ்வளவுகாலம் ஜீவிக்க இச்சிக்கிறானோ,

(तावत्) = (அதுவரையில்), அதாவது, ஜீவித்திருக்கும் வரையில்

कर्माणि = கர்மங்களை, அதாவது, பலத்தை இச்சிக்காமல் பகவானுடைய பூஜாரூபமானதும் தன்னுடைய வர்ணாச்சிரமங்களுக்கு யோக்கியமானதுமான கர்மங்களை எப்போதும்

कुर्वन् एव = செய்துகொண்டே இருக்கவேண்டும்.

---

29. முதல் மந்திரத்தின் முற்பாதியால் தத்துவம் உபதேசிக்கப்பட்டது. அதன் மூன்றாவது பாதத்தால் பக்குவமின்றிய ஞானிகளுக்கு ஞான விசாரத்திலுபயோகமுள்ள நிவிர்த்திக்குச் சாதனமாகிய சன்னியாசத்தின் விதிசொல்லப்பட்டது. அதன் நான்காவது பாதத்தால் சன்னியாசியின் நியமவிதி சொல்லப்பட்டது. இவ்வாறு முதல் மந்திரத்திற்குப் பதம் பதமாக வியாக்கியானஞ்செய்து, இனி இரண்டாவது மந்திரத்தோடு முதல் மந்திரத்திற்குள்ள சம்பந்தத்தைச் சொல்லும் விருப்பத்தினால் ஆசாரியர் முதல் மந்திரத்தின் அர்த்தத்தைச் சுருக்கமாக அநுவதிக்கின்றார்.

ச:—கிரமப்படி கிடைத்த ஆயுள் அனுவாதத்தால், எவன் நூறுவருஷம் ஜீவித்திருக்க இச்சிக்கின்றனோ அவன் அக்கினிஹோத்திரமுதலிய கர்மங்களைச் செய்துகொண்டே இச்சிக்கக்கடவன் என்று விதிக்கப்படுகின்றது.

एव...नरे—இவ்வாறு ஜீவித்திருக்க இச்சிக்கும் நரமாத்திராபிமானியாகிய உனக்கு எவ்வகையால் அசுபகர்மம் பற்றமாட்டாதோ, அப்படிப்பட்ட நிகழும் இந்த அக்கினி ஹோத்திராதிகளைச் செய்யும் வகையைவிட வேறு வகையில்லை. ஆகையால் புருஷன் சாஸ்திரத்தில் விதிக்கப்பட்ட அக்கினிஹோத்திராதி கர்மங்களைச் செய்துக் கொண்டே ஜீவித்திருக்க விரும்பக்கடவன்.

---

வி:—பிரமவித்தை நிறைவேறும்வரையில் ஜீவிக்கவேண்டும் என்கிற இச்சையிருக்குமாதலால், ஒருவன் ஜீவித்திருக்கக்கூடிய 100-வருஷவரையிலும் கர்மங்களைச் செய்துகொண்டே இருக்கவேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஞான யோகத்தில அதிகாரமுள்ளவரையிலும் கர்ம யோகத்தில் அதிகாரமுண்டென்பது கருத்து. கர்மயோகம் என்றால்:—பகவத்கீதை 4-வது அத்தியாயத்திற் சொல்லிய பலவித யஞ்ஞங்களில் தனக்கிஷ்டமானதை ஸ்வீகரித்து, நித்திய நைமித்திக கர்மங்களை அதற்குச் சாதகமாக வைத்துக்கொண்டு பற்றுதலன்றியில் செய்யப்படும் கர்மானுஷ்டானம்.

त्वयि := தான் ஸ்வதந்திரனாயிராமல் ஈசுவரனுக்கு அடங்கியிருப்பதால் அவனுடைய ஆஞ்ஞையை பரிபாலனம் செய்கிறதாகிய கர்மானுஷ்டானத்தில் பூர்ணமான அதிகாரம் பெற்ற உன்னிடத்தில்.

एवं := இப்படியே - அனுஷ்டிக்கத்தகாதவை என்று கருத்து.

नान्यथा := (அ - கை) சொன்னதை உறுதிப்படுத்தும் பொருட்டு இதைவிட வேறில்லை என்றும் விலக்காகவும் சொல்லுகிறார்.

---

து:—(कुतः) = (ஏனெனின்)

एवं = இப்படி கர்மத்தைச்செய்கிற

नरे = மனுஷிய மாத்திரனாயினும்

त्वयि = உன்னிடத்தில்.

कर्म = பாபம்

नलिप्यते = ஒட்டுகிறதில்லை. பலாபேக்ஷையன்றியில் தனக்கு உசிதமான கர்மங்களால் பகவானுடைய பூஜையைச் செய்கிற அல்பாதிகாரியையுங்கூட முன்பின் பாபங்கள் பாதிக்கமாட்டா. ஆகையால் அவன் ஞானதிகாரி ஆகிறான்

इत: = கர்மத்தைச் செய்கிறதைவிட.

अन्यथा = வேறுவிதம்அதாவது காமத்தைச்செய்யாமலிருப்பதில்

कर्म = பாபம்

ச:—[ முதல் மந்திரத்தினுல் ஞானம எவனுக்கு விதிக்கப்பட்டதோ அவனுக்கே இந்த மந்திரத்தாற் கர்மம் விதிக்கப்பட்டது. ஆகையால் இவ்விரண்டுமந்திரங்கட்கும் சமுச்சயத்தின் (ஞானகர்மங்களின் கலப்பின்) தாற்பரியமா மென்று ஏகதேசி சங்கை யெழுப்புகின்றுன்]

---

வி:—इतः = மேற் சொன்ன கர்மானுஷ்டானத்தை விட
अन्यथा = வேறு, அதாவது, கர்மத்தைச் செய்யாமலிருப்பது
न अस्ति = இல்லை - கிடையாது.

नकर्म = (அ - தை):—பிரமஞானி கூட கர்மானுஷ்டானம் செய்யவேணும் என்னும் பக்ஷத்தில், கர்மத்தால் பந்தம் வரமாட்டாதோ எனில் சமாதானம் சொல்லுகிறுர்.

नरे = வித்தைக்கு விருத்தமான கர்மபலன்களில் இச்சையில்லாத பிரமஞானியிடத்தில்.

कर्म = வித்தைக்குச் சாதகமான கர்மயோகம்.

---

து:—नलिप्यते इति न अस्ति = ஒட்டுகிறதில்லை என்பது இல்லை. ஆனுல்பாபம் அவசியம் ஒட்டுகிறது. பகவத்பூஜை செய்யாதவனை பாபங்கள் பாதிக்கின்றன. ஆகையால் அசுத்த சித்தமுள்ள அவன் ஞானுதிகாரியாகமாட்டான். ஆகையால் கர்மங்களைச் செய்யவேண்டியது. புருஷார்த்தாதி கரணத்தில் नियमाच्च என்கிற சூத்திரத்தின் பாஷ்யம் முதலியதில் மனிதன் ஞானியாயிருந்தாலும் கர்மம் ஒட்டுகிறதில்லை என்பது இல்லை என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆகவே அபரோக்ஷ ஞானியானுலும் கர்மத்தைச் செய்யாவிடின், முக்தி திசையில் ஆநந்தக்குறைவாகிய பாபகர்மம் ஒட்டிக்கொண்டே இருக்கும். ஆகையால் ஞானிபரமாய் இந்த மந்திரம வியாக்கியானம் செய்யப்பட்டது.

இந்த இரண்டு மந்திரங்களுக்குச் சிலர் அடியில் வருமாறு அர்த்தம் செய்கிறுர்கள் :—(1) ஞானிகளுக்கு சர்வ கர்மத்தியாகம் முதல் மந்திரத்தால் விதிக்கப்பட்டிருக்கிறது. ஈசுவரனுல் இந்த ஜகத்து எல்லாம் மறைக்கத்தகுந்ததாயிருக்கிறது. அக்காரணத்தால் त्यक्तेन சர்வ கர்மத்தியாகத்துடன் भुंजीथा: பாலனம்செய். இச்சையைத் தியாகம்செய்த நீ ஒருவனுடைய தனத்தையும் இச்சிக்கவேண்டாம். ஆகையால் மித்தையான விஷயங்களில் புத்தியைச் செலுத்தவேண்டாம். (2) அற்பஞான முடையவனுக்கு இரண்டாவது மந்திரத்தால் கர்மம் சொல்லப்பட்டிருக்கிறது. இது பொருந்தாது. ஏனெனின், அஞ்ஞானிக்குப்போல் ஞானிக்கும் பகவத் பூஜாத்மகமான கர்மத்தைச் செய்யாவிடின் பாபம சம்பவிக்கிறது. ஆகையால் இருவரும் கர்மத்தைச் செய்ய வேண்டும். இதற்கு அடியில்கண்ட ஸ்மிருதி பிரமாணம் :—

ச.—சங்கை :—முன் 30 மந்திரத்தில் சந்நியாசிக்கு ஞானநிஷ்டை சொல்லப்பட்டது. இரண்டாவது மந்திரத்தில் அதிற் சாமர்த்திய மற்றவனுக்குக் கர்மநிஷ்டை சொல்லப்படுகின்றது. இது எதனால் அறியப்படுகின்றது.

---

30. இங்கே எந்த அதிகாரிக்கு முன் மந்திரத்தினால் ஞானம் சொல்லப்பட்டதோ அவனுக்கே இரண்டாவது மந்திரத்தினால் கர்மஞ் சொல்லப்பட்டது. ஆதலால் இவ்விரண்டு மந்திரங்களுக்கும் சமுச்சயானுஷ்டானத்தில் தாற்பரிய மாமென்னும் அபிப்பிராயமாக வேதாந்தத்தின் ஏகதேசத்தை அங்கீகரிக்கின்ற பிராசீன விருத்திக்காரராகிய **பிரபஞ்ச பர்த்திருஹரி** யென்னும் ஏகதேசியின் மதச்சங்கையை வெளிப்படுத்துகின்றார் :—

**சங்கை** :—சுத்தப்பிரம்ம ஞானத்திற்கும் கர்மத்திற்கும் விரோத மிராதலின் அவற்றில் ஒரு புருஷனுக்கு கிரமமன்றி, (ஒரே காலத்தில்) அதிகார மிருத்தல் விரோதம் ஆதலால் இருதுகாலத்தில் மனைவியைப் புணர்தலும் திருதண்டியின் தர்மத்தை யாசரித்தலுமாகிய இரண்டிலும் ஒருவனுக்கே கிரமமாக அதிகாரமிருத்தல் போல இங்கும் கிரமமாக ஒருவனுக்கு அதிகார முண்டாகு மெனின்.

**சமாதானம்** :—அது பொருந்தாது. ஏனெனின் அங்கே கிரகஸ்தத் தன்மை திருதண்டித்தன்மைகளால் பேதமிருத்தலால் கிரமமாக ஒருவனுக்கு அதிகாரம் சம்பவிக்கும். இங்கே சுத்தத்தன்மை முதலியனவும் கர்த்திருத்துவ முதலியனவுமாகிய விசிஷ்ட ரூபத்திற்குப் பேதமில்லாமையால் ஞானம் கர்மம் என்னுமிரண்டிற்கும் கிரமமாகவும் (முதலில் ஞானத்திற்கும் பின் கர்மத்திற்கும்) ஒருவனுக்கு அதிகாரம் சம்பவியாது.

இங்கே ஞானம் கர்மமென்னும் இரண்டும் சாஸ்திர விஹிதமாகலின் சுத்தியில் சமமாம். அதனால் இரண்டற்கும் விரோதமில்லை யெனின், அதுவும் பொருந்தாது. அப்படி யாகுமாயின், இருதுகமனத்திற்கும் திருதண்டி தர்மத்திற்கும் விரோதமில்லை என்னும் பிரசங்க முண்டாம்.

இருதுகமனமும் திருதண்டி தர்மமுமாகிய இரண்டும் ஒருவனுக்குச் சாஸ்திரத்தில் விதிக்கப்பட்டவைக ளன்றெனின், அப்போது அந்த நிஷேதம் ஞானகர்மங்களுக்கும் சமமேயாம். இருதுகமனமும் திருதண்டியின் தர்மமுமாகிய இரண்டற்கும் ஒருகாலத்தில் அனுஷ்டித்தலாகிய சமுச்சயமின்றெனின்,

இப்போது இங்கும் "கர்மத்தினாலும் பிரஜையினாலும் மோக்ஷத்தை அடைகிறதில்லை" "அநேக சத்தங்களைச் சிந்திக்கலாகாது" எனல் முதலிய வாக்கியங்களால் ஞான கர்ம சமுச்சயத்தை நிஷேதித்தல் சமமாம்.

இந்தச் சுருதியிற் கூறிய நிஷேதம் கர்மமாத்திரத்திற்காம்; ஞானத்திற் கன்றெனக் கூறுதல் பொருந்தாது. ஏனெனின், அங்கே மாத்திரம் எனும் பதமில்லை. அன்றியும் இதுவரையில் சமுச்சயத்தின் விதி நிச்சயிக்கப்படவில்லை. ஆதலால் இவ்விரண்டு மந்திரங்களுக்கும் சமுச்சயத்தில் தாற்பரியமின்று என்னும் சங்கை சமாதானங்களின் அபிப்பிராயமாக ஆசாரியர் இது முதல் சமுச்சய வாதியை நோக்கிக் கூறுகின்றார்.

ச:—சமாதானம்:—(I) ஞானகர்மங்கட்கு விரோதம் மலைபோல் அசைக்கப்படாததாக முன் [31] (பூர்வபீடிகையிற்) கூறியிருப்பதை ஏன் நினைக்கின்றிலை.

(II) இங்கும் [32] சொல்லியதாவது:—योहिजिजीविषेत् सकर्मकुर्वन् = எவன் ஜீவித்திருக்க இச்சிக்கிருனே அவன் கர்மத்தைச் செய்து கொண்டே இச்சிக்கக்கடவன்.

ईशावास्यं इदंसर्वं ; तेन त्यक्तेन भुंजीथाः मागृधः कस्यस्विद्धनम्.

---

வி:—नलिप्यते : = ஒட்டமாட்டாது. அதாவது ஸ்வர்க்கம் முதலான பலன்களுக்குக் காரணமாகமாட்டாது. ஆனால் கர்மயோகம் ஞானயோகத்தின் [33] வழியாகவாவது, நேராகவாவது, [34] முதலில் சுத்த ஜீவாத்மக [35] விஷயமான யோகத்தை உண்டுபண்ணி, பிறகு பக்தியோகத்திற்குச் சாதனமாயுள்ள ஜீவஸ்வ [36] ரூபசாக்ஷாத்காரத்தையே உண்டுபண்ணுகிறது என்று கருத்து. [37]

---

31. கர்த்திருத்துவ போக்திருத்துவாதிகளின் அபிமானம் கர்மத்திற்கு ஆசிரயமாம், ஆத்மா அகர்த்தா அபோக்தா என முதலிய ஞானமுண்டாகவே கர்மம் தடைபடும் என்பதாக அவதாரிகையிற் சொல்லப்பட்டிருக்கிறது.

32, இவ்விரண்டு மந்திரங்களின் சப்த சாமர்த்தியத்தினுலும் ஞானத்திற்கும் கர்மத்திற்கும் அதிகாரி வேருமெனச் சித்திக்கிறது. எவனுக்கு ஜீவித்திருக்கவேண்டு மெனுமிச்சை யுண்டோ அந்த இச்சையுள்ள புருஷனுக்குக்கர்மஞ் செய்தற்கு விதிகூறியிருகின்றது. எவனுக்கு "இவ்வெல்லாம் ஈசனே" என்னும் ஞானமுண்டா யிருக்கின்றதோ, அவனுக்குத் தியாகத்தின் அதிகாரம் சொல்லப்பட்டிருக் கின்றது. அன்றியும், தனமுடைய புருஷனுக்கே கர்மத்தில் அதிகாரம் உளதாம் : முதல்மந்திரத்தின் அதிகாரிக்கோ தன இச்சையின் நிஷேதம் செய்யப்பட்டிருக்கின்றது. அதனுல் அவனது கர்மாதிகாரவிலக்கு வெளிப்பட்டது.

33. மனே நிக்கிரகம் செவ்வையாய் ஏற்படாதகாலத்தில் ஜீவஸ்ரூபத்தைத் தியானம்செய்தல் ஞானயோகம்.

34. கேழ்வியின் பேரிலாவது சாஸ்திர விசாரத்தின் பேரிலாவதுஜீவஸ்வரூபத்தை அறிதல்.

35. மனதை வேறு ஒன்றிலும் செலுத்தாமல் சரீரம், இந்திரியம், முதலியவைகளுக்கு வேறுன ஜீவனுடைய ஸ்வரூபத்தில் மனதை நிறுத்துதல் ஜீவாத்மயோகமாம்.

36. ஜீவஸ்வரூபத்தின் பிரத்தியக்ஷ பார்வை.

37. இதில் முக்திசோபானம் (படி) சொல்லப்படுகிறது :—(1) கர்மயோகம் (2) ஞானயோகம் (3) ஜீவாத்மயோகம் (4) ஜீவஸ்வரூபத்தின் சாக்ஷாத் பார்வை. (5) பக்தியோகம், அதாவது, உபாசனை (6) பிரம்மானுபவ மோக்ஷம்.

ச:—(1-மந்தி) :—இவ்வெல்லாம் ஈசுவரனால் மறைக்கத்தக்க தாம். அந்தத்தியாகத்தினால் இரக்ஷணைசெய்; ஒருவனுடைய தனத்தையும் இச்சியாதே.

(III) "ஜீவித்[38] திருத்தலிலேனும் மரணத்திலேனும் இச்சை வைக்கலாகாது; வனத்திற்குப் போகவேண்டும்; அங்கிருந்து (காட்டினின்றும்) மறுபடியும் (கர்மசிரத்தையால் வீட்டிற்கு) வரலாகாது" என்றும் சந்நியாசவிதி இருத்தலாலும ஞானகர்மங்கட்குச் சமுச்சயம் பொருந்தாது.

---

வி:—कूर्वन्नेवह कर्माणि := என்கிற வாக்கியம் அவித்வானைச்சேர்ந்ததே ஒழிய பிர்ம்ம வித்தைச் சேர்ந்ததல்ல. ஏனெனின், பிரம்ம வித்தானவன் விதிநிஷேதசாஸ்திரங்களுக்கு உட்படாதபடியால் அவனுக்கு கர்மாதிகாரம் பிர்ம்ம ஞானமென்னும் அக்கினியால் நாசஞ் செய்யப்படுகிறது என்பது சங்கரவியாக்கியானம். அது இந்த வித்வானைக்குறித்துச் சொல்லும் பிரகிரணத்திற்கு விருத்தம். வித்வானுக்கு கர்மாதிகாரமில்லை என்று சொல்லுவதும் பொருந்தாது. ஏனெனின் विद्याञ्च अविद्याञ्च என்று இனி சொல்லப்போகிற 11 வது மந்திரத்தில் வித்வானுக்கும் கர்மானுஷ்டானம் அவசியம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ॥ 2 ॥

---

து:—अज्ञस्यकर्मलिप्येत कृष्णोपास्तिमकुर्वतः ।
ज्ञानिनोपि यतो ह्रासआनन्दस्यभवेद्ध्रुवम् ।
अतोऽलेपेपिलेपस्यादतः कार्यैवसासदा ।।
(इति नारदीये)

கிருஷ்ணனை உபாசிக்காத அஞ்ஞர்களுக்குப்போல் ஞானிகளுக்கும் பாபம் சம்பவிக்கும். இவர்களுக்கும் ஆநந்தக்குறைவு உண்டாகும். உபாசனை செய்யாததினால் மோஹம் உண்டாகும். மோக்ஷத்தினின்றும் இவர்கள் நழுவாவிட்டாலும் ஆநந்தக்குறைவு உண்டாவதால் கர்மம் ஒட்டுகிறது. ஆகவே இருவர்களுக்கும் கர்மலேபம் உண்டு. ஆனபடியால் இருவர்களும் கிருஷ்ணோபாஸ்தியைச் செய்ய வேண்டும் என்பது கருத்து.

அத்வைதிகள் (1) इशावास्य பதத்திற்கு ஈசுவரனால் ஆச்சாதியம் அதாவது மறைக்கத் தகுந்தது என்று அர்த்தம் செய்கிறார்கள். இது பொருந்தாது. ஏனெனின் (1) இந்த அர்த்தம் கர்மத்தைச் செய்யாத விஷயத்தில் ஹேதுவாக மாட்டாது. (2) அப்படி ஆனால்

---

38. இஃது ஜீவித்திருக்கவேண்டும் என்னும் இச்சை கர்மாதிகாரிக்கேயாம், ஞானாதிகாரிக்கு அன்றென்பதிற்பிரமாணமாம்.

ச:—(IV) இவ்விரண்டின் (ஞானகர்மங்களின்) பலபேதமும் மேற் (இவ்வுப[39] நிஷத்திற்) சொல்லப்படும்.

(V) நாராயண உபநிஷத்திற் சொல்லியிருக்கிறதாவது:—சிருஷ்டிகாலத்திற் பூதசிருஷ்டிக்குப்பின், இரண்டுமார்க்கங்களே பிரவிருத்தித்தன. முன்னர் கர்மமார்க்கமும் பின்னர் சந்நியாசமார்க்கமுமாம். பின்னையதாகிய நிவிருத்திமார்க்கமென்றும் சந்நியாசமார்க்கத்தால் மூவேஷணையும் விடவேண்டும். இவ்விரண்டிலும் சந்நியாசமே அதிசிரேஷ்டமாம்.[40]

---

து:—அஞ்ஞானியும் கர்மத்தைச்செய்யவேண்டியதில்லை என்றுமுடியும். அப்போது அதுமேல் மந்திரார்த்தத்துக்கு விரோதமாகும் (3) ஈசாவாசிய ஞானம் இந்த மந்திரத்தால் குறிப்பிடப்பட்டிருக்கிற தென்று அர்த்தம் செய்வதும் பொருந்தாது. ஏனெனின் ஜகத்து ஈசுவரனால் மறைக்கத்தகுந்தது என்ற ஞானத்தை யுடையவனால் கர்மம் செய்யப்பட வேண்டியதில்லை என்கிற நியமமில்லை. (4) இதனால் அத்வைத ஞானம் குறிப்பிடப்படுகிறதாகச் சொல்லுவதும் பொருந்தாது. ஏனெனின் விரோதமிருக்கிறது. மறைக்கிறவன், மறைக்கப்பட்டபொருள் இரண்டுக்கும் பேதமில்லைஎன்று இதுவரையில் காணப்படவில்லை, (II) உன் மதத்தில் जगत्यां என்பதற்கு பூமிஎன்று அர்த்தம் செய்யாதிருந்தாலும் எல்லாம் ஈசாவாசியம் என்று சொல்லியிருப்பதால் जगत्यां என்பது எல்லாவற்றையும் என்றே இலக்ஷணையாய் குறிப்பிடுவதாகச் சொல்லவேண்டும். இதைவிட பிரகிருதி என்று சொல்லுவதே சிலாக்கியம். ஏனெனின் இந்த அர்த்தத்தில் எல்லாம் அடங்கிப் போகிறது. जगत्यां என்கிற பதத்திற்கு இந்த பக்ஷத்தில் உபயோகமில்லை (III) भुंजीथाः என்பதற்கு பாலனம்செய் என்னும் அர்த்தத்தைச் செய்யக்கூடாது. ஏனெனின் ஆத்மனே பதம் உபயோகிக்கப் பட்டிருக்கிறது. धनं பொய் என்று சொல்லுவதும் பிரத்தியக்ஷ விருத்தம். ॥ 2 ॥

---

39. "कोमोहः कः शोकः एकत्वमनुपश्यतः"

ஆத்ம ஐக்கியத்தை அறிபவனுக்கு சோகமேது? மோஹமேது? என்று இவ்வாறு 7-வது மந்திரத்தில் மூலகாரணத்தோடு அனர்த்தத்தை நீக்குதலாகிய ஞானத்தின் பலமும் 15-16-17-18-வது மாந்திரங்களில் சம்சாரமண்டலத்தின்கண்ணே தேசாந்திரப் பிராப்தியைப்பற்றி யிருத்தலாகிய ஹிரணியகர்பபத பிராப்திமுதலிய கர்மபலமும் சொல்லப்படும்.

40. சன்னியாசம் பரமபுருஷார்த்த மாகியமோக்ஷத்திற்கு அத்தியந்தம் சமீபமிருத்தலால் அதிசிரேஷ்டமாம்.

असुर्या नाम ते लोका अन्धेन तमसाऽऽवृताः ।
ताꣳस्ते प्रेत्याभिगच्छन्ति[41]ये के चात्महनो जनाः[42]॥

ये = எவர்

के = எவர்கள்

आत्महन : = ஆத்மஹத்தி செய்கிற

जनाः = ஜனங்களோ

ते = அவர்கள்

प्रेत्य = இந்தத் தேசத்தை விட்டு

ते[43]=எந்த

लोकाः = ஜன்மங்கள்.

असुर्याःनाम = (அஸு-ராணும் + இமே) அசுரர்களுடையன வாய் (நாமவென்பதற்குப் பொருளில்லை.)

अन्धेन = காடமான, (பார்க்கமுடியாத)

तमसा = அஞ்ஞான இருளால்,

आवृताः = மூடப்பட்டவைகளோ

तान् = அந்த ஜன்மங்களை

अभिगच्छन्ति = அடைகிறார்கள்

---

ச;—(IV) தைத்தரீயத்திற் சந்நியாசமே அதிஸ்ரேஷ்டமென்று சொல்லப்பட்டிருக்கின்றது.

(VII) வேதாசாரியராகிய வியாசபகவானுந் தமது புத்திரராகிய சுகதேவருக்கு விசாரித்து நிச்சயமாகச் சொல்லியிருக்கிற தென்ன வெனில்:—"எதில் வேதங்கள் நிலைத்திருக்கின்றனவோ அப்படிப் பட்ட மார்க்கங்கள் இரண்டாம். ஒன்று பிரவிருத்தி லக்ஷணமுடை யதாம்; மற்றொன்று நிவிருத்திலக்ஷணமாகிய சந்நியாசமாம்" என முதலிய வசனங்கள்.

இவ்விரண்டு மார்க்கங்களின் விபாகத்தை மேற்காட்டுவோம்.॥ 2 ॥

---

41. வாஜஸநேய சம்ஹிதையில் अपिगच्छान्ति என்பதுபாடம்.

42. இந்தமந்திரமே பிருஹதாரண்யத்தில் 4-வது அத்தியாயத்தில் 4-வதுபிராமணத்தில் 11-வது மந்திரமாகவருகிறது. அவ்விடத்தில் असुर्याः பதிலாக आनन्दा என்றும், येकेचात्महनो என்பதற்குபதிலாக अविद्वांसोऽबुद्धो

43. தெ - அது அந்த, என்று அர்த்தமுள்ள தத் சப்தம் இவ்விடத் தில் யத் சப்தார்த்தில் அதாவது எந்த என்கிற அர்த்தத்தில் உபயோகிக் கப்பட்டிருக்கிறது.

ச:—அ-கை:—இப்பொழுது[44] அவித்வான்களுடைய நிந்தையின்பொருட்டு இந்த (மூன்றுவது) மந்திரம் ஆரம்பிக்கப்படுகின்றது.

असुर्याः :—அத்வைத பராமத்ம பாவத்தை உத்தேசித்து தேவதை முதலியோர்களும் அசுரர்களே. அந்த அசுரர்கட்குச் சொந்தமான லோகங்கள் அஸுர்யங்கள்.

लोका. = कर्मफलानिलोक्यन्ते इति लोका: (அதாவது) எவைகளில் சரீரரூப கர்மபலன்கள் பார்க்கப்படுகின்றனவோ அதாவது அனுபவிக்கப்படுகின்றனவோ, அவைகளாகிற அநேகவிதங்களான ஜன்மங்கள்.

---

வி:—அ-கை:—இந்தப்பிரகாரம் முதலிரண்டு மந்திரங்களால் தத்துவ திரயத்தின் ஸ்வரூபமும் வித்தைக்கு அங்கமான (சாதகமான) கர்மானுஷ்டானமும் உபதேசிக்கப்பட்டன. இப்போது, சில அசுரப்பிரகிருதியுள்ளவர்கள் உபதேசிக்கப்பட்ட தத்துவத்திரயத்தை அறியாமல் வேறுவிதமாய் அறிகிறுர்கள்; காமக்குரோத லோப முதலியவைகளுடன் கூடினவர்களாய் சாஸ்திரவிதியைவிட்டு யக்ஞாதிகர்மங்களே அனுஷ்டிக்கிறுர்கள்; நிஷித்தகர்மங்களே ஆசரிக்கிறுர்கள். இவர்கள் எல்லோரும் ஆத்மஹத்தி செய்கிறவர்கள். அவர்களுக்கு நரகானுபவம் அவசியம் உண்டாகிறதென்று ஆசாரியார் உபதேசிக்கிறுர்.

असुर्याः = असुराणां स्वभूताः = அசுரர்களுக்கே ஏற்பட்டவைகள், அல்லது, அசுரஸ்வபாவமுள்ளவைகள்; அசுரஸ்பாவமுள்ளவர்களால் அனுபவிக்கத்தகுந்தவைகள்; இதர தைவஸ்வபாவமுள்ளவர்களால்அனுபவிக்கத்தகாதவைகள் என்று கருத்து. மிக்வும் பயங்கரமானவைகள்.

नाम = பிரசித்தமானவை.

असुर्यानामतेलोका: = அந்தலோகங்கள் மிகவும் பயங்கரமான நரகங்களுடன் கூடியவை என்பது சர்வசாஸ்திரங்களில் பிரசித்தம் என்பது கருத்து.

---

து:—அ-கை :—இவ்விதமாக அதிகார முடைந்தவனுக்கு பரமாத்மதத்துவத்தை அறியவேண்டுமென்னு மிச்சை உண்டாகும்பொருட்டு விபரீதஞான முடைய மனிதனே இந்த மந்திரம் நிந்திக்கிறது.

---

44. முதல் மந்திரத்திற் சொல்லிய அர்த்தத்தை விஸ்தாரமாய்ச் சொல்லும் பொருட்டு முதலில் அஞ்ஞானிகளின் நிந்தை செய்யப்படுகிறது.

ச:— तान्... अभिगच्छन्ति= அஞ்ஞானமாகிற இருளால் மூடப்பட்ட தேவதைகள் முதல் ஸ்தாவரம்வரையிலுள்ள தேகரூப ஜன்மங்களை, இந்த தேகத்தை விட்டு கர்மத்திற்கு[45] த்தக்கபடி சாஸ்திரங்களில் கேட்டிருக்கிற பிரகாரமாக அடைகிறார்கள்.

ये...जना: = எவர்கள் ? என்றால் ;—ஆத்மாவை [46] க் கொல்லுகிறவர்கள். அவர்கள் யார் ? என்றால் ;—அஞ்ஞானிகள். இவர்கள் எப்படி நித்தியமான ஆத்மாவை ஹிம்சிக்கிறார்கள் ? என்

வி:—अन्धेन ... மறுபடியும் அவைகளை வர்ணிக்கிறார்.

अन्धेन = மிகவும் அதிகமான

तमसा = அந்தகாரத்தால், இருட்டால்.

वृता: = வியாபிக்கப்பட்டிருக்கின்றன.

तान् = மிகவும் பயங்கரமாயும், வெளிச்சமென்கிற சங்கதியே இல்லாமலு மிருக்கிற அந்தலோகங்களை

येकेच = தேவஜாதியர்களாவது, மனுஷியஜாதியர்களாவது, இவைகளிலும் பிராமணர்களாவது, க்ஷத்திரியர் முதலானவர்களாவது

து:—असुर्या: = இதற்கு சூரியப்பிரகாசமற்ற என்று அர்த்தம் செய்யக்கூடாது. सुष्टु + रमणं = सुर्यं = நன்றாக இரமித்தல். இதற்கு விருத்தம் असुर्यं = மகா துக்கம். இது எவைகளில் இருக்கிறதோ அவைகள் असुर्या: என்று சொல்லப்படுகின்றன. அவ்விடங்களில் வெகு துக்கமிருப்பதால், அல்லது, தைத்தியர்கள் அவைகளை அடைவதால் அவைகள் அசுர்யா: என்று சொல்லப் படுகின்றன. அசுரர்களால் அடையத்தக்கவை என்று சொன்னதினால் துக்கம் இருக்கிறது என்பதும் சகல விதமான சுகம் இல்லை என்பதும் அறியத்தக்கது. துக்கம் நிறைந்த, சுகமற்ற என்று கருத்து. இப்படிப்பட்டதாயும்,

45. விதிக்கப்பட்ட நல்ல கர்மங்களைச் செய்கிறவன் மேன்மையான தேவ யோனியை அடைகிறான். நிஷேதிக்கப்பட்ட கெட்ட கர்மங்களைச் செய்கிறவன் அதமமான ஸ்தாவர யோனியை அடைகிறான்.

46. தன்னைத்தானே கொல்லுகிறவன் ஆத்மஹத்தி செய்கிறவனாகச் சொல்லப்படுகிறான். ஆகவே, அஞ்ஞானி யானவன் எப்படி ஆத்மஹத்தி செய்வதாகச் சொல்லலா மெனில் :—தன்னைத்தானே கொல்லுகிறவனைப் பற்றி ஆத்மஞான சாஸ்திரத்திற் பிரசங்கமே உண்டாகமாட்டாதாகையால், இவ்விடத்தில் ஆத்மஹத்தி என்னும் பதத்திற்கு அசுத்தத்தை ஆத்மாவினிடத்தில் அஞ்ஞானத்தாற் கற்பித்து ஆத்மாவை மறந்து போகுதல் என்று அர்த்தம் செய்யவேண்டும். ஒரு நல்ல சிஷ்டனிடத்தில் ஒருவன் தோஷத்தைக் கற்பித்தால் கத்தியன்றியில் அவனைக் கொன்றவனாக இவன் சொல்லப்படுகிறான். இதுபோல் ஆத்மாவினிடத்தில் பாபம் முதலியவைகளைக் கற்பிப்பதும் ஆத்மாவின் ஹிம்சையே .

ச:—மூல் :—எப்போதுமிருக்கிற ஆத்மாவை அவித்தையாகிற தோஷத்தினுல் திரஸ்காரஞ் செய்வதினுல் இவர்கள் நித்தியஸ்வரூபமான ஆத்மாவை ஹிம்சிக்கிருர்கள் (இல்லாததுபோல் செய்துவிடுகிருர்கள்). "நான் ஜனனமரணங்களற்றவன்" என்று அறிவதே ஆத்மா இருக்கிருன் என்று அறிந்ததற்கு அடையாளம், பலன். ஒருவன் ஜீவித்திருக்கிருன் என்பதற்கு அடையாளமான சுகதுக்காதிகளின் ஞானம் இறந்துபோனவனிடத்திற் காணப்படாததுபோல், அஞ்ஞானியிடத்திலும் ஆத்மா இருக்கிறதாக அடையாளங் காணப்படவில்லை. ஆகையால் பிராகிருத அஞ்ஞானிகள் ஆத்மாவை கொல்லுகிறவர்களாக உபசாரமாகச் சொல்லப்படுகிருர்கள். இந்த அஞ்ஞானிகள் ஆத்மஹத்திரூபமான தோஷத்தினுல் ஜன்மம் முதலிய சம்சாரத்தை 47 அடைகிருர்கள். ॥ 3 ॥

---

வி:—आत्महनः = असन्नेव सभवति असद्ब्रह्मेति वेदचेत् (तै II-6) (பிரம்மம் அசத் என்று அறிகிறவன் அசத்தாகவே ஆகிருன்) என்றபடி ஆத்மாவை அசத்துக்குச் சமானமாகச் செய்கிறவர்கள். பிர்ம்மஞான மில்லாதவர்களாக கர்மங்களைச்செய்கிறவர்கள் என்று அர்த்தம். இதற்குப்பிரமாணம் :—பிருகதாரணியம் 4-4-11. தன்னுடைய தேகத்தையும் கெடுத்துக்கொண்டு பாபத்தையும் சம்பாதிக்கிறவன் ஆத்மஹத்தி செய்கிறவன்.

ये जनाः = எவர்கள் ஜனனமடைகிருர்களோ, சம்சாரத்திலிருக்கிருர்களோ

ते = அந்த ஆத்மஹத்தி செய்யும் ஜனங்கள்

प्रेत्य = அப்போதிருக்கிற தேகத்தைவிட்டு வெளிக்கிளம்பி

अभिगच्छन्ति = பூமி, அந்தரிக்ஷம், ஸ்வர்க்கம், ரௌரவம் முதலிய நரகலோகங்களை இடைவிடாமல் அடைகிருர்கள். ॥ 3 ॥

---

து:—अन्धेनतमसा = வெகு இருட்டால்

आवृताः = மூடப் பட்டதாயும்

(ये लोकाः) = (எந்த லோகங்கள் இருக்கின்றனவோ)

ते = அவைகள் பிரசித்தமான

लोकाः = லோகங்கள்

येकेच आत्महनः जनाः = அசத்தை யுபாசிப்பதால் யதார்த்தம் மறைபட்டுப் போகிறது. ஆகவே உள்ளபடி ஆத்மாவை (ஹரியை) அறியாமல் விபரீதமாய் அறிகிற ஜனங்கள் எல்லோரும் ஆத்மாவைக் கொல்லுவதாகச் சொல்லப்படுகிருர்கள். எவர்கள், ஜீவ

---

47. ஆத்மஹத்தி செய்கிறவனுக்கு பிராயச்சித்தம் விதிக்கப்படாததினுல், சம்சாரத்தில் விழுதலே பலன்.

अनेजदेकं मनसो जवीयो नैनद्देवा आप्नु[49]वन्पूर्वमर्षत्[50] ।
तद्धावतोऽन्यानत्येति तिष्ठत्तस्मिन्नपो मातरिश्वा दधाति ॥

(सः) = (அந்த ஆத்மா)

अनेजत् — न एजति तत् = தன்னுடைய ஸ்திதியிலிருந்து சலனமடையாதது, அதாவது ஒருகாலும் மாறுமல் ஒரேவிதமாயுள்ளது.

एकं = இரண்டற்றது - பேதமற்றது

मनसः = (ஆனல்) மனதைவிட

जवीयः = அதிக வேகமுள்ளது

एनत् = இதை

து:—ன் நித்திய சுத்த புத்த முக்தஸ்வரூபனை ஆத்மா அல்ல வென்று விவாதப் படுகிறார்களோ அவர்கள் ஆத்ம ஹத்தி செய்கிறவர்கள் என்று சிலர் செய்யும் வியாக்கியானம் பொருந்தாது என்பது கருத்து. ஏனெனின் கீழ்வரும் பிரமாணவாக்கியார்த்தத்துக்கு அது விருத்தமாயிருக்கிறது. ஆத்ம ஹத்தி செய்கிறவர்களில் சிலர் துக்க லோகங்களை அடைகிறார்கள் என்றும் சிலர் அடைகிறதில்லை என்றும் அர்த்தமல்ல. விலக்கு அன்றியில் ஆத்ம ஹத்தி செய்கிற சகலரும் என்பதை येकेच பதம் குறிப்பிடுகிறது. இப்படிப்பட்டவர்கள்.

प्रेत्य = மரணமடைந்து

अभिगच्छन्ति = அடைகிறார்கள்

नाम = நிச்சயம்.

இந்த மந்திரார்த்தத்துக்கு பிரமாண வாக்கியம்:

महादुःखैकहेतुत्वा त्प्राप्यत्वा दसुरैस्तथा ।
असुर्यानामतेलोका स्तान्यान्ति विमुखाहरौ ॥
(इति वामने)

असुर्या : என்பதற்கு தேவாதிகளின் சரீரம் என்று சிலர் வியாக்கியானம் செய்வது அயுக்தம். ஏனெனில் மேற் சொன்ன பிரமாண வசனத்திற்கு பொருந்தவில்லை. ॥ 3 ॥

48. अनेषत् என்பது சம்ஹிதை பாடம்.
49. आश्नुवन् என்பது சம்ஹிதை பாடம்.
50. अर्शत् என்பது சம்ஹிதை பாடம்.

ச:—देवाः = देवयन्तिते விஷயங்களைப் பிரகாசிப்பிக்கும் ஸ்வபாவ முள்ள கண்முதலிய இந்திரியங்கள்.

न आप्नुवन् = அடைகிறதில்லை
(यतः) = (ஏனெனின்)
एतत् = (இது)
(मनसः आपि) = (மனதைவிட)
पूर्वं = முன்னமே
अर्षत्—अर्षति சர்வ வியாபகத்துவத்தினல் போயிருக்கிறது

அ-கை:—எந்த ஆத்மாவைக் கொல்லுவதால் அஞ்ஞானிகள் (ஜனனமரணரூப) சம்சாரத்தை அடைகிறார்களோ இதற்கு விபரீதமான ஞானத்தால் ஆத்மாவைக் கொல்லாத ஞானிகள் சம்சார (பந்த) த்தினின்றும் விடுபட்டு முக்தர்களாகிறார்களோ, அந்த ஆத்மதத்வம் எப்படிப்பட்டது என்பது இந்த நான்காவது மந்தித்திற் சொல்லப்படுகிறது.

अनेजत् = அந்த ஆத்மதத்வம் அசைவற்றது (சலனமற்றது) அதாவது, தன்னுடைய நிலைமையினின்றும் நழுவாமலிருக்கிறது; எப்போதும் ஒரே ரூபமாய் அதாவது விகாரமற்றதாயிருக்கிறது.

एकं = சகல பூதங்களிடத்திலும் ஒன்றாக இருக்கிறது

---

வி:—அ-கை:—வித்தையில் சீக்கிரமாய் பிரவிர்த்தி சித்திக்கும்பொருட்டு அவித்வான்களுடைய (அநர்த்தம்) 3-வது மந்திரத்தில் சொல்லப்பட்டது. இப்போது ஆசாரியர் சர்வத்திற்கும் வாஸஸ்தானமாகப் பிரஸ்தாபிக்கப்பட்டிருக்கிற பரபிரம்மத்தின் அநந்தவிசித்திர சக்தியோகத்தை விருத்தம்போல் தோன்றும் வார்த்தைகளாற் சொல்லுகிறார்.

अनेजत् = சலியாமலிருப்பது.

एकं = பிரதானம் (1) சாஸ்திரத்தை அறிந்தவர்களுக்கு

---

து:—அ-கை:—கர்மங்களைச்செய்து, மனதை சுத்தப்படுத்தி, இஹ பரசகல விஷயங்களிலும் ஒழிவு அடைந்து, ஈசுவர தத்துவத்தை அறிய இச்சிக்கிறவனுக்கு எந்த ஆத்மாவை விபரீதமாய் அறிவதினல் அதாவது உபாசிப்பதால் துக்கலோகங்கள் பிராப்தியாகின்றனவோ, அப்படிப்பட்ட ஆத்ம தத்துவ மெது என்று தெரிந்து கொள்ள அபேக்ஷையிருக்கு மாகையால், இந்த மந்திரத்தினுலும் மேல் மந்திரத்தினுலும் பரமாத்மாவின் ஸ்வரூபத்தைச் சொல்லுகிறார். அந்த பரமாத்ம தத்துவம்.

अनेजत् = நடுக்கலற்றது, பயமில்லாமையால். கிரியை யுற்றதால் நடுக்கலற்றது என்று அர்த்தமல்ல.

एकं = பிரதான மானதால் ஒன்று. இரண்டற்றதாகையால் ஏகம் என்று அர்த்த மல்ல.

சஃ—मनसः जवीयः=சங்கற்ப விகற்ப ரூபமான மனதைவிட வெகுவேகமுள்ளது.

ஆக்ஷேபம்:—இந்த ஆத்மதத்வம் (வியாபகமானது) சலனமற்றதென்பதும், மனதைவிட 51 வேகமுள்ளதென்பதுமான விருத்தத்தை எப்படிச் சொல்லலாம் ?

உத்தரம்:—இதில் தோஷமில்லை. ஏனெனில், உபாதியற்ற தன்மையும் உபாதியுள்ள தன்மையும் இவ்விரண்டும் சம்பவிக்கின்றன. ஆகவே ஆத்மா உபாதியற்ற தன்னுடைய நிஜமான ரூபத்தால் சலனமற்றதென்றும் ஒரேரூபமுள்ளதென்றுஞ் சொல்லப்படுகின்றது. (மனதைவிட வேகமுள்ளதாகச் சொன்னதானது உபாதிசம்பந்தத்தை உத்தேசித்துத்தான்) சங்கற்ப விகற்பாத்மகமான அந்தக்கரணமாகிற யாதொரு மனதுண்டோ, அந்த மனதாகிற உபாதியை அங்கீகரிப்பதினால் சலித்தல் முதலிய வியவஹாரங்கட்கு ஆத்மா ஆசிரயமாகச் சொல்லப்படுகின்றது. மேலும் தேகத்திலிருக்கிற 52 மனதிற்குப் பிர்ம்மலோகமுதலிய தூரத்திலிருக்கும் வஸ்துக்கள் விஷயமான சங்கற்பம் க்ஷணமாத்திரத்தில் உண்டாகிறது. ஆகையால் மனது வேகமுள்ளதென்பது உலகப்பிரசித்தம். மனது பிர்ம்மலோகம் முதலியவைகட்கு க்ஷணத்தில் போனாலும்,

வி:-ஸ்வாதீனசொத்தாயிருக்கிறது. அல்லது (2)தனக்குச்சமானமாயாவது அதிகமாயாவது வேறு யாதொன்றுமில்லாதது. नतत्समश्चाभ्यधिकश्चदृश्यते என்கிற (श्वे 6 - 8) சுருதியால் பிரம்மத்துக்குச் சமானவஸ்துவும் அதிகமானவஸ்துவும் ஒன்றுமில்லை என்று ஏற்படுகிறது. முக்தஜீவர்கள் பிரம்மத்தின் சாம்மியத்தை அடைகிறார்கள் என்று சொல்லியிருந்தாலும் அவர்களும் அந்த பிரமத்துக்கு அடங்கினவர்களே ஒழிய பிரமத்தைப்போல் பராதீனப்படாதவர்களல்ல.

मनसः जवीयः — வேகத்துடன் கூடின மனதைவிடரொம்ப வேகமுள்ளது. மனது பிரகிருதிமண்டலத்தைத் தாண்டின தே

து;—मनसः (अपि) =மனதைவிட

जवीयः = வெகு வேகமுள்ளது.

51. ஆத்மதத்வம் விகாரமற்றதாயும் ஏகமாயுமிருந்தால், சிலர் ஸ்வர்க்கத்துக்குப் போகிறார்கள் எனவும், சிலர் நரகத்துக்குப் போகிறார்களெனவுமான சம்சார சம்பந்தமான வியவஸ்தை எப்படி இருக்கக்கூடும், எனில், மனதாகிற உபாதியால் இந்த உபாதி நிபந்தனை ஏற்படுகிறது என்று சொல்லுகிறார் மனஸோ முதலிய வசனத்தால். உபாதி சேர்ந்திருப்பதினால் விகாரம் முதலிய வியவஹாரம் ஆத்மாவுக்கு ஏற்படுகிறது.

52. சரீரத்திற்குள்ளிருக்கிற மனது வெளியே போகமாட்டாதாகையால் எப்படி அதற்கு வேகம் இருக்கிறதாகச் சொல்லலாமெனின் (பாஷ்யம் பார்க்க.)

ச:—அவ்விடத்திலும் ஆத்மா முன்னமேயே போயிருந்ததுபோல் ஆத்மஸ்வரூபம் பிரகாசித்துக்கொண் டிருப்பதை மனது அறிகின்றது. ஆகையால் (மனதிற்கு முன்னமேயே ஆத்மா அவ்விடங்கட்குப்போயிருப்பதுபோற் காணப்படுவதால்) ஆத்மா மனதைவிட வேகமுள்ளது என்று சொல்லப்பட்டது.

**नैनद्देवा**[53] **अवन्**:—விஷயங்களைப் பிரகாசிப்பிக்கிற தேவதைகளாகிற கண்முதலிய இந்திரியங்கள் இந்த ஆத்மதத்வத்தை அடைகிறதில்லை (அறியாவாம்) ஏனெனில், இந்திரியங்களைவிட மனது வேகமுள்ளது. இந்திரியங்கள் தங்கடங்கள் (விஷயங்களைப் பிரகாசிப்பிக்கும்) வியாபாரங்கட்கு மனதை அபேக்ஷிக்கின்றன. (மனது பிரவிருத்திக்காதவிடத்தில் இந்திரியங்கள் செல்லமாட்டா). மனதிற்கு விஷயமாகாத ஆத்மாவின் கேவலம் ஆபாசங்கூடக் கண்முதலிய இந்திரியங்களாகிற தேவதைகட்கு விஷயமாகாவிட்டால் ஆத்மா (வின் நிஜஸ்வரூபம்) விஷயமாக மாட்டா தென்பதில் என்ன சொல்லவேண்டியது.

---

வி:—சத்தை க்ஷணகாலத்தில் சங்கற்பத்தால் அடையுமென்றாலும், அதற்கு முன்னமே பிரமம்போயிருக்கிறது என்று அர்த்தம்.

**अनेजत् जवीयः** — சலிக்காதது, வேகமுள்ளது என்பதில் விரோதம் தோன்றுகிறது. பரிஹாரம்:—எங்குமிருக்கும் வஸ்துவுக்குச் சலனமில்லை. ஆகையால் மனதுபோகாத இடத்தில்கூட எப்போதும் இது இருப்பதால் அதைவிட இது வேகமுள்ளது என்று உபசாரமாகச் சொல்லப்படுகிறது.

---

து:—**एनत्** = இந்த பரப் பிரம்மஸ்வரூபத்தை

**देवा :** = தேவதைகள்

**न आप्नुवन्** = பூர்ணமாய் அறியவில்லை. ஏனெனின் அதுசெவ்வையாய் அறியத்தக்கதன்று. அது எவ்விதத்திலும் அறியத் தகாத வஸ்து என்பது கருத்தன்று.

---

53. ஆத்மா வெகுவேகமுள்ளதானால், குதிரை முதலியவைகள்போல் கண்முதலிய இந்திரியங்களால் அறியப்படக்கூடுமே எனின் **नैनद्देवा** என்று சொல்லுகிறார்கள். விஷயங்களைப் பிரகாசிப்பிக்கும் இந்திரியங்கள் தங்கள் தங்கள் வியாபாரங்களுக்கு மனதை அபேக்ஷிக்கின்றன. மனது பிரவிர்த்திக்கு மிடத்தில் இந்திரியங்கள் பிரவிர்த்திப்பதாயும், மனது போகாத இடத்தில் பிரவிர்த்திக்காமலு மிருக்கின்றன. இந்திரியங்களின் பிரவிர்த்தியை விட மனதின் பிரவிர்த்தி வேகமானது. மனதே ஆத்மாவை அடையாவிட்டால், கண் முதலிய இந்திரியங்கள் ஆத்மாவை அடையமாட்டா என்பதில் சந்தேகமென்ன ?

ச:—पूर्वं अर्षत् :—எக்காரணத்தினால் ஆத்மதத்வம் ஆகாசம்போல் வியாபகமாய் (எங்கும் நிறைந்து) இருக்கிறதோ அக்காரணத்தினால் அது வேகமுடைய மனதிற்கு முன்னமேயே 54 போயிருக்கிறது.

तत् धावतो अन्यान् अत्येति = சர்வ வியாபகமான இந்த ஆத்ம தத்வம் சகல சம்சாரதர்மங்களற்றதாயும், தன்னுடைய உபாதியற்ற ஸ்வரூபத்தினால் நிர்விகாரமாயுமிருக்கிறது. (இப்படி நிர்விகாரமாயிருந்தும்) விவேகமற்ற மூடஜனங்கட்கு, இந்த ஆத்ம உபாதியாலுண்டாகுஞ் சகலசம்சார விகாரங்களை அனுபவிப்பதுபோலும், ஒவ்வொரு சரீரத்திலும் வெவ்வேறுபோலுங் காணப்படுகிறது. இதைப்பற்றி இனிச் சொல்லுகிறார். இந்த ஆத்மதத்வம்

---

வி:—देवाः =பிர்ம்மாருத்திராதிகள் கூட

पूर्वं = முன்னமேயே

अर्षत् = இவர்களை அடைந்திருக்கிற

एतत् = பிர்ஸ்தாபத்தில் சகலத்துக்கும் வாசஸ்தானமாகச் சொல்லப்பட்ட பிரமத்தை

न आप्नुवन् = அடைந்திருக்கவில்லை. பிரமம் இவர்களை அடைந்திருக்க இவர்கள் அதை அடையவில்லை என்று சொல்லுவதுவிருத்தம். இதற்குச் சமாதானம்:—வியாபகமானதால் சகலத்தையும் பிரமம் அடைந்திருந்தாலும், கருமத்தால் குறுகின ஞானமுடைய ஜீவர்கள் ஆசாரியருடைய உபதேசமன்றியில் தங்களுடைய புத்தியால் பிரம்மத்தை அடைகிறதில்லை. இதற்குப்பிரமாணம் சாங்

---

து:—(ब्रह्मतु) = (ஆனால் பிரம்மமோ)

पूर्वं = அனாதி காலமாய், ஸ்வபாவ மாகவே

अर्षत् = ऋषज्ञाने என்றும் சூத்திரப்படி சகலத்தையும் அறிந்திருக்கிறது.

तत् = அந்த பிரம்மம்

तिष्ठत् = இருந்து கொண்டு தானே

धावत : = வேகமாய் போகிற

---

54. மனதிற்கே ஆத்மா ஏன் விஷயமாகமாட்டாதெனின் மனதிலிருக்கிற பரிமாணம் மனதிற்கே விஷயமாகிறதில்லை, அதிசமீபமாயிருப்பதால். அப்படியே அதிசமீபத்திலிருக்கிற ஆத்மா மனதிற்கு எப்போதும் விஷயமாகமாட்டாது. மேலும் ஆத்மா அதையே வியாபித்துக்கொண் டிருக்கிறது. மனது அறியாததற்கு இதுவும் ஒரு காரணம்,

ச:—சீக்கிரமாய்ப் போகின்றவைகளாயுந், தனக்கு வேருயுமிருக்கிற மனது, வாக்குமுதலிய இந்திரியங்களை அதிக்கிரமித்துப் (பின்ஞல் விட்டுவிட்டு முன்னே) போகிறதுபோ லிருக்கின்றது.

तिष्ठत् = "போல்" என்பதின் அர்த்தத்தைச் சுருதி திஷ்டத் என்கிற பதத்தாற் சொல்லுகிறது. ஆத்மா ஸ்வயம் விகாரமற்றது; சத்ரூபம்.

तस्मिन् = நித்தியமாயும் ஞானஸ்வரூபமாயு மிருக்கிற ஆத்மதத்வம் சத்ரூபமாய் இருக்கிறதிஞல்,

मातरिश्वा[55]=அந்தரிக்ஷத்திற் சஞ்சரிக்கிறவன், வாயு, சகலபிராணன்களையும் வஹிக்கிறவன் (சகலபிராணிகளின் கிரியைகளை நடத்திவைக்கிறவன்) கிரியாசக்தியுள்ளவன், சகலமான காரியகரணங்கட்கும் அதிஷ்டானமானவன், சகல பிரபஞ்சங்களையுந் தரிக்கிறவன், (கயிறுபோல் எல்லாவற்றிலுங் கோர்த்துக்கொண்டிருப்பதால்) சூத்திராத்மா என்று பெயருள்ளவன், இவன் மாதரிஸ்வா எனப்படுகிருன் இவன்,

---

வி:—தோக்கியத்தில் तद्यथापिहिरण्यनिधि என்கிற (छा 8 - 3 - 2) வாக்கியத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

तिष्ठत् = பிருதிவி, அப்புமுதலிய சகல பூதங்களிலுமிருக்கிற
तत् = அந்த பிரம்மமானது
धावतः अन्यान् = வேகமாய்ச் செல்லுகிற கருடாதிகளைக்கூட
अत्येति = தாண்டுகிறது.

---

து:—अन्यान् = இதர பிராணிகளை

अत्येति = அதிக்கிரமித்ததா யிருக்கிறது. ஏனெனின் அது சிந்திக்கக் கூடாத சக்தியுள்ளதா யிருக்கிறது, எங்கு மிருக்கிறது. பிர்ம்மத்தைத் தவிர மற்றவை எல்லாம் (அத்வைதிகள் சொல்லுகிறபடி) கற்பித மானதால், பிரம்மம் எல்லாவற்றையும் அதிகிரமித்தது என்பது கருத்தல்ல.

---

55. மாதரிச்வா என்கிற பதத்திஞல் சகல பிரபஞ்சமும் கிரகிக்கத் தக்கதென்கிற பாவத்துடன் தாற்பரியம் சொல்லுகிருர்.

மாதரிச்வா என்னும் பதத்திற்கு ஆகாசத்திற் போகிறவன் அதாவது வாயு என்று அர்த்தமாஞல், சூத்திராத்மா என்று எப்படிச் சொல்லலாமெனின், பிரஹ - 5 - 7 - 2 - ல் வாயுவே சூத்திராத்மா என்று சொல்லப்பட்டிருக்கிறது. எப்படி வாயு சகல பிராணிகளின் கிரியைகளை நடத்துகிருரே அப்படி சூத்திராத்மா, ஹிரண்ய கர்ப்பன் நடத்துகிறதிஞல் வாயுவே சூத்திராத்மாவாகச் சொல்லப்பட்டது.

ச:—अप :[56]—பிராணிகளின் சேஷ்டைகளாகிற கர்மங்களையும், அக்கினி, சூரியன், மேகம் முதலியவர்களின் ஜ்வலித்தல், தஹித்தல், பிரகாசித்தல், வர்ஷித்தல் முதலிய காரியங்களையும்

दधाति =விபாகம் [57] செய்துவைக்கின்றான் (பிரித்துவைக்கின்

---

வி:—(சங்கை):—ஸ்திரமாயிருக்கிறவஸ்து ஓடுகிறவனைத் தாண்டுதல் விருத்தம். சமாதானம்:—வேகமுள்ளவர்கள் எவ்வளவு தூரம் ஓடினாலும், அவ்வளவு தூரத்திற்கு மேற்பட்ட இடத்திலும் இது இருந்துகொண்டிருக்கிறது, சர்வவியாபகமானதால்.

तस्मिन्.—வேறு ஆச்சரியமும் சொல்லுகிறார்.

तस्मिन् = அந்த வாசுதேவனிடத்திலிருக்கிற

मातरिश्वा = வாயுவானது

अपः = ஜலசப்தத்தால் குறிப்பிடப்படுகிற ஜலம், மேகம், கிரஹங்கள், நக்ஷத்திரங்கள் முதலியவைகளை

दधाति = தரிக்கிறது. தரிக்கிறதற்கு யோக்கியமாயிராத வா

---

து:—तस्मिन् = அந்த ஹரியினிடத்தில்

मातरिश्वा = முக்கியமான வாயு

अपः = आसमन्तात् पालयति इति अप : சகலமானவைகளையும் பாலனம் செய்கிற கர்மங்களை

दधाति = சமர்ப்பிக்கிறான். வாயுவே சகல சேஷ்டைகளையும்

---

56. இந்தப் பதத்திற்குச் சாதாரணமாய் ஜலம் என்று அர்த்தம். இதற்குக் கர்மம் என்று அர்த்தம் எப்படி வந்ததெனில் :—

(1) ஸொம இரசம், ஆஜ்ஜியம் (நெய்), பய: (பால்) முதலிய பதார்த்தங்களாலும் ஜலத்தாலும் வேதோக்த கர்மங்கள் செய்யப்படுகின்றன. இந்தக் கர்மங்களில் ஜலத்துடன் ஜலரூப பதார்த்தங்கள் சேர்ந்திருக்கின்றன. இந்த சம்பந்தத்தால் ஜல சப்தம் லாக்ஷணிகம் (காரணத்தைக் குறிப்பிடும் பதம் காரியத்தையும் குறிப்பிடுதல்). பிராண சேஷ்டைக்குக் காரணமான ஜலத்தைக் குறிப்பிடும். அப: என்னும் பதம் ஜலத்தின் காரியமான பிராண சேஷ்டாரூப கர்மத்துக்கு உபயோகிக்கப்பட்டிருக்கிறது. பிராணிகளின் சேஷ்டை வியாபாரம்) ஜலத்தை அவலம்பித்திருக்கிறது என்பது சாந்தோக்கியம் 6 - 7 - 1ல் வியக்தமாய்த் தெரியவருகிறது. அந்தச் சுருதியில் "15 - நாள் சாப்பிடவேண்டாம், இஷ்டப்படி ஜலத்தைக்குடி, பிராணன் ஜலமயம், குடிக்கிறவனுடைய பிராணன் நஷ்டமாகிறதில்லை" என்று சொல்லப்பட்டிருக்கிறது.

(2) ஆப: என்று பதமிருந்தால் அப்பதத்திற்கு "आप्यन्ते सुखदु:खानि याभि: तानि" அதாவது, எவைகளால் சுக துக்கங்கள் அடையப்படுகின்றனவோ அவைகள்; அதாவது, கர்மங்கள் என்று அர்த்தம் செய்யலாம்.

57. சூத்திராத்மாவென்று பெயருள்ள சமஷ்டிவாயு நித்தியஞானஸ்வரூப ஆத்மாவை ஆசிரயித்துத்தான் பிராணிகளின் கர்மங்களை விபாகம் செய்

ச:—ருன்); அல்லது, தரிக்கிருன்.

இதற்குப்பிரமாணம்:—

**भीष्मास्मात्वातः पवते** = (தை - II - 8) இந்த பரமாத்மாவினிடத்திற் பயத்தால் வாயு சலிக்கிருன் (தன்னுடைய வியாபாரத்திற் பிரவிர்த்திக்கிருன்) முதலிய 58 சுருதிவசனங்கள்.

**4-வது பாதத்தின் அர்த்தம்**—சகலத்திற்கும் அதிஷ்டானமாயும், நித்திய ஞான ஸ்வரூபமாயுமிருக்கிற ஆத்மஸ்வரூப மிருந்தாற்ருன் காரியகாரணங்கள் முதலிய 59 சகல விகாரங்களும் உண்டாகும் என்பது அர்த்தம். ॥ 1 ॥

---

வி:—யுகூட ஜலம் முதலியவைகளைத் தரிப்பது ஆச்சரியம். சகலத்துக்கும் ஆதாரமான சர்வேசுவரனுல் தரிக்கப்படும் வாயு அவனுடைய சக்தியால் இப்படி தரிக்கிறதென்று அபிப்பிராயம். ॥ 4 ॥

---

து:—செய்கிறவன். ஆகவே அவன் தன் பிரேரணையால் பிராணிகளால் செய்யப்படும் புண்ணிய பாப கர்மங்களைச் சமர்ப்பிக்கிருன்.

**अनेजत्** = என்பது கிரியையற்றது என்றுசிலர் சொல்லுவது மனதைவிட வேகமுள்ளது என்று சொன்னதற்கு விருத்தம். ஸோபாதிக நிருபாதிக வியவஸ்தையால் அப்படிச் சொல்லுவதும் பொருந்தாது. ஏனெனின், வேதாந்தம் பிரதான பிரம்மத்தைச் சொல்லுவதால் முக்கியார்த்தம்கிடைக்கும் இடத்தில் அமுக்கியார்த்தம் பொருந்தாது. வேதாந்த வாக்கியத்தின் முடிவான அர்த்தம் பிரம்மத்தின் ஸ்வரூபத்தைச்சொல்லுவதேயாம். இந்த மந்திரார்த்தத்துக்குப் பிரமாண சுலோகம்:—

अनेजन्निर्भयत्वात्तदेकं प्राधान्यतस्तथा ।
सम्यग्ज्ञातुमशक्यत्वादगम्यं तत्सुरैरपि ॥
स्वयंतुसर्वानगमत्पूर्वमेवस्वभावतः ।
अचिन्त्यशक्तितश्चैवसर्वगत्वाच्चतत्परम् ॥
द्रवतोऽत्येतिसंतिष्ठत्तस्मिन्कर्माण्यधान्मरुत् ।
मरुत्येवयतश्चेष्टा सर्वातांहरयेऽर्पयेत् ॥

(इति ब्रह्मांडे) ॥ 4 ॥

---

கிருன். அதாவது, அக்கினி முதலியவர்கள் இன்ன இன்ன காரியங்களைச் செய்யவேண்டும் என்கிற விதி ஏற்படுத்தி அவர்கள் மூலமாக அச்செய்கைகளை நடத்திவருகிருன்.

58. கடவல்லி 6-3ல் இப்படியே சொல்லியிருக்கிறது.

भयादस्याग्निस्तपाति भयात्तपतिसूर्यः ।
भयादिन्द्रश्चवायुश्च मृत्युर्धावतिपञ्चमः ॥

அக்கினி, சூரியன், இந்திரன், வாயு, யமன் எல்லாரும் இவனுடைய பயத்தினுல் தங்கள் தங்கள் வேலையைப் பார்க்கிருர்கள்.

59. மண் - கடம், தங்கம்-நகை; மண் காரணம், கடம் காரியம், தங்கம் காரணம், நகை காரியம்; இவைபோன்ற சகல காரிய காரணரூப விகாரங்

5 तदेजति तन्नैजति तद्दूरे तद्वन्तिके [60] ।

तदन्तरस्य [61] सर्वस्य तदुसर्वस्यास्यबाह्यतः ॥

ச:—तत् =அது

एजति=சலிக்கிறது.

तत्=அது

न एजति=சலிக்காம லிருக்கிறது.

तत्=அது

दूरे=தூரத்தி லிருக்கிறது.

तद्वत्=அப்படியே

अन्तिके=ஸமீபத்தி லிருக்கிறது.

तत्=அது

अस्य=இந்த

सर्वस्य=ஸமஸ்தத்திற்கும்

अन्तः=உள்ளிருக்கிறது.

तत्उ=ஆனாலுங்கூட அது

अस्य=இந்த

सर्वस्य=ஸமஸ்தத்திற்கும்

बाह्यतः=வெளியே யிருக்கிறது.

### சங்கரபாஷ்யம்.

அ - கை :—மந்திரங்கட்குச் சோம்பல் இல்லை என்கிற அபிப்பிராயத்தால் முந்தின மந்திரத்திற் சொல்லியிருந்தாலும் அந்த அர்த்தத்தை மறுபடியுஞ் சொல்லுகின்றார்.

---

வி:—அ-கை:—இப்போது ஆசாரியர் தம்மால் உபதேசிக்கப்பட்ட பிரம்மத்தின் விசித்திர சக்தியை ஆதரவு உண்டாகும்பொருட்டு வேறுவிதமாயும் சொல்லுகிறார். அடிக்கடி சிரவணம் செய்யவேண்டும் என்கிற கருத்துடன் மறுபடியும் சொல்லப்படுகிறது. இதற்குப் பிரமாணமாக முண்டகோபநிஷத்து 1 - 2 - 12 பார்க்க.

---

களும் நித்தியஞானஸ்வரூபமான ஆத்மாவின் ஆதாரத்தினால் ஏற்படுகின்றன. எல்லாம் பிரம்மமாகிற ஆதாரத்தில் கற்பிக்கப்பட்டவை. எல்லாம் பிரம்மத்தின் காரியங்களே (விகாரங்களே).

60. तद्व अन्तिके என்பது சம்ஹிதை பாடம்.

61. கீதை 13-வது அத்தியாயம் 15-வது சுலோகத்தில் बहिरन्तश्च-भूतानां நாராயண உபநிஷத்தில் अन्तर्बहिश्चतत्सर्वं व्याप्यनारायणस्थितः

ச:—तत :—பிரகிருத பிரஸ்தாபத்தில் வந்திருக்கிற ஆத்மதத்வம், एजाति:—(ஔபாதிக ரூபத்தால்) சலிக்கிறது (காரியத்தைச் செய்கிறது).

तत्नएजाति :— அதுவே (நிஜமான ரூபத்தால்) ஸ்வதஃ (தானாக) சலிக்கிறதில்லை.

तत्एजति…नएजाति :—அது (ஸ்வரூபத்தில்) சலனமற்றதாயினும் (உபாதியால்) சலிக்கிறதுபோ லிருக்கிறது.

तत्दूरे —மேலும் அந்த ஆத்மதத்வம் தூரத்திலிருக்கின்றது. அதாவது, வருஷங்கள் நூறுகோடியானாலும் அஞ்ஞானிகள் அதை அடையமாட்டார்கள். ஆகையால் அது தூரத்திலிருக்கிறதுபோ லிருக்கின்றது.

तद्वदान्तिके :—வித்வான்கட்கு அது ஸ்வரூபமாகவே இருப்பதால் அதுமிகச் சமீபத்தி 62 லிருக்கின்றது.

---

வி:—तत्=சர்வ வியாபகமான பரப்பிரம்மம்

एजाति (इव )=சலிக்கிறதுபோ லிருக்கிறது.

तत् उ=அதுவே

न एजाति=வாஸ்தவத்தில் சலிக்கிறதில்லை.

तत् दूरे…अन्तिके=அது தூரத்திலும் சமீபத்திலு மிருக்கிறது. சர்வ வியாபியாய் இருந்தாலும் ஆசுரப் 63 பிரகிருதிகளுக்கு தூரத்திலும், தேவப்பிரகிருதிகளுக்குச் சமீபத்திலும் இருக்கிறதாகச் சொல்லப்படுகின்றது.

---

து:— அந்த ஈசுவரனிடமிருந்து. तत् என்பதற்கு முதல் வேற்றுமையில் பிரம்மம் என்று அர்த்தம் செய்தால் அது பயத்தை அடைகிறது என்று முடியும். அடுத்த வாக்கியத்தில் அது பயப்படுகிறதில்லை என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆகவே இரண்டு வாக்கியங்களும் பரஸ்பரம் விருத்தம். ஆகையால் तत् என்பதை ஐந்தாம் வேற்றுமையில்தான் அர்த்தம் செய்யவேண்டும். (जगत्) (ஜகத்து) एजाति = பயத்தை அடைகிறது (அவருக்குப் பயப்படுகிறது). तत् = அந்த பிரம்மம் न एजाति = ஸ்வதந்திரமாயிருப்பதால் பயப்படுகிறதில்லை.

---

62. ஆத்மா இல்லாவிட்டால் ஸர்வ பிராணிகளும் "நான் இல்லை" "நான் இல்லை" என்று சொல்லும். ஆனால்அப்படி ஒருவரும் சொல்லுவதில்லை. "நான் இருக்கிறேன்", "நான் இருக்கிறேன்" என்றுதான் எல்லாரும் சொல்லுகிறார்கள். இப்படி யிருக்க வித்வான்களுக்கு மட்டும் அது ஸமீபமாயிருக்கிறது என்று சொன்னதற்கு தாற்பரிய மென்ன வெனில், "ஆத்மா இருக்கிறது" என்கிற அம்சம் அஞ்ஞானி ஞானி இருவர்களுக்கும் பொதுவாக விளங்கினாலும் சித்ரூபம், ஆநந்தரூபம், வியாபகம், நித்தியசுத்தம் முதலிய ஆத்ம லக்ஷணங்கள் அஞ்ஞானிகளுக்கு விளங்குகிறதில்லை. ஸர்வ ஸாதாரண அனுபவங்கள் சுத்த ஆத்மாவினுடைய தல்ல. ஆனால் சித்ஜடாத்மகமான ஸ்வரூபத்தினதாம். ஞானிகள் சுத்த ஆத்மஸ்வரூபத்தை அனுபவிக்கிறார்கள். ஆகையால் அவர்களுக்குத்தான் அது சமீபத்திலிருப்பதாகச் சொல்லப்படுகிறது.

63. மூன்றாவது மந்திரத்தைப் பார்க்க.

ச:—तदन्तरस्य...बाह्यतः—அது தூரத்திலுஞ் சமீபத்திலும் இருக்கிறது மாத்திரமன்று. அது சகலத்திற்கும் (அந்தராத்மாவாய்) உள்ளே இருக்கின்றது. (பிரமாணம்) यआत्मासर्वान्तरे என்கிற பிரஹ. III-4-1 சுருதியிற் சகலத்திற்கும் உள்ளே ஆத்மா இருக்கிறதாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. மேலும், நாம ரூப கிரியாத்மகமான இந்த சமஸ்தஜகத்திற்கும் வெளியிலிருக்கிறது. ஆகாசம்போல்

---

வி:—இதற்குப் பிரமாண சுலோகம்.—

पराङ्मुखानां गोविन्दे विषयासक्तचेतसां ।
तेषान्तत्परमंब्रह्म दूराद्दूरतरेस्थितं ।
तन्मयत्वेन गोविन्दे येनरान्यस्तचेतसः ।
विषयत्यागिनस्तेषां विज्ञेयञ्चत दन्तिक। इति ॥

வாசுதேவனிடத்தில் பக்தியில்லாமல் விஷயத்தில் ஆசக்தியுள்ளவர்களுக்கு பரப்பிரம்மம் தூரத்திலும், விஷயத்தைத்தியாகம் செய்து வாசுதேவனிடத்தில் மனதை வைத்தவர்களுக்குச் சமீபத்திலு மிருப்பதாக நினைக்கத்தக்கது என்று சௌனக ஸ்மிருதியில் சொலலப்பட்டிருக்கிறது.

तदन्तरस्य.—வேறு ஒரு ஆச்சரியத்தையும் சொல்லுகிறார்.

तत् = சர்வ வியாபகமான பரப்பிரம்மம்

अस्य सर्वस्य=விவித விசித்திர ரூபமாய்ப் பிரமாணங்களால் சித்தமாகிற சகல பதார்த்தங்களுக்கும்

अन्तः=உள்ளே யிருக்கிறது.

तत् उ = அதுவே (அப்போதே)

अस्य सर्वस्य=இவை எல்லாவற்றிற்கும்

बाह्यतः=வெளியே யிருக்கிறது.

வீட்டிலிருக்கிற புருஷன் வீட்டுக்கு வெளியே அதேகாலத்திலிருக்கமாட்டான். அப்படியே, வெளியேயிருக்கிறவன் அதேகால

---

து:—तत् दूरे அ-கை:—ஈசுவரன் சகல பதார்த்தங்களுக்கும் ஆசிரயமாயிருந்துகொண்டு சகல பூதங்களிடத்திலும் பிரவேசித்திருக்கிறார் என்று சொல்லுகிறார். तत उ அந்த பிரம்மமே, दूरे=தூரத்திலிருக்கிறது. तत् उ அதுவே, अन्तिकेच = சமீபத்திலு மிருக்கிறது.

तत् = அந்தப் பிரம்மம்

अस्य = பிரமாணத்திற்கு விஷயமான இந்த

सर्वस्य = சகல பதார்த்தங்களுக்கு

अन्तः = உள்ளிருக்கிறது.

ततु = அதுவே

अस्य = பிரமாணத்திற்கு விஷயமான இந்த

6. यस्तुसर्वाणि भूतान्यात्मन्येवानु पश्यति ।

सर्वभूतेषुचात्मानं ततो नविजुगुप्सते [64] ॥

यः तु = எவன்

सर्वाणि = ஸமஸ்தமான

भूतानि = பூதங்களையும்

आत्मानि एव = தன்னிடத்திலேயே

ச:—வியாபகமாயிருப்பதாற் சகலத்திற்கும்வெளியேயும், எல்லாவற்றையும்விட அதிசூட்சுமமாயிருப்பதாற் சகலத்திற்கும் உள்ளேயுமாக இந்த ஆத்மதத்வம் இருக்கிறது. பிரஹ. 4-5-13 ல் "प्रज्ञानघन एवच" அதாவது, ஆத்மா சுத்த ஞானஸ்வரூபம் என்று சொல்லியிருப்பதால் அது நிரந்தரம்; அதாவது, ஏகரசமா [64] யிருக்கிறது.॥5॥

வி:—த்தில் உள்ளேயும் இருக்கமாட்டான். பிரம்மமோ ஒரேகாலத்தில் உள்ளேயும் வெளியேயும் இருக்கிறதென்பது ஆச்சரியம்.

சங்கை :—அணுக்களுக்குள் இருப்பதாய் எப்படிச் சொல்லலாம்?

சமாதானம் :—தடையற்றப் பிர்ம்மம் சர்வ வியாபகமாயிருப்பதால் அணுக்களுக்குள்ளும் இருப்பதாகச் சொல்லலாம். இப்படியே, வெளியிலிருக்கிறது என்பது வியாபகமன்றி யிருக்கிற வஸ்துக்களை உத்தேசித்து சொல்லப்பட்டது. இதற்குப் பிரமாணம் தைத்ரியத்தில் (நாராயணவல்லி) अन्तर्बहिश्चतत्सर्वं व्याप्य नारायणःस्थित என்கிற வாக்கியத்திற் சொல்லப்பட்டிருக்கிறது. ॥ 5 ॥

து:— सर्वस्य = சகல பதார்த்தங்களுக்கும்

बाह्यतः = வெளியேயும் இருக்கிறது.

ஏனெனில் அது ஸர்வவியாபி. இந்த மந்திரத்திற் சொல்லிய அர்த்தத்திற்குப் பிரமாணவாக்கியம் என்னவெனில் :—

ततोबिभेतिसर्वेपि नबिभेति हरिः स्वयम् ।

सर्वगत्वात्सदूरेचबाह्येतश्चसमीपगः ॥

(इति तत्वसंहितायाम्) ॥ 5 ॥

---

64. विचिकित्सति என்பது சம்ஹிதை பாடம்.

65. வியாபகமாயிருப்பதால் வெளியேயும் அதிசூட்சுமமாயிருப்பதால் உள்ளேயும், ஆத்மா இருக்கிறதாகச் சொன்னால், மத்தியிலிருக்காமல் போகிறதோ என்று ஒருவன் சங்கிக்கக்கூடும். அந்தச் சங்கையை நிவர்த்திக்கும் பொருட்டு அது ஏகரசமாயிருக்கிறது என்று சொல்லுகிறார். பிரஹ: 4-5-13-ல் உப்புக்கல் உள்ளேயும் வெளியேயும் ஒரே ரசமாயிருக்கிறது போல் இந்த ஆத்மாவும் பிரஞ்ஞானகனம், அதாவது, சுத்தஞான ஸ்வரூபமாக இருக்கிறது. ஆத்மா நிரந்தரம், அதாவது, அந்தரம் (இடைவெளி) இல்லாதது; எங்கும் ஒரேவிதமா யிருக்கிறது.

अनुपश्यति=பார்க்கிறுனோ,
सर्वभुतेषुच=ஸகல பூதங்களிடத்திலும்
आत्मानं=தன்னை
(पश्यति)=(பார்க்கிறுனோ),
(सः)=(அவன்)
ततः=அப்படிப்பார்ப்பதனுல்
नविजुगुप्सते=தயை, அல்லது, நிந்தை ஒன்றும் செய்கிறதில்லை.

## சங்கர பாஷ்யம்.

यःतु[66]:—மோக்ஷ இச்சையுள்ள ஸந்நியாஸியாக இருக்கிற எவன்

सर्वाणि भूतानिः—அவ்வியக்தம் முதல் ஸ்தாவரம் வரையிலுள்ள சகல பூதங்களையும் (சேதனு சேதனமான சகல ஜகத்தையும்)

आत्मानमेवानुपश्यति :—ஆத்மாவினிடத்திற் பார்க்கிறுனோ, அதாவது, தனக்கு வேருகப்பார்க்கிறதில்லையோ,

---

வி:—அ-கை:—இந்தப்பிரகாரம் எல்லாம் பிர்ம்மத்தால் வியாபிக்கப்பட்டிருக்கிறது என்பது சொல்லப்பட்டது. இப்படித் தியானம் செய்கிறவனுக்கு இனிப் பிரயோசனம் சொல்லப்படுகிறது.

यःतु=தத்துவஞானமுள்ளவன் - தத்துவ ஞானமுள்ளவன் மாஹாத்மியமுள்ளவன் என்று तु சப்தம் குறிப்பிடுகிறது.

सर्वाणि भूतानि=பிரமன் முதல் ஸ்தாவரம் வரையிலுள்ள வஸ்துக்களை

आत्मन्येव=பரமாத்மாவினிடத்திலேயே பிருதிவிமுதலியவைகளால் தரிக்கப்பட்டிருந்தாலும் அவைகள்மூலமாய் பரமாத்மாவினிடத்திலேயே இருக்கின்றன என்பது என்னும் एव சப்தத்தின் கருத்து.

अनु=அதை விடாமலிருக்கிறதென்று
पश्यति=எவன் தியானம் செய்கிறுனோ ;

---

து:—அ-கை:—तद्दूरे முதலியவைகளால் ஹரி சர்வ பூதங்களுக்கும் ஆசிரியமாயிருப்பதால் அவர் சர்வவியாபி என்று சொல்லப்பட்டது. அப்படி அறிந்த ஞானத்தின் பலத்தைச் சொல்லுகிறுர்.

यःतु = எவன்
सर्वाणिभूतानि = ஜடசைதன்னிய ரூபாமன சகல ஜகத்தையும்
आत्मानि एव = பரமாத்மாவை ஆசிரயித்துக்கொண்டிருப்பதாகவே
अनु = சந்தேக மின்றி
पश्यति = பார்க்கிறுனோ, அறிகிறுனோ;

---

66. மேற்சொல்லிய ஆத்மஞானத்தின் பலன் விதிநிஷேதங்களை அதிக்கிரமித்த ஜீவன் முக்த ஸ்வருபமாயிருத்தலே என்பதை 6-7-வது மந்திரங்களால் சொல்லுகிறுர்.

ச:—सर्वभूतेषुचात्मानं:—சகல பூதங்களினிடத்திலும் ஆத்மாவைப் பார்க்கிருனே, அதாவது, தன்னுடைய ஆத்மாவை அந்தப் பூதங்களின் ஆத்மாவாகப் பார்க்கிருனே, எப்படிக் காரியகாரணங்களின் ஸங்காத ரூபமான(சேர்க்கையான)சரீரத்திற்கு ஆத்மாவான நான் சகல விருத்திகட்குஞ் சாட்சியாயுஞ், சேதனஸ்வரூபனுயும், சுத்த நிர்குணனுயும் இருக்கின்றேனே அப்படி இதே ஸ்வரூபத்துடன் அவ்வியக்தமுதல் ஸ்தாவரம்வரையிலுள்ள சகல பூதங்கட்கும் நானே ஆத்மாவாக இருக்கின்றேன். இப்படிச் சகல பூதங்களிடத்திலும் நிர்விசேஷ ஆத்மாவை எவன் பார்க்கிருனே அவன்

ततोनाविजिगुप्सते:—அப்படிப் பார்க்கிறதினுல் (யாதொன்றினிடத்திலும்) தயை வைக்கமாட்டான், நிந்தனையும் செய்யமாட்டான். இஃது கிடைத்ததின் அநுவாதமேயாம்:—ஆத்மாவிற்(தனக்)கு வேருகப் பதார்த்தங்களைப் பார்க்கிறவனுக்குத் தயவு, நிந்தனை

வி:—सर्वभूतेषु=சகல பூதங்களிலும்

आत्मानं=பரமாத்மாவை

य:पश्याति=எவன் பார்க்கிருனே. இவ்விடத்தில் பரமாத்மாவின் வியாப்திமட்டும் கிரகிக்கத்தக்கது. ஏனெனில், பரம புருஷனுக்கு வேறு ஒன்றும் ஆதாரமன்று.

(स:)=(அந்த பிரம்ம ஞானி)

तत:=பிரம்மாத்மகமாய்ப் பார்க்கப்பட்ட சகல வஸ்துக்களுக்குள் ஒன்றையும்

न विजिगुप्सते = வெறுக்கிறதில்லை. எல்லாம் தனக்கு ஆத்மாவாயிருக்கிற சர்வேசுவரனுடைய விபூதியாயிருப்பதால் ஒன்றையும் அவன் நிந்திக்கிறதில்லை. ॥ 6 ॥

து:—च = மேலும்,

सर्वभूतेषु आत्मानं = சகல பூதங்களிலேயும் நியமனம் செய்கிறவனுய், ஹரி இருப்பதாக எவன் அறிகிருனே, (स:)=(அவன்)

तत:=இப்படி பிரம்மத்தின் சிரேஷ்ட தன்மையை அறிவதனுல்

(स्वात्मानं) = (தன்னை)

न विजिगुप्सते = பயமில்லாததினுல் இரக்ஷித்துக்கொள்ள இச்சிக்கிறதில்லை.

ஜீவனே சர்வ பூதங்களுக்கும் ஆத்மாவென்று சிலர் சொல்லக்கூடும். அதை நிராகரிக்கும்பொருட்டு அடியில் கண்ட சுருதி எழுதப்பட்டிருக்கிறது:—

सर्वगंपरमात्मानं सर्वंचपरमात्मानि ।
य:पश्येत्सभयाभावान्नात्मानं गोप्तुमिच्छति ॥
(इति सौकरायणश्रुति:) ॥ 6 ॥

7. यस्मिन्सर्वाणि भूतान्यात्मैवाभूद्विजानतः।

तत्रको मोहः कःशोक एकत्वमनुपश्यतः ॥

यस्मिन् = எந்த ஆத்மஸ்வரூபத்தில், அல்லது, எந்தக்காலத்தில்
सर्वाणि = ஸமஸ்தமான
भूतानि = பூதங்களாக
आत्मा एव = ஆத்மாவே
अभूत् = ஆனதோ,
तत्र = அந்த ஆத்மஸ்வரூபத்தில், அல்லது, அந்தக்காலத்தில்
एकत्वं = "ஒன்று" என்பதை (ஒருமையையே)
अनुपश्यतः = பார்ப்பவனுக்கு
मोहः = மோஹம்
कः = ஏது ?
शोकः = சோகம்
कः = ஏது ?

ச:-இவைகள் உண்டாகக்கூடும். ஆத்மாவையே மிகவுங்களங்கமற்றதாயும் பேதமற்றதாயும் பார்க்கிறவனுக்குத் தயவு நிந்தனைகளின் காரணமான வேறு பதார்த்தம் இல்லையாதலின் ஞானிக்கு தயவு நிந்தை இல்லை என்று கிடைத்ததேயாம். ஆதலால் தயை நிந்தைகளைச் 67 செய்யான் என்று சொல்லப்பட்டது. ॥ 6 ॥

அ - கை. இந்த (முந்திய மந்திரத்திற் சொல்லிய) 'அர்த்தத்

வி:—அ-கை :—சகலத்துக்கும் பிரம்மாத்மகத்துவம் இருப்பதா

து:—அ-கை:—முன் சொன்ன அர்த்தத்தையே வியக்தமாய்ச் சொல்லுகிறார்.

67. பேததிருஷ்டி யுள்ளவனுக்குத்தான் இவைகள் உண்டாகின்றன. எங்கும் பேதமற்ற அத்வய ஆத்மாவைப் பார்க்கிறவனுக்கு இவைகள் உண்டாக மாட்டா. இதனால்தான் மனீஷாபஞ்சகத்தில் जनकृपा नैष्ठुर्यं उत्सृज्यतां ஜனங்களிடத்தில் கிருபையும் நிஷ்டூரமும் விடப்படட்டும் என்று ஸ்ரீ சங்கராசாரியார் சொல்லி யிருக்கிறார்.

இந்த சுலோகார்த்தம் பகவத்கீதை 6-வது அத்தியாயம் 30-வது சுலோகத்திலும்

योमां पश्यति सर्वत्र सर्वञ्चमयि पश्यति।
तस्याहं न प्रणश्यामि सचमेनप्रणश्याति ॥

காணப்படுகிறது. மனுஸ்மிருதி 12-125-ம் பார்க்க. சுவேதாசுவதர உபநிஷத்தில் 6-11-ல் " एकोदेवः सर्वभूतेषुगूढः सर्वव्यापी सर्वभूतान्तरात्मा' என்று சொல்லப்பட்டிருக்கிறது.

ச:—தையே வேறான(இந்த ஏழாவது) மந்திரமுஞ் சொல்லுகிறது.

यस्मिन् ... विजानत :—எந்தக் காலத்தில், அல்லது, எந்த மேற்சொன்ன ஆத்மாவினிடத்திற் சகலமான பூதங்களையும் பரமார்த்தரூப ஆத்மாவாகப் பார்க்கிறதினால் (நிஜமான ஆத்மஞானத்தால்) சகலமான பூதங்களும் ஆத்மாவாக ஆகின்றனவோ,

तत्रपश्यत : = அந்தக்காலத்தில், அல்லது, அந்த ஆத்மாவினிடத்தில் பரமார்த்தவஸ்துவை அறிகிறவனுக்கு மோஹம் ஏது, சோகம் ஏது? (ஒன்றுமில்லை என்று அர்த்தம்). சோக மோஹங்கள் காமகர்மங்களின் பீஜங்கள் (காரணங்கள்); அஞ்ஞானத்தால் உண்டாகின்றன. சுத்தமாயும் ஆகாசம்போல் (வியாபகமாயும்) ஏகமாயு

---

வி:-வையதிகர்ணியமாய்[68] முன்சொன்னதை, இப்போது சகலமும்

---

து:—यस्मिन् = எந்த பரமாத்மாவினிடத்தில்

सर्वाणि = சகலமான

भूतानि = பூதங்களும்

(तिष्ठन्ति) = (இருக்கின்றனவோ)

(सः) = (அந்த)

आत्मा एव = பரமாத்மாவே

तत्र = அந்த சகல பூதங்களிடத்திலும்

अभूत् = அனுஸூதமாயிருக்கிறார்.

(एवं) = (இந்தப் பிரகாரம்)

विजानतः = சகலத்திற்கும் ஆதாரமாய்ச் சகலத்திலு மிருப்பதாய்ப் பரமாத்மாவை செவ்வையாக அறிகிறவனும்

एकत्वञ्च = மேலும், சகலத்திற்கும் ஆதாரமாக சகலத்திற்கும் பகவான் ஒருவரே என்று

अनुपश्यतः = அறிகிறவனுயு மிருக்கிறவனுக்கு

---

68. வெவ்வேறு வேற்றுமைகளிலுள்ள இரண்டு பதங்களால் சொல்லப்படும் தன்மை. உதாரணம்:— राज्ञःपुरुषः (அரசனுடைய மனிதன்) என்னு மிடத்தில் ஆறும் வேற்றுமையிலுள்ள "அரசன்" பதத்தாலும், முதல் வேற்றுமையிலுள்ள "புருஷ" பதத்தாலும் சொல்லப்படும் தன்மை வையதிகரணம் எனப்படும். 6-வது மந்திரத்தில் सर्वाणि भूतानि आत्मनि என்னுமிடத்தில் भूतानि என்னும் முதல் வேற்றுமைப் பதத்தால் பூதங்கள் குறிப்பிடப்பட் டிருக்கின்றன. आत्मनि என்னும் 7-ம் வேற்றுமையில் ஈசுவரன் குறிப்பிடப்பட்டிருக்கிறான். ஆகவே வெவ்வேறு வேற்றுமைகளிலிருக்கும் இரண்டு சப்தங்களால் குறிப்பிடப்படும் தன்மை வையதிகரணம்.

ச:-மிருக்கிறதாக ஆத்மாவைப் பார்க்கிறவனுக்கு மோஹ 69 மேது, சோகமேது? ஏது என்று ஆக்ஷேபமாய்க் கேட்டதினால் அவித்தி யாகாரியங்களான சோக மோஹங்கள் இல்லை என்று சொன்னதாக ஆகிறது. இதனால் காரண சகித (அஞ்ஞான சகித) சம்சாரமே சுத்தமாயில்லை என்று காண்பிக்கப்பட்டதாக ஆகிறது. ॥ 7 ॥

வி:—பிரம்மாத்மகம் என்று சாமானாதிகரணத்தினால்70 செவ்வையாய் ஸ்தாபித்துக்கொண்டு அப்படிச் செய்யும் தியானத்தால் உடனே சோக மோஹங்கள் நிவர்த்தியாகின்றன வென்று சொல்லுகிறார்.

यस्मिन् = எந்த தியானம்செய்யும் சமயத்தில்

विजानतः= ईशावास्य முதல் ततोनविजिगुप्सते வரையில் உள்ள மந்திரங்களில் உபதேசிக்கப் பட்டிருக்கிற ஸ்வதந்திரமாயும் பரதந்திரமாயுமிருக்கிற வஸ்துக்களின் பேதத்தை உபதேசித்தபடி செவ்வையாய்ப் பகுத்தறிந்தவனுக்கு

एकत्वं.—பரமாத்மாவுக்கும் சகல பூதங்களுக்கும் அத்தியந்த பேதமிருப்பதாய் ஒப்புக்கொள்ளும் பக்ஷத்தில் सर्वाणिभूतानि

து:—मोहः = மோஹம்

कः = ஏது ?

शोकः = சோகம்

कः = ஏது? ஒன்றும் உண்டாகமாட்டாது என்று அர்த்தம்

विजानतः अनुपश्यतः இவ்விரண்டும் एकत्वं என்பதைச் சேர்ந்தவை.

69. நிரதிசயமான ஆநந்த ஸ்வரூபமாயும் ஸ்வபாவத்தில் துக்க ஸம்பந்த மற்றதாயு மிருக்கிற ஆத்மாவை அறியாதவர்களுக்கு “என்ன கஷ்டம் நான் இறந்தவனாக இருக்கிறேன், எனக்குப் புத்திரன் இல்லை. பூமி இல்லை’. இப்படிப்பட்ட துக்கபுத்தி உண்டாகிறது. ஆனதால் அவன் புத்திரன் முதலியவர்களை இச்சிக்கிறான். அவர்களுக்காக தேவதைகளின் உபாஸனை முதலியவைகளைச் செய்ய இச்சிக்கிறான். ஆத்மா ஒன்றுதான் இருக்கிறது என்று அறிந்தவனுக்கு மேற்சொல்லிய துக்கமுண்டாகிறதில்லை. இந்த அன்வய வ்யதிரேகத்தால் என்ன தெரியவருகிற தெனின், சோகமோஹாதிகள் அவித்தையால் உண்டானவை. மூல அவித்தையின் நிவிர்த்தியே இவைகளின் நிச்சேஷமான (மிச்சமில்லாத) நிவிர்த்தி. இது வித்தியை (ஞான) யால் தான் சாத்தியம். சுஷுப்தியில் இவைகள் லயமாயினும் சுத்தமாய் நிவிர்த்தியாக வில்லை.

70. ஒரே வேற்றுமையிலிருக்கும் இரண்டு பதங்களால் கூறப்படும் தன்மை. உதாரணம் :—नीलोघटः (கருத்த குடம்) என்னு மிடத்தில் முதல் வேற்றுமையிலுள்ள இரண்டுபதங்களாலும்சொல்லப்படுந்தன்மை சாமானாதிகரணியம். இந்த மந்திரத்தில் सर्वाणिभूतानि आत्मैवाभूत् என்னு மிடத்தில் भूतानि என்னும் முதல் வேற்றுமைப்பதத்தால் பூதங்கள் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. आत्मा என்னும் முதல் வேற்றுமைப் பதத்தால் ஈசுவரன் குறிப்பிடப்படுகிறான். ஆகவே சாமானாதிகரணியம் சித்திக்கிறது.

வி:-आत्मैवाभूत् அதாவது சகலபூதங்களும் ஆத்மாவாகவாகிறதென்கிற சாமாநாதிகரணம் கெடும் என்கிற சங்கையின் பேரில், பேதம் இருந்தபோதிலும் சாமாநாதிகரணியம் கெடாமலிருப்பதற்கு यस्य पृथिवीशरीरं (எதற்கு பூமிசரீரமோ) முதலிய சுருதிகளால் ஏற்பட்டிருக்கிற சம்பந்த விசேஷத்தைச் சொல்லுகிறார்.

एकत्वं.—ஆகிருதி 71; வியக்திகள் 72 போலவும், குண குணிகள்போலவும் வெவ்வேறாகவே யிருக்கும் ஜகத்துக்கும் பிரம்மத்துக்கும் பிரிவுதலடையாமலிருக்கும் சம்பந்த விசேஷத்துக்கு ஏகத்வம் என்று பெயர். அவ்விதமான ஏகத்துவத்தை

अनुपश्यत : = செவ்வையாக தியானம் செய்கிறவனுக்கு

रामसुग्रीवयोरैक्यं देव्येवं समजायत

(ஓ தேவி! இராம சுக்கிரீவர்களுக்கு ஐக்கியம் உண்டாயிற்று) முதலிய வாக்கியங்களில் ஐக்கிய சப்தமானது வாஸ்தவத்தில் பேதமுள்ளவர்களுக்கே சிநேகம் என்றும் சம்பந்தத்தைச் சொல்லுவதுபோல் இங்கிருக்கும் ஏகத்வ சப்தமும் பிரமத்துக்கும் ஜகத்துக்கும் மேற்சொன்ன சம்பந்த விசேஷத்தையே சொல்லுகிறதென்று கருத்து.

---

து:—இந்த மந்திரத்திற்குப் பிரமாண வாக்கியம் என்னவெனில்:—

यस्मिन् सर्वाणि भूतानि स आत्मा सर्वभूतगः ।
एवं सर्वत्र यो विष्णुं पश्यतस्तस्य विजानतः ।
को मोहः कोथवा शोकः स विष्णुं पर्यगाद्यतः ॥
(इति पिप्पलादशाखायां)

ஞானி விஷ்ணுவை அடைகிறதாக सविष्णुंपर्यगात् என்கிற கீழ் வாக்கியத்தில் சொல்லியிருப்பதால் அவனுக்கு சோகமோஹங்கள் இல்லாமற் போவது யுக்தமே. இதனால் மேல் (8-வது)மந்திரத்தின் அர்த்தத்தைக்கூட சொன்னதாக ஆகிறது. यस्तुसर्वाणिभूतानि என்னும் பூர்வ மந்திரத்தாலேயே எல்லாவற்றிற்கும் பரப்பிரம்மம் ஆதாரமாயிருப்பதால் எல்லாவற்றிலும் பிரவேசித்திருக்கிறது என்று சொல்லப்பட்டிருக்கிறது. அப்படி அறிந்தவனுக்குப் பயமில்லை என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. அந்த அர்த்தத்தையே இந்த வாக்கியத்தில் அனுவாதம் செய்துகொண்டு, அப்படி விசேஷமாய் அறியும் ஞானிக்கு சோக மோஹமின்மை என்னும் பலன்

---

71. உருவத்தின் இயற்கையான அமைப்பு. திருஷ்டாந்தம் :—கொம்பு, வால், தாடி, முதலியவைகளின் இயற்கையான சேர்க்கைக்கு ஆகிருதி என்று பெயர்.

72. இச்சேர்க்கையுள்ள வஸ்துவுக்கு வியக்தி என்று பெயர்.

வி:—सर्वाणिभूतानि आत्मैवाभूत् = பரமாத்மாவே சகல பூதங்களை யும் சரீரமாக உடையவனாகத் தோன்றினார்.

तत्र = அப்படித் தோன்றும் தியான சமயத்தில்

कः मोहः := மோஹமேது? ஆத்மா ஸ்வதந்திரன் என்கிற பிரமைமுதலிய மோஹம் சம்பவிக்க மாட்டாது.

कः शोकः := சோகமேது? பரமாத்மாவின் விபூதியாக அறியப் படும் சகல வஸ்துக்களிலும் 'என்னுடையது' என்னும் அபிமானம் போய்விடுகிறபடியால், புத்திரன் இறந்தாலும், இராச்சியம் போனு லும் துக்கம் உண்டாகிறதில்லை என்பது கருத்து. திருஷ்டாந்தம்:—

अनन्तंबतमेवित्तं यस्येम नास्तिकिञ्चन ।
मिथिलायां प्रदीप्तायां नमे किञ्चित्प्रदह्यते ॥

அளவற்ற தனம் எனக்கு இல்லை. அதாவது, எனக்கு அவைக ளிடத்தில் அபிமானமில்லை. ஆனதால் மிதிலாபட்டணம் கொளு த்தப்படும்போதும் எனக்குச் சொந்தமான வஸ்து ஒன்றும் தஹி க்கப்படவில்லை. (புராணவசனம்). இப்போது இதர மதஸ்தர்களு டைய சாமாநாதிகரணிய பாவத்தைச் சொல்லி தமமுடைய சித் தாந்தத்தை ஸ்தாபிக்கிறார்:—

सर्वाणिभूतानि आत्मैवाभूत् என்னும் சாமாநாதிகரணியத்தால் चोरः स्थाणुः என்கிற சாமாநாதிகரணியத்தில் கட்டையே திருடன் என்றால் எப்படிக் கட்டையைத்தவிர திருடன் இல்லை என்று ஏற் படுகிறதோ, அப்படிச் சர்வ பூதங்களே ஆத்மாவென்பதினால், ஆத் மாவைத் தவிர வேறு பூதங்களில்லை என்று சிலர் (அத்வைதிகள்) சொல்லுகிறார்கள்.

नरपतिरेवसर्वे लोकाः என்கிற இடத்தில் எல்லா ஜனங்களும் அரசனுக்கு அடங்கினவர்கள் என்று தோன்றுவதுபோல், சகல பூதங்களும் ஆத்மாவுக்கு அடங்கினவை என்று வேறுசிலர் (பாஸ்கரர்) சொல்லுகிறார்கள்.[1]

---

து:—சொல்லப்பட்டிருக்கிறது. மேலும் முன்மந்திரத்தில்விட இந்த மந்திரத்தில் எல்லாவற்றிலும் வசிக்கும் பரமாத்மா ஒருவனே என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. மேலும் तद्वावतः तद्दूरे முதலிய வசனங்களால் அடிக்கடி பகவானுடைய சர்வ வியாபகத்தன்மை சொல்லப்படுவதால் அப்பியாசம் என்னும் தாற்பரிய லிங்கம் ஏற் படுகிறது. அதனால் ஈசுவரன் எல்லாவற்றிலு மிருக்கிறான் என் பதில் சுருதிக்கு விசேஷ தாற்பரியம் இருக்கிறது என்று ஏற்படு கிறது. ஆகையால் ஒரே அர்த்தம் பலதடவை சொல்லப்படுவதில் பிரயோசனமில்லை என்று நினைக்கக்கூடாது. ॥ 7 ॥

8. सपर्यगाच्छुक्रमकायमव्रणमस्नाविरꣳ शुद्धमपापविद्धम् ।

कविर्मनीषीपरिभूः स्वयम्भूर्याथातथ्यतोऽर्थान् व्यदधाच्छाश्वतीभ्यःसमाभ्यः॥8

स: அந்த ஆத்மா

पर्यगात् = எங்கும் போகிறவன்,

शुक्रं = சுத்தமானவன்,

अकायं = சரீரமில்லாதவன்

अव्रणं = இரணமில்லாதவன், காயமில்லாததன்,

अस्नाविरं = நரம்பு இல்லாதவன்,

शुद्धं = நிர்மல மானவன்,

अपापविद्धं = பாப ரகிதமானவன்,

कवि: = மூன்று காலங்களையும் அறிகிறவன், சகலத்தையும் பார்க்கிறவன்;

मनीषी = மனதை நியமனம் செய்கிறவன், ஈசுவரன், ஸர்வஞ்ஞன்,

परिभूः = परिभवतिस : எல்லாவற்றிற்கும் மேலிருக்கிறவன்.

स्वयंभूः = (ஸ்வயமேவ பவதீதி ஸ்வயம் பூ:) தனக்குத்தானுயுண்டானவன்.

(सः) (இப்படிப்பட்ட நித்தியமுக்த ஈசுவரன்)

याथातथ्यत: சென்ற கர்மங்களின் பலானுஸாரமாக

अर्थान् = செய்யவேண்டிய பதார்த்தங்களை

शाश्वतीभ्यः = நித்தியமான

समाभ्य: = 'வருஷங்கள்' என்று பேருள்ள பிரஜாபதிகளுக்கு

व्यदधात् = ஏற்படுத்தினன், விபாகம் செய்தான்.

---

வி:—घटशरावादयस्सर्वे मृत्तिंड एव என்கிற இடத்தில் எப்படிமிருத்பிண்டமும், குடம் முதலியவைகளும் ஒரே வஸ்துவென்று தோன்றுகிறதோ, அப்படியே இவ்விடத்திலும் ஆத்மாவும் ஸர்வ வஸ்துக்களும் ஒரே வஸ்துவென்று ஒப்புக்கொள்ள வேண்டுமென்று இன்னும் வேறுசிலர் (யாதவ மிசிரர்) சொல்லுகிருர்கள்.

மேற்சொன்ன மதங்கள் வேதவிருத்தங்கள்.

இந்த விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தில் देवोहं मनुष्योहं முதலிய விடங்களில், தேவமனுஷிய சரீரங்களுக்கும் ஆத்மாவுக்கும் சரீராத்மபாவம் இருப்பதினுல் சாமானுதிகரண்யம் ஏற்படுவதுபோல் இவ்விடத்திலும் பரமாத்மாவுக்கும் ஜகத்துக்கும் சரீராத்மபாவத்தால் சாமானுதிகரணம் ஏற்படுகிறது. ॥ 7 ॥

ச:—அ-கை:—முந்தின மந்திரங்களிற் சொல்லப்பட்ட ஆத்மாவானது ஸ்வரூபத்தில் இன்ன பிரகாரமானது என்பதை இந்த எட்டாவது மந்திரம் சொல்லுகிறது.

**सपर्यगात्** : = முன் சொல்லப்பட்ட ஆத்மா

பரி அகாத் எங்கும் போகிறவன்; ஆகாசம்போல் வியாபித்திருக்கிறவன் என்று அர்த்தம்.

**शुक्रं** = சுத்தம், ஜ்யோதிஸ்போல் ஜ்வலித்துக் கொண்டிருக்கிறவன், பிரகாசஸ்வரூபன்.

**अकायं** = சரீர மற்றவன் ; லிங்கசரீர[73] மில்லாதவன் என்று அர்த்தம்.

---

வி:—அ-கை:—இப்போது ஏவுகிறவன், ஏவப்படுகிறவன் என்னும் தத்துவத்தை அறிந்தவனுடைய விசேஷத்தையும், அறியத்தகுந்த ஈசுவரனுடைய ஸ்வரூபத்தையும், தியான யோகத்தையும் உபதேசிக்கிறார்

**स:** சர்வ பூதங்களிலேயும் பிரம்மமே அந்தராத்மாவாக இருப்பதாய்ப் பார்க்கிறவன் **पर्यगात्** = அடைகிறான். **ब्रह्मवित् आप्नोतिपरं** என்னும் (तै II-1-1) வாக்கியத்தில் "பிரம்மத்தை அறிகிறவன் பிரம்மத்தை அடைகிறான்" என்னும் நியாயப்படி இவ்விடத்திலும் பிரம்மத்தை அடைகிறான் என்பது கருத்து. (அல்லது) **अत्रब्रह्मसमश्नुते** என்னும் (बृ4-4-7.) வாக்கியத்தில் தியானத்தினால் ஏற்படும் "அனுபவத்தினால இந்த லோகத்தில் பிரம்மத்தை அனுபவிக்கிறான்" என்பதுபோல், இந்த வாக்கியத்திலும் சமாதியால் ஏற்படும் அனுபவத்தால் பிரம்மத்தை அடைந்திருக்கிறான் என்று சொல்லப்படுகிறது.

**शुक्रं**=சுத்தம், தானாகவே பிரகாசிக்கிறது என்று கருத்து.

**अकायं**—எல்லாவற்றையும் சரீரமாக அடைந்திருந்தாலும், கர்மத்தால் ஏற்படும் சரீரமில்லாதது.

---

அ - கை :—ஹரியின் ஞானத்தால்மட்டும் சோகம் மோஹம் முதலியவைகள் இல்லாமல் போவதற்குக் காரணத்தைச் சொல்லுகிறார்.

**स:**=மேற் சொல்லிய ஞானி

**शुक्रं (शोकं हराति)** சோகமற்றதாயும், அரசனைப்போல் ஈசுவரனை அடைகிறவனுக்கு சோகாதிகள் உண்டாகாமலிருப்பானேனெனின் ஈசுவரன் சோகாதிகளற்றவன்.

**अकायं**=லிங்க தேஹமற்றதாயும்

---

73. சங்கராசாரியாருடைய ஆத்ம போதத்தில்

ச:—अव्रणं अस्नाविरंस्नाव:=நரம்புகள் यस्मिन् எவனிடத்தில் नविद्यन्ते இருக்கவில்லையோ அவன் अस्नाविरं. நரம்புகளில்லை, காயமில்லை என்று சொன்னதினுல் ஆத்மாவுக்கு ஸ்தூலசரீரம் நிஷேதிக்கப்படுகிறது (இல்லை என்று சொல்லப்படுகிறது).

---

வி:—नतस्य प्राकृतामूर्त्ति:मांसमेधोस्थि संभवा (भारतं-सभापर्वं) (கிருஷ்ண பரமாத்மாவுக்கு மாம்சம் முதலியவை சேர்ந்த பிராகிருத சரீரமில்லை) என்று பாரதத்தில் சொல்லி யிருப்பதால் பிராகிருத சரீரமில்லை என்று அர்த்தம் செய்யவேண்டுமே தவிர பிராகிருதமாகாத திவ்வியமங்கள சரீரமில்லை என்று அர்த்தம் செய்யக்கூடாது. உபநிஷத்துக்களிலும் திவ்வியமங்கள சரீரமிருப்பதாக ஆதாரமிருக்கிறது. எப்படியெனின்:—

(1) यत्तेरूपं कल्याणतमं तत्तेपश्यामि (ई 16) மிகவும் கல்லியாணமான உன்னுடைய ரூபத்தைப் பார்க்கிறேன்.

(2) य एषोऽन्तरादित्येहिरण्मय: पुरुषोदृश्यते (சா 1-6-6) சூரியமண்டலத்திற்குள் ஸ்வர்ணமயனை புருஷன் காணப்படுகிருன்.

(3) आदित्यवर्णं तमस: परस्तात् (पुरुषसूक्तं) பிரகிருதி மண்டலத்திற்கு வெளியில் சூரியனுக்குச் சமானமான வர்ணமுள்ள புருஷனை அறிகிருன்.

மேற்சொல்லிய வேதவசனங்கள் முதலிய ஆதாரங்களால் பகவானுக்கு அப்பிராகிருதமான திவ்விய சரீரமிருக்கிறதாக ஏற்படுகிறபடியால், அவ்விதமான சரீரங்கூட இல்லைஎன்று சொல்லக்கூடாது. ஆகையால் अकायं என்னும் பதத்திற்கு பிராகிருத சரீரம் இல்லை என்றே அர்த்தம் செய்யவேண்டியது.

अव्रणं=கர்மத்தாலுண்டாகக் கூடிய சரீரமின்மையால் காயம் முதலியவைக ளற்றது.

अस्नाविरं= நரம்புகளற்றது.

---

து:—अव्रणं=காலத்தால் நித்தியமாயும் குணத்தால் பூரணமாயும்

अस्नाविरं=நரம்பு என்பதினுல் குறிப்பிடப்படும் ஏழு தாதுக்களுடன் கூடிய ஸ்தூல சரிரமற்றதாயும். अकाय சப்தத்தால் பொதுவாய் சரீரமில்லாதது என்று அர்த்தமாளுலும் अस्नाविरं என்பதினுல் ஸ்தூலசரீரமில்லை என்று வியக்தமாய்ச் சொல்லியிருப்பதால் अकायं என்பதினுல் லிங்கதேகமற்றது என்றே அர்த்தம் செய்யவேண்டும்.

---

पञ्चप्राणमनोबुद्धिदशेन्द्रियसमन्वितं ।
अपञ्चीकृतभूतोत्थं सूक्ष्माङ्गंभोगसाधनं ॥

என்கிற சுலோகத்தில் சொல்லியபடி 5 - பிராணன்கள், 10 - இந்திரியங்கள், மனது, புத்தி இந்த 17-தத்துவங்களும் சேர்ந்தது சூட்சும சரீரம், அதாவது, லிங்க சரீரம் உண்டாகிறது.

शुद्धं : [74]—அவித்தையாகிற மலமில்லாதபடியால் காரண சரீரம்[75] நிஷேதிக்கப்படுகின்றது.

अपापविद्धम्[76] :—தர்மம், அதர்மம் முதலிய பாபங்களற்றவன்.

शुक्रम्…अपापविद्धम् :—சுக்ரம் முதல் அபாபவித்தம் வரையிலு

---

வி:—शुद्धं =அஞ்ஞானம் முதலிய தோஷங்களற்றது. பசிமுதலிய ஆறுதோஷங்களற்றது.

अपापविद्धं = அஞ்ஞானம் முதலியவைகளுக்குக் காரியங்களாயும் காரணங்களாயு மிருக்கிற புண்ணியபாவமென்னும் கர்மங்களற்றது.

---

து:—शुद्धं=சுத்தம் செய்யக்கூடியதாயும்

अपापविद्धं=பிர்ம்மம் சுத்தமாயிருப்பதால் பாபபீடையற்றதாயும் (ஆகையால் ஸ்தூல சூட்சும சரீரங்களற்றதாயும், ஆகையால் சரீரத்தாலுண்டாகும் சோகம் முதலியவைகளற்றதாயும் என்று முன்சொல்லப்பட்டது) இருக்கிற

(हरिं)=(ஹரியை)

पर्यगात्=அடைந்தான். இப்படி ஹரியை அறிவதினுல் சோக மோஹங்கள் உண்டாகிறதில்லை. இப்படிப்பட்ட பகவானுடைய ரூபம்போல் ரூபத்தை அடைந்தவன் துக்கம் முதலியவைகளை அடையாமலிருப்பது யுக்தமே என்பது கருத்து.

---

74. சுத்த மென்பதினுல் தான் ஸ்வயம் ஆவரணமில்லாதவன் என்றும், சுக்கிர மென்பதினுல் ஜடபதார்த்தங்களைப் பிரகாசிப்பிக்கிறவன் என்றும் அர்த்தம் செய்தால் பௌனருக்தி (சொன்னதையே சொல்லுதல்) என்கிற தோஷம் சம்பவிக்கமாட்டாது.

75. அவித்தையே காரணசரீரம் (பஞ்சதசி I - 17). அவித்தைதான் ஸ்தூல சூட்சும சரீரங்களுக்குக் காரணம். ஆகையால் அதுவே காரண சரீரமாகச் சொல்லப்படுகிறது. 'சரீரம்' என்னும் பதத்திற்கு 'கலகலத்துப் போகத்தக்கது' என்று அர்த்தம். தத்வஞான முண்டானவுடன் அது நாசமாகக் கூடியது.

76. புனர்ஜன்மத்திற்கு ஹேதுவான தர்மாதர்மங்களாகிற பாபங்கள் இவனை ஒட்டுகிறதில்லை. புண்ணிய கர்மங்களையும் பாபங்களாகச் சொல்லலாமோ வெனின், ஸ்வர்காதிகளைக் கொடுக்கும் புண்ணிய கர்மமும், நரகாதிகளைக் கொடுக்கும் பாபகர்மம்போல் மோக்ஷத்தைக் கொடுக்கும் விஷயத்தில் பிரதிபந்தகமாயிருப்பதால் புண்ணியமும் பாபமாகவே பாவிக்கப்படுகிறது. பிரம்ம சூத்திரம் 4 - 1 - 13ன் பாஷியத்தில் சங்கராசாரியர் இதைப்பற்றி விஸ்தாரமாக எழுதியிருக்கிறார்.

ச:—ள்ள பதங்கள் பலர்பாலில் உபயோகிக்கப் பட்டிருந்தாலும் ஆண்பாலிலேயே அவைகளை எடுத்துக்கொள்ள வேண்டியது. ஏனெனின், மந்திரம் स: என்கிற ஆண்பால் பதத்துடன் துவங்கி कविः मनीषी முதலிய ஆண்பால் பதங்களுடன் முடிவுபெறுகிறது.

कविः = नान्यतोऽस्तिद्रष्टा "அவனைத்தவிர வேறே பார்க்கிறவன் இல்லை" என்கிற (பிர-3-7-23) முதலிய சுருதி வசனங்களால் ஆத்மா மூன்றுகாலங்களையும் அறிகிறவன், சகலத்தையும் பார்க்கிறவன்.

---

வி:—नशोको नसुकृतं नदुष्कृतं (சா 8-4-1)(சோகமில்லை) சுகிருதமில்லை, துஷ்கிருதமில்லை என்று ஆரம்பித்துக்கொண்டு सर्वेपाप्मानोऽतोनिवर्त्तन्ते (சா-8-4-2) (எல்லா பாபங்களும் ஞானியிடத்தினின்றும் விலகி விடுகின்றன) என்ற இடத்தில் 'பாப' சப்தத்தால் புண்ணியம் பாபம் இவ்விரண்டையும் குறிப்பிட்டிருப்பதால், இவ்விடத்திலும் अपापविद्धं என்கிற பதத்தாலும் புண்ணியம் பாபம் இவ்விரண்டும் அற்றது என்று அர்த்தம் செய்யவேண்டியது.

மேற்சொன்னபடி சகலவிததோஷமற்ற பரமாத்மாவைஞானி पर्यगात् அடைகிறான் என்று அன்வயம் செய்துக்கொள்ள வேண்டியது.

कविः—(அ-கை) மேற்சொன்னபரமாத்மா எவனுக்கு அடையத் தகுந்தவனாகவும், அடையும்படி செய்கிறவனாகவும், அடையும் உபாயமாகவும் இருக்கிறானோ, அப்படிப்பட்ட ஞானியைப்பற்றிச் சொல்லுகிறார்.

---

து:— சங்கை :—பகவானுக்குச் சரீரமில்லாவிடின் அவர் சிருஷ்டிசெய்ய சமர்த்தராகமாட்டார். ஏனெனின் சரீரத்துடன் கூடினவனிடத்தில்தான் கடாதிகளை உண்டுபண்ணும் தர்மம் காணப்படுகிறது. கிளிஞ்சலில் வெள்ளிபோல் பரமாத்மாவினிடத்தில் ஜகத்து காணப்படுவதால் சரீரம் வேண்டியதில்லை என்று சொல்லக் கூடாது. ஏனெனின் அதைப்போல ஜகத்து பாதிக்கப்படாததினால் ஜகத்து சத்தியம். இப்படி அனாதி அநந்த காலீனமான ஜகத்தை சிருஷ்டிக்கும் விஷ்ணுவுக்கு எப்படி சரீரமில்லை என்று சொல்லலாம்.

உத்தரம்:—ஈசுவரனுக்கு ஜடசரீரமில்லாவிட்டாலும், ஞானம் முதலியவைகளையே சிரசுமுதலிய அவயவங்களாக உடையவன் என்று சொல்லலாம். இப்படி ஈசுவரன் இருப்பதால் சிருஷ்டிக்கிறான் என்று சொல்லப்படுகிறான். இது कविः முதலியவைகளால் சொல்லப்படுகிறது.

कविः=சர்வஞ்ஞன் "

ச:—मनीषी = மனதை நியமனம் செய்கிறவன்.

परिभूः स्वयंभूः = எல்லாவற்றிற்கும் மேற்பட்டவன்; தன் ஸ்வ

---

வி:—कविः—வியாசாதிகள்போல, பரம புருஷனுடைய ஸ்வரூபம், விபூதி, கல்யாணகுணங்கள் முதலியவைகளைச் சொல்லும் கிரந்தங்களைச் செய்கிறவன். அல்லது, கிராந்ததர்சி=யோகாப்பியாசமில்லாத மனதால் அறியப்படாத பரிசுத்த ஜீவாத்மஸ்வரூபத்தினிடத்தில் சுத்தமாகவும் தொடர்ச்சியாயு மிருக்கிற ஸ்மரணை ரூபமான ஞானயோகத்துட னிருக்கிறவன் 77. கர்மயோகம் कुर्वन्नेवेहकर्माणि என்னும் 2-வது மந்திரத்திலேயே சொல்லப்பட்டிருக்கிறது.

मनीषी: — (அ-கை) ஞானயோகத்தால் சாதிக்கக் கூடியதாயும் ஜீவனுடைய சாக்ஷாத்காரத்துக்குக் காரணமாயு மிருக்கிற ஜீவாத்மயோகம் 78 சொல்லப்படுகிறது.

मनीषी = மனதை ஏவும்படியான புத்தியை யுடையவன். பகவானுடைய அழகு, நல்ல ஸ்வபாவம் முதலிய குண விசேஷங்களை அடிக்கடி ஸ்மரிப்பதினாலும், பகவானைத் தவிர வேறு விஷயங்களில் வைராக்கியத்தாலும் மனதை அடக்குகிறவன். இதற்கு ஆதாரமான பகவத்கீதா வசனம்:—

असंशयं महाबाहो मनो दुर्निग्रहंचलं ।
अभ्यासेनच कौन्तेय वैराग्येणच गृह्यते ॥
(गी 6-35).

உத்தம சுகரூபமான தன் ஸ்வரூப சாக்ஷாத்காரத்துக்காக, தன்னுடைய ஸ்வரூபத்தில் மனதை நிறுத்தும் செய்கையான யோகாப்பியாசத்தைச் செய்துக்கொண்டிருக்கிறவன் என்று मनीषी என்பதற்கு அர்த்தம்.

परिभूः ஜயிக்கத் தகாத காமக்குரோதம் முதலிய சத்துருக்

---

து:—मनीषी=பிரகிருதி (இலக்ஷ்மி) முதலிய சகலமானவர்களின் மனதை நியமனம் செய்கிறவன். இதனால் ஞானத்துடன் கூடின தேகமுடையவன் என்று சித்திக்கிறது. அந்த சரீரம் அப்பிராகிருதம். பிராகிருத சரீரமில்லாமையால் சோகம்முதலியவைகளின்மை யுக்தமே, பிராகிருத சரீரமே சோகாதிகளுக்குக் காரணமாயிருத்தலினால்.

परिभूः=சகலத்தையும் தன்னுடைய வசத்தில் வைத்துக்கொ

---

77. 3-வது குறிப்பைப் பார்க்க.
78. 5-வது குறிப்பைப் பார்க்க.

ச:—பாவத்தாலேயே தான் இருக்கிறவன் (தன்னுடைய ஸ்திதி வேறு ஒன்றினால் ஏற்பட்டதல்ல.) எவற்றிற்கு மேலாக இருக்கிறதோ, எதுமேலாக இருக்கிறதோ அது சர்வமுந் தானாகவே இருக்கிறது. மேலும், நித்திய முக்தனான ஈசுவரன்

याथातथ्यत: ... समाभ्य: = சர்வஞ்ஞனா யிருப்பதால் உள்ளபடியான கர்மபல சாதனமாகச் செய்யத்தக்க பதார்த்தங்களை வெகு காலத்திற் கிருப்பனவாகிய சம்வத்சரமென்னும் பிரஜாபதிகளுக்கு (வெகுகால போக சாதனமாக) தக்கபடி பிரித்துக்கொடுத்தார்.॥8॥

---

வி:—களை அவமதிக்கிறவன், இதனால் விரோதங்களை விலக்கும் ஞானங்கத்தின் அனுஷ்டானம் சொல்லப்பட்டது.

स्वयंभू: (அ-கை) யோகாப்பியாசத்தின் பலன் 79 சொல்லுகிறார். வேறு ஒன்றையும் அபேக்ஷிக்காம லிருக்கும் தன்மையுடையவன். நித்தியமாயும் மேன்மையாயும் இருக்கிற சுகஸ்வரூபமாக தன்னுடைய ஆத்மாவை பார்க்கிறவன்80.

याथातथ्यत: உள்ளபடி பகுத்து

अर्थान् ஓங்காரத்தின் அர்த்தங்களை

(1) तस्यवाचक: प्रणाव: (2) तज्जप: तदर्थभावनंवा (योगसूत्र) (1) ஈசுவரனைச்சொல்லும் வசனம் பிரணவம் (2) பிரணவத்தின் ஜபம் அதின் அனுசந்தானம் இந்த சூத்திரங்களாற் சொல்லப்பட்டஅர்த்தங்களை அதாவது ஈசுவரனை என்று கருத்து.

व्यदधात् மனதில் நிலைநிறுத்தினான்81.

---

து:—ள்ளுகிறதினால் எல்லாவற்றையும் விட சிரேஷ்டன்.

स्वयंभू:=வேறு யாதொன்றையும் அபேக்ஷிக்காமல் தானாகவே இருக்கிறவன். எக்காலத்திலும் யாதொன்றையும் ஆசிரயிக்காதவன் என்று கருத்து. இப்படிப்பட்ட ஹரி,

शाश्वतीभ्य: समाभ्य:=ஐந்தாம் வேற்றுமையை ஏழாம் வேற்றுமையில் அறியவேண்டியது; அநாதி அநந்தகாலங்களில்

याथातथ्यत: =யதார்த்தமா யிருக்கிற

अर्थान्=பதார்த்தங்களை

व्यदधात् =நிர்மாணஞ்செய்தான்.

---

79. மனிஷி என்னும் பதத்தால் சொல்லப்படும் ஜீவாத்ம யோகம்.

80. மேற்சொல்லிய ஜீவாத்ம யோகத்தின் பலனான ஜீவசாக்ஷாத்காரம்.

81. இதனால் பக்தியோகம் ஏற்படுகிறது.

(வேறு அர்த்தம்:—)

வி:—अर्थान् = மோக்ஷம், அதற்கு உபாயம், அதற்கு விரோதி முதலிய எல்லா பதார்த்தங்களையும்

शाश्वतीभ्यः समाभ्यः வெகுநாள்வரையில், அதாவது, பிரம்மத்தை அடையும்வரையில்

याथातथ्यतः = உள்ளபடி

व्यदधात् = பகுத்து மனதில் தரித்தான், சகல விக்கினங்களின் நிவிர்த்தியின்பொருட்டு என்று கருத்து.

இதுவரையில் शुक्रं முதலிய இரண்டாம் வேற்றுமையிலிருக்கும் பதங்களை பரமாத்மபரமாயும், सः कविः முதலிய முதல்வேற்றுமையிலிருக்கும் பதங்களைஜீவபரமாயும் அர்த்தம்செய்யப்பட்டது. இப்போது முதல் வேற்றுமை பதங்களை பரமாத்மபரமாயும் இரண்டாம் வேற்றுமை பதங்களை ஜீவபரமாயும் அர்த்தம் செய்கிறார். எப்படியெனின்:—

कविः = தானே சர்வத்தையும் அறிந்தவன், அல்லது பாஞ்சராத்திரம் முதலிய சாஸ்திரங்களைச் செய்கிறவன்.

मनीषी = மனது முதலிய ஜீவனுக்குச் சாதனமான இந்திரியங்களை ஏவுகிறவன்.

---

து:—याथातथ्यतः என்னும் பதத்திற்குப் பிரயோஜனம்:—தேகமில்லாத பிரமம் சிருஷ்டி எப்படிச்செய்யும் என்று ஆக்ஷேபத்தைக்கிளப்பி ஞானரூப தேகமிருக்கிறதென்று சமாதானம்சொன்னதை பூர்வபக்ஷிகேட்டு, அத்தியாசரூபமே சிருஷ்டியாயிருப்பதால் அதிஷ்டானமான பிரமத்துக்கு ஏன் தேகமிருப்பதாகச் சொல்லவேண்டும் என்று பூர்வபக்ஷி ஆக்ஷேபித்தால், அதற்கு உத்தரம என்னவெனின், சிருஷ்டி அத்தியாசமாக இருந்தால் தேகம்வேண்டியதில்லை. ஆனால் சிருஷ்டிக்கப்பட்ட பதார்த்தங்கள் சத்தியமாயிருப்பதால் தேகம்வேண்டியதே. ஏனெனில் பிரமம் அதிஷ்டானமன்று, (பிதாபோல் கர்த்தாவானபடியால்). शाश्वतीभ्यः समाभ्यः என்று சொன்னதற்குப் பிரயோஜனம்:—எப்போதும் தேகமில்லாவிட்டாலும் சிருஷ்டிசமயத்தில் தேகத்தை எடுத்துக்கொள்ளலாமே எனின், எப்போதும் சிருஷ்டிமுதலியவை நடந்துகொண்டிருப்பதால் தேகமும் எப்போதுமிருக்கிறது என்கிற சமாதானம் இப்பதங்களால் சூசிப்பிக்கப்படுகிறது. சிருஷ்டிமுதலியவைகளின் பிரவாஹம் ஆதி அந்தமில்லாமலிருக்கிறது. முன் மந்திரங்களிற் சொல்லிய ஆத்மா ஸ்வரூபத்தில் எப்படிப்பட்டவன் என்றுகேட்டால் सपर्यगात् அவன் வியாபித்திருக்கிறவன் என்று அத்வைதிகள்

வி:—परिभूः = எங்கும் நிறைந்தவன்.

स्वयंभूः = கர்மமன்றியில் தானாகவே அவதரிக்கிறவன் बहुधा व्यजायते (அநேகவிதமாக உண்டாகிறான்) என்னும் புருஷசூக்தம் முதலிய சுருதிகளிற் பிரசித்தமான அவதாரங்களை உடையவன்.

सः = இப்படிப்பட்ட பரமாத்மா

शुक्रं = வாஸ்தவத்தில் ஸ்வப்பிரகாசமாயும்

अकायं = சரீரத்தைவிட விலக்ஷணமாயும்

अव्रणं = ஸ்வரூபத்தில் விரணமற்றதாயும்

अस्नाविरं = ஸ்வரூபத்தில் நரம்பற்றதாயும்

शुद्धं = சுத்தமாயும்

अपापविद्धं = ஸ்வரூபத்தில் பாபமற்றதாயும் இருக்கிற இப்படிப்பட்ட ஜீவஸ்வரூபத்தை

पर्यगात् = எங்கும் வியாபித்திருக்கிறான். இவ்விடத்தில் कविः முதலிய பதங்களால் பரமாத்மாவுக்கு குணங்களைச்சொல்லியிருப்பதாலும், சாந்தோக்கியத்தில்(8-1-5) आत्मा अपहतपाप्मा विजरो विमृत्युः विशोको विजिघत्सोऽपिपासइति (இந்த ஆத்மா பாபமற்றவன், கிழத்தனமற்றவன், மரணமற்றவன், துக்கமற்றவன், பசியற்றவன், தாகமற்றவன்) என்று கெடுதலான குணங்களை நிஷேதித்து,

து:—சொல்லுகிறார்கள். இது பொருந்தாது. ஏனெனின் शुक्रं முதலிய இரண்டாம்வேற்றுமை பதங்கள் ஆத்மாவுடன் அன்வயிக்கமாட்டா. शुक्रं முதலிய பதங்களை முதல் வேற்றுமையிலேயே அறியலாமேயெனின் ஆண்பாலான सः என்பது பலவின்பாலான சுக்கிரம் முதலியவைகளுடன் அன்வயிக்கமாட்டாது. இரண்டாம் வேற்றுமையிலுள்ள பதங்களை முதல்வேற்றுமையில் அறியலாமேயெனின், அதை கதியில்லாதவிடத்தில் அங்கீகரிக்க வேண்டியது. மேலும் स्वयंभूः என்பதற்கு தானாகவே எல்லாவஸ்துவாயிருக்கிறான் என்று அர்த்தம் செய்வதும் कविः मनीषी என்பவைகளுடன் பொருந்தாது.

## 8-வது மந்திரத்திற்கு பிரமாணவாக்கியம்:—

शुक्रंतच्छोकराहित्यादव्रणं नित्यपूर्णतः ।
पावनत्वात्सदाशुद्धमकायं लिंगवर्जनात् ॥
स्थूलदेहस्यराहित्या दस्नाविरमुदाहृतम् ।
एवंभूतोपिसार्वज्ञ्या त्कविरित्येवशब्यते ॥
ब्रह्मादिसर्वमनसां प्रकृतेर्मनसोपिच ।
ईशितृत्वान्मनीषी सपरिभूः सर्वतोवरः ॥
सदाऽनन्याश्रयत्वाच्च स्वयंभूः परिकीर्तितः ।
ससत्यंजगदेताद्यक्षिन्त्यमेव प्रवाहतः ॥

9 अन्धन्तमः[82] प्रविशन्तियेऽविद्यामुपासते ।

ततोभूय इवतेतमोय उविद्याया ँ रताः ॥

சு:—ये = எவர்கள்

अविद्यां = विद्यायाः + अन्या = अविद्या + तां = अविद्यां = வித்தைக்கு அந்நியமானது, அதாவது கர்மத்தை

उपासते = அனுஷ்டிக்கிறார்களோ

(ते) = (அவர்கள்)

अन्धं = பார்க்கப்படாத

तमः = இருட்டை

प्रविशन्ति = பிரவேசிக்கிறார்கள்.

ये = எவர்கள்

उ = ஆனால்

---

வி:—सत्यकामः (சா-4-4-1) सत्यसंकल्पः (சா-3-14-2) (எப்போதும் நிறைவேறக்கூடிய இச்சையை உடையவன், எப்போதும் நிறைவேறக்கூடிய சங்கற்பத்தை உடையவன்) என்று மேன்மையான குணங்களைச் சொல்லி யிருப்பதாலும், இதர இடங்களில் निर्गुण (குணமற்றவன்) என்னும் குண நிஷேதத்தைப் பொதுவாய்ச்சொல்லும் பதங்களும் கெடுதலான குணங்களில்லை என்றே சொல்லுகின்றன என்று அர்த்தம்.

अर्थान् = காரிய பதார்த்தங்களை

शाश्वतीभ्यः समाभ्यः = வெகுநாள் வரையில் அதாவது நாசமடையும் வரையில் இருக்கும் பொருட்டு

याथातथ्यतः = உள்ளபடி

व्यदधात् = பகுத்து உண்டுபண்ணினன். இந்திரஜாலவித்தை செய்கிறவன்போல் பதார்த்தங்களை காண்பிக்கமட்டுமில்லை, ஆனால் வாஸ்தவமாய் செய்தான் என்றுகருத்து. ॥ 8 ॥

---

து:—अनाद्यनन्तकालेषु प्रवाहैकप्रकारतः ।
नियमेनैवससृजे भगवान्पुरुषोत्तमः ॥
सज्ज्ञानानन्दशीर्षोसौ सज्ज्ञानन्दबाहुकः ।
सज्ज्ञानन्ददेहश्च सज्ज्ञानन्दपादवान् ॥
एवंभूतोमहाविष्णु र्यथार्थं जगदीदृशम् ।
अनाद्यनन्तकालीनं ससर्जात्मेच्छयाप्रभुः ॥
(इति वाराहे) ॥ 8 ॥

---

82. இதே மந்திரம் बृह 4-4-10ல் வருகிறது. வா. ச. யில் இது 12-வது மந்திரம்.

ச:—विद्यायां = தேவதாஞான ரூபவித்தையில் அதாவது உபாசனையில்

रताः = ஆசக்தியுள்ளவர்களாக இருக்கிறார்களோ

ते = அவர்கள்

ततः = அதைவிட

भूयः = விசேஷமான

तमः = இருட்டை

इव = நிச்சயமாக

प्रविशन्ति = பிரவேசிக்கிறார்கள்.

## சங்கரபாஷ்யம்.

அ - கை :—ஆசாரியர் முதல் 8 மந்திரங்களுக்கும் 9 முதல் மேல் மந்திரங்களுக்கு விஷயங்கள் வெவ்வேறு[83] என்று (பிரகரணங்களை விபாகம்செய்து காட்டவேண்டும் என்கிற இச்சையுடையவராய் சொன்ன அர்த்தத்தை அனுவாதமாகச்சொல்லுகிறார். இந்த உபநிஷத்தின் முதல்மந்திரத்தின் ईशावास्यमिदंसर्वं मागृधः कस्यास्विद्धनम् (அதாவது, இது எல்லாம் ஈசுவரனால் மறைக்கத்தக்கது. ஒருவனுடைய தனத்தையும் இச்சிக்கவேண்டாம்) என்னும் வசனத்தால் சகல இச்சைகளையும் விட்டு அவ்விடுபாட்டின் வாயிலாக ஞான

வி:—அ-கை:—மேற்சொன்னபடி விசித்திரமான சக்தியுடைய பரமாத்மாவின் கர்மயோகம் முதலிய சாதனத்துடன்கூடிய உபாசனத்தை[84] உபதேசித்து, இனிவரும் 3 சுலோகங்களால், கர்மத்தைமட்டும் ஸ்வீகரித்தவனையும், வித்தையைமட்டும்[85] ஸ்வீகரி

து:—அ-கை :— विजानतः अनुपश्यतः என்னும் இடத்தில் பகவானுடைய எதார்த்தஞானம் முக்திக்குக்காரணம் என்று சொல்லப்பட்டது. பகவானுடைய வாஸ்தவஞானத்தால்மட்டும் முக்தியுண்டாக மாட்டாது. ஆனால் பகவானுடைய ஞானமும் விபரீதஞானத்தின் நிந்தனையும் இரண்டும் சேர்ந்துதான் முக்தி உண்டாகவேண்டும். என்பதை இதுமுதல் மூன்று மந்திரங்களால் சொல்லுகிறார்.

83. ஆக்ஷேபம் :—பூர்வ மீமாம்ஸையின் வார்த்திக காரரான பட்டருடைய சிஷ்யரான **பாஸ்கராசாரியர்** சொல்லுவதாவது :—சகல உபநிஷத்துக்களும் பிரம்ம வித்தையாகிற ஒரே பிரகரணம். ஆதலால் பிரகரணங்கள் வெவ்வேறு என்று சொல்லுவது அனுசிதம்.

84. 8-வது மந்திரத்தில் अर्थान्व्यदधात् என்கிற பிரணவார்த்தமான ஈசுவரனை மனதில் நிலைநிறுத்தினான் என்னும் அர்த்தத்தால் சூசிப்பிக்கப்படும், பக்தி, அல்லது உபாசனை.

85. உபாசனை.

ச:—நிஷ்டை சொல்லப்பட்டது. இதுமுதலாவது வேதார்த்தம். ஜீவித்திருக்க இச்சிக்கும் அஞ்ஞானிகளுக்கு ஞானநிஷ்டை சித்திக்கமாட்டாதாகையால் " कुर्वन्नेवेहकर्माणि जिजीविषेत् " (அதாவது கர்மங்களைச் செய்துகொண்டே ஜீவிக்க இச்சிக்கக்கடவது) என்று கர்மநிஷ்டை சொல்லப்பட்டது. இது இரண்டாவது வேதார்த்தம்.

இந்த இரண்டு மந்திரங்களில் காண்பிவிக்கப்பட்ட (ஞானகர்ம) நிஷ்டைகளின் விபாகம் 86 बृहदारण्यक உபநிஷத்திலும் காட்டப்பட்டிருக்கிறது. எப்படியெனின் :—

---

வி:—த்தவனையும் நிந்தித்துக்கொண்டு வர்ணாசிரம தர்மங்களுடன் கூடிய வித்தையினாலேயே மோக்ஷமடையப் படவேண்டுமென்று சொல்லுகிறார். இந்தமந்திரம் பிருகதாரணியகத்திலும் (4-4-10) சொல்லப்பட்டிருக்கிறது.

---

து:—அவைகளிலும் முதல் மந்திரத்தில், எதார்த்தஞானம் அவசியம்போல் அந்நியதாஞான நிந்தனையும் அவசியம் என்று நிரூபிக்கும்பொருட்டு, அந்நியதா ஞானத்தால் கிடைப்பதாக, (3 வது மந்திரத்தில்) சொல்லிய அசுர்யலோகத்தை விட, அதிக துக்ககரமான லோகம் அந்நியதாஞானத்தை நிந்திக்காதவனுக்கு உண்டாகிறது என்று முன்சொன்னதை அனுவாதம் செய்துகொண்டு சொல்லுகிறார்.

---

ச:—உத்தரம்:—இந்த ஆக்ஷேபம் பொருந்ாது. ஏனெனின் (1) பிராணன் முதலியவைகளின் உபாசனைவிதிகளும் சாந்தோக்கியத்தில் (I-2-7) காண்பிக்கப்பட்டிருக்கின்றன. இந்த உபாசனையும் பிரம்மஞானத்திற்கு அங்கம் (சாதனம்) என்று சொல்லத்தக்கதன்று. ஏனெனின் அதற்கு பலன் வேறு என்று சுருதி சொல்லுகின்றது. (சா. 1 - 2 - 8 பார்க்க). (2) மேலும் பாஸ்கராசாரியருக்கே வியாகிருத அவ்வியாகிருதங்களின் உபாசனைகளின் சமுச்சய விதானம் (இது இந்த உபநிஷத்தின் 12-வது மந்திரத்தில் வரப்போகிறது) பிரகரண பேதத்தால் இஷ்டந்தான். ஏனெனின் வியாகிருத அவ்வியாகிருதங்களின் உபாசனைகள் கர்மத்தைவிட வேறு பிரகாரங்களானவை. ஒவ்வொரு கர்மத்திற்கும் அதிகாரி வெவ்வேறாயிருப்பதினால், எப்படி கர்ம காண்டத்தில் அக்கினிஹோத்திர முதலிய கர்மங்கள் உபாசனையைவிட வேறு பிரகரணமாக அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றனவோ, அப்படி உபநிஷத்துக்களிலும் கர்மத்திற்கு விரோதமாகாத (தேவதாஞான) பிரகரணமும் கர்மத்திற்கு விருத்தமான பிரம்மஞானப் பிரகரணமும் அதிகாரிகளின் பேதத்தால் விருத்தங்களாகமாட்டா.

86. இந்த மந்திரங்களின் அர்த்தம் பிராமண பாகத்திலும் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கின்றது என்பதைக் காட்டுகிறார்.

ச:—1-வது கர்மநிஷ்டை:— सोऽकामयतज्यायामेस्यात् (ப்ருஹ 1-4-17) (அதாவது எனக்கு பத்தினி இருக்கவேண்டும் என்று அவன் இச்சித்தான்) முதலிய வசனங்களால் அஞ்ஞானியான காமிக்கு (ஆசையுள்ளவனுக்கு) கர்மங்கள் சொல்லப்பட்டன. அந்த மந்திரத்திலேயே मन एव अस्य आत्मा वाक्ज्याया (மனதே 87 இவனுக்கு ஆத்மா வாக்கு பத்நீ) முதலிய வசனத்தால் அஞ்ஞானமும் இச்சையும் கர்மநிஷ்டனுக்கே என்று நிச்சயமாய் தெரியவருகிறது. இந்த கர்மங்களுக்குப் பலன் :—ஸப்தான்னஸர்கஃ 88 அதாவது

---

87. அஞ்ஞானத்தன்மை இந்த வாக்கியத்தில் எப்படி அறியப்படுகிறது? இந்தச் சங்கையை நிவர்த்திக்கும் பொருட்டு சொல்லுகிறார் :—எப்படி வெளியிலுள்ள இஷ்ட பதார்த்தங்களை அடைய முடியாமல் தூக்கத்தில் அவைகளை அடைந்ததாகச் சந்தோஷமடையும் புருஷன் பிரசித்தமான அஞ்ஞானியோ, அப்படி தனக்கு பத்நீ வேண்டும், புத்திரன் வேண்டும், தனம் வேண்டும், பிறகு நான் கர்மம்செய்வேன் என்று ஆசைப்படுகிறவனுக்கு எப்போது உலகப்பிரசித்தமான ஸ்திரீ தனம்முதலியவை கிடைக்கவில்லையோ அப்போது சுருதி இவனுக்கு "மனதே ஆத்மா, வாக்கு பத்நி, கண்முதலியவை தனம்" என்று சரீரத்திற்குள்ளேயே ஸ்திரீமுதலியசம்பத்தைக் காட்டுகிறது. மனது முதலியவைகளை ஆத்மா(தான்)முதலியவையாகப்பாவித்தலே அஞ்ஞானகாரியம். பிரத்தியக்ஷமாய் ஸ்திரீயை அனுபவிக்காமல் ஸ்வப்நத்தில் மனதால் கற்பிக்கப்பட்ட ஸ்திரீயை அனுபவிக்கிற புருஷன் எப்படி அஞ்ஞானியோ அப்படி வாக்கை ஸ்திரீயாக பாவிக்கிறவனும் அஞ்ஞானியே. இதுபோல் மனதுமுதலியவைகளில் ஆத்மா முதலியவைகளின் அபிமானத்தை வைப்பது அஞ்ஞானகாரியமாதலால் அஞ்ஞானத்தன்மையின் அடையாளம் சித்தம்.

88. இந்த கர்மங்களுக்குப் பலன் சம்சாரபிராப்தியே என்பது அந்த बृह உபநிஷத்திலேயே காட்டப்பட்டிருக்கின்றது என்று சொல்லுகிறார். "இந்த ஜீவரூபபிதா ஏழு அன்னங்களை தியானத்தாலும் கர்மத்தாலும் உண்டாக்குகிறான்." முதலிய சுருதி வசனங்களால், சுப அசுப ரூப ஞான கர்மங்களால் சகலசம்சாரமும் சாக்ஷாத்தாயும் பரம்பரையாயும் உண்டாகிறபடியால், பிதாரூபயாகம் செய்யும் ஒவ்வொரு ஜீவனும் ஏழு அன்னங்களை சிருஷ்டிக்கிறான் என்று ஏற்படுகிறது. ஒன்று புஜிக்கப்படும் சாதாரணமான அன்னம்; (2) ஹுதம் (3) ப்ரஹுதம் இவை தேவதைகளைச் சேர்ந்தவை ஜீவனுடைய போகத்திற்குச் சாதனங்களான (4) மனது (5) வாக்கு (6) பிராணன்; (7) பசுக்களின் பொருட்டு பால்ரூபமான அன்னம். இவை ஏழு அன்னங்களாம் இவைகள் புருஷனுடைய கர்மத்தால் உண்டாவதால், இவன் பிதா இவைகளில் "இதின்பிதா நான்" "இது என்னுடையது" என்கிற அபிமானமாகிற சம்சாரம் உண்டாகிறது.

ச:—7 வித அன்னங்களின்சிருஷ்டி; இவைகளில் ஆத்மபாவத்தால் ஆத்மஸ்ரூப ஸ்திதியை அடைதல் (மனது முதலியவைகளிடத்தில் இதுநான், இது என்னுடையது என்னும்பாவத்தை அடைதல்.)

2 - வது ஞானநிஷ்டை:—किं प्रजयाकरिष्यामो येषान्नोयमात्माऽयं-लोकः, (बृह 4-4-22) அதாவது நாம் பிரஜையால் என்ன செய்யப் போகிறோம்) முதலிய வசனங்களால் பத்நீதனம் உத்தமலோகமாகிய மூன்றுவித இச்சைகளையும் விட்டுவிடுவதினால் ஆத்மாவை அறிந்திருக்கிற புருஷனுக்கு கர்மநிஷ்டைக்கு விருத்தமான ஆத்மஸ்வரூப நிஷ்டையும் காண்பிவிக்கப்பட்டது. ஞானநிஷ்டனான [89] சன்னியாசியை உத்தேசித்து "असुर्यानामते" (3-வது மந்திரம்) முதலிய வசனங்களால் அஞ்ஞானியின் நிந்தனைமூலமாக "सपर्यगात्" (8-வது மந்திரம்) வரையிலுள்ள மந்திரங்களால் ஆத்மாவின் எதார்த்த ஸ்வரூபம் உபதேசிக்கப்பட்டது. இந்த சன்னியாசிகளே இதில் (ஆத்மநிஷ்டையில்) அதிகாரிகளே தவிர காமிகள் (இச்சையுள்ளவர்கள்) அன்று.

அப்படியே ஸ்வேதாசுவதர உபநிஷத்திலும் अत्याश्रमिभ्यः परमं पवित्रं प्रोवाचसम्यक् ऋषिसङ्घजुष्टम् (6-21) (அதாவது உத்தமமான சன்னியாசிகளுக்கு இருஷிகளால் சேவிக்கப்பட்ட அதாவது ஆத்மஸ்வரூபமாய் பாவிக்கப்பட்ட வெகு பரிசுத்தமான பிரம்மஞானத்தைச் சொன்னான்) என்னு மிவைமுதலிய வசனங்களால் ஞானநிஷ்டை பிரித்துச் சொல்லப்பட்டிருக்கிறது.

எவர்கள் கர்மிகளோ, கர்மநிஷ்டர்களா யிருந்து கர்மத்தைச் செய்துக்கொண்டே ஜீவிக்க இச்சிக்கிறார்களோ அவர்களை உத்தேசித்து "अन्धन्तमः" முதலிய இனி சொல்லப்போகிற அர்த்தம் சொல்லப்படுகிறது.

---

89 இரண்டுநிஷ்டைகளைப்பற்றிபிராமணபாகத்தினின்றும் பிரமாணத்தைக்காட்டி, பிரகிருதகிரந்தத்தில் அவைகளின் விபாகத்தைக்காட்டுகிறார். "எப்போது சகல பூதங்களும் ஆத்மாவாக ஆகின்றனவோ" என்கிற 7-வது மந்திரத்தின் பூர்வார்த்தத்தால் நிச்சயமாய் பலனும் சாதனும் பாதிக்கப்பட்டு ஆத்மா ஒன்று என்கிற ஞானம் சொல்லப்படுகிறது. இதே மந்திரத்தின் உத்தரார்த்தத்தால் இந்தஞானம் சம்சாரநிவிர்த்தி ரூபபலனையுடையது என்று சொல்லப்படுகிறது. இந்த ஞானத்தை விவேகியான புருஷன் வேறு எந்த சாதனத்துடனும் கலக்கமாட்டான். இந்த 9 - வது முதலுள்ளமந்திரங்களிலோ சமுச்சயம் செய்யவேண்டும் என்கிற இச்சையால் அஞ்ஞானிகளின் நிந்தனை செய்யப்படுகின்றது. ஆகையால் பிரகரணங்களின் விபாகம் உசிதமே.

ச:—ஆக்ஷேபம்:—இந்த மந்திரம் கர்மநிஷ்டனை உத்தேசித்துத் தான் சொல்லப்பட்டிருக்கிறது. எல்லாரையும் உத்தேசித்தல்ல என்பது எப்படி அறியத்தக்கது.

உத்தரம்:—ஆசையற்ற புருஷனுக்கு ஸ்வர்க்கம் முதலிய சாத்தியமும், கர்மம் முதலிய சாதனமும் நிவிர்த்தியாய் விடுவதால், இந்த மந்திரம் எல்லாரையும் உத்தேசித்துச் சொல்லப்படவில்லை என்று அறியத்தக்கது. எப்போது ஞானிக்கு சகல பூதங்களும் ஆத்மஸ்வரூபமாக ஆகின்றனவோ, அக்காலத்தில் ஆத்மா ஒன்று என்று பார்க்கிறவனுக்கு சோகம் ஏது மோஹம் ஏது என்கிற 8 வது மந்திரத்தின் வசனத்தால் ஆத்மா ஒன்று என்கிற எந்த ஞானம் சொல்லப்பட்டதோ அந்த ஞானத்தை மூடனுயிராத (புத்திசாலியான) புருஷன் எந்த கர்மத்துடனும் அல்லது வேறு ஞானத்துடனும் (அல்லது வேறு எவ்வித சாதனத்துடனும்) சமுச்சயம் செய்ய (சேர்ந்து அனுஷ்டிக்க) இச்சிக்கமாட்டான். இவ்விடத்திலோ (9 வது முதலுள்ள மந்திரங்களிலோ) எனில், சமுச்சயம் செய்யவேண்டும் என்கிற இச்சையால் அஞ்ஞானி முதலியவர்களின் நிந்தனை செய்யப்படுகிறது. எதற்கு எதனுடன் யுக்தியினுலாவது சாஸ்திரத்தினுலாவது சமுச்சயம் சம்பவிக்கும் என்பது இப்போது சொல்லப்படுகிறது. தைவவித்தம் என்று பேருள்ள தேவதைகளின் உபாஸனு ஞானந்தான் 90 கர்மத்துடன் சம்பந்தப்

---

90. பிர்ம்மஞானத்துடன் கர்மத்தின் சமுச்சயம் உண்டாகாவிட்டால், எந்த ஞானத்துடன் கர்மசமுச்சயம் சம்பவிக்கக்கூடும்? தேவதோபாசனை ரூபஞானத்துடன் கர்மசமுச்சயம் சம்பவிக்கக்கூடும். பாஸ்கராசாரியர் சொல்லுகிறதாவது:—ஈசாவாஸ்யம் என்கிற முதலாவது மந்திரத்தில் பிர்ம்ம வித்தை சொல்லப்பட்டிருக்கிறது. ஆனதால் அத்துடன் சமுச்சயம்செய்ய வேண்டும் என்கிற இச்சையால் இந்த 9-வது மந்திரத்தில் அஞ்ஞானிமுதலியவர்களின் நிந்தனை சொல்லப்பட்டிருக்கிறது. இந்த ஆக்ஷேபத்தின் கருத்தாவது தேவதா ஞானத்துடன்தான் சமுச்சயம் சம்பவிப்பானேன் பிர்ம்மஞானத்துடன் ஏன் சம்பவிக்கக்கூடாது.

இந்த ஆக்ஷேபம்பொருந்தாது. ஏனெனின் (1) எந்தவஸ்து பிரஸ்தாபத்தில் வந்திருக்கிறதோ அதுவே சம்பந்தத்தை அடையவேண்டும் என்கிற நியமமில்லை ஆனுல் எதை எதனோடு சேருவதாகச் சொல்லுகிறோமோ அது அதனுடன் சேர யோக்கியமாயிருக்கவேண்டும். சுத்தப்பிர்ம்மமும் ஆத்மாவும் ஒன்று என்ற ஞானம் கர்த்திருத்தவம்முதலிய அத்தியாசங்களை நாசஞ் செய்வதினுல், கர்மத்துடன் சம்பந்தமடைய யோக்கியமாகாது. (2) மே

ச:—படும் என்று சொல்லப்படுகிறது. பரமாத்ம ஞானம் சம்பந்தப்படமாட்டாது. ஏனெனில், "विद्ययादेवलोकः"[91] (ப்ரு 1-5-16) (அதாவது வித்தியையால் தேவலோகம் கிடைக்கிறது) என்கிற வசனத்தினல் தேவதைகளின் உபாசனுரூப ஞானத்திற்கு கர்மபலத்திற்கு வேருன பலன் சொல்லப்படுகிறது. (ஆகையால் உபாசனை கர்மம் இவைகளின் சமுச்சயம் சம்பவிக்கும்). சமுச்சயம் சொல்ல வேண்டும் என்கிற இச்சையால் ஞானகர்மங்களின் பிரத்தியேக பிரத்தியேக அனுஷ்டானந்தான் நிந்திக்கப்படுகிறது. அவைகளை

லும் எந்தசாதனமிருந்தும் பலன் உடனே உண்டாகவில்லையோ அதற்கே இதரசாதனங்களுடன் சமுச்சயம் உண்டாகக்கூடும். இவ்விடத்திலோ ஏகபாவத்தைப் பார்க்கிறவனுக்கு சோகமேது மோஹமேது என்று சொல்லியிருப்பதால், இப்படி பார்க்கிறகாலத்திலேயே மோஹம்முதலியவைகளின் நாசமாய்விடுவதினல் காலாந்திரபலனில்லை. ஆகையால் இதரசாதகங்களின் சேர்க்கை வேண்டியதில்லை. (கர்ம உபாசனைகள் காலாந்திரத்தில் பலனைக் கொடுக்கின்றன. பிர்ம்மவித்தை உடனே பலனைக்கொடுக்கிறது. இதற்கு இதரசாதனங்களின் அபேக்ஷை இல்லை.)

(3) வ்ருஹ 4-4-22-ல் यज्ञेन ब्राह्मणा विविदिषन्ति அதாவது பிராமணர்கள் யஞ்ஞத்தால் ஆத்ம ஞானத்தைச் சம்பாதிக்க இச்சிக்கிருர்கள் என்றுசொல்லப்பட்டிருக்கிறது, யஞ்ஞத்தால் என்னும் மூன்றும் வேற்றுமையால் யஞ்ஞமானது கரணம் அதாவது சாதகமாக காணப்படுகிறது. சாதகத்தை சாத்தியத்துடன் (ஞானத்துடன்) எப்படி சம்பந்தப்படுத்தலாம்? சம்பந்தப்படுத்தவேண்டும் என்கிற இச்சையால் முக்கியமான வித்தையை நிந்தித்தல் அனுசிதம்.

(4) பிரம்மசூத்திரம் III-41-25-ல் "अत एव चाग्नीन्ध नाद्यनपेक्षा" அதாவது ஞானம் தன்சித்தியின்பொருட்டு அக்கினி, கட்டைமுதலியவைகளை அபேக்ஷிக்கவில்லை, என்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்த சூத்திரத்திற்கு விருத்தமாய்ச் சொல்லுவது சமுச்சயவாதிக்கும் இஷ்டமாயிராது.

(5) ஞானகர்மங்களின் விருத்தத்தைக் காட்டியே சூத்திரகாரர் "उप-मर्दंच" (III-4-16) அதாவது ஞானம்,கிரியை,காரகன், பலன் இவைகளாகிற சமஸ்தமான பிரபஞ்சத்தையும் நாசம்செய்கிறது என்னும் சூத்திரம் செய்திருக்கிருர். ஆகவே கர்மத்துக்கு விருத்தமாகாத தேவதா ஞானமே கர்மத்துடன் சம்பந்தப்படக்கூடும்.

91. தேவதா ஞானத்திற்கு கர்மபலனைவிட வேருனபலன் இல்லாமையால் சமுச்சயம்சம்பவிக்கமாட்டாதென்று ஆக்ஷேபித்தால், தேவதாஞானத்திற்கு பலன்வேறு என்று சொல்லுகிருர்.

ச:—எவ்விதத்திலும் நிந்திக்கவேண்டும் என்னும் கருத்தல்ல. ஏனெனின், " विद्ययातदारोहन्ति" (வித்தையால் அதை ஏறிவிடுகிறார்கள் அதாவது பிர்ம்ம பதவியை அடைகிறார்கள்); " विद्ययादेवलोकः" (பிரு I - 5 - 16) (வித்தியையினால் தேவலோகம் கிடைக்கும்); नतत्रदक्षिणायन्ति (அந்தலோகத்திற்கு கர்மிகள் போகமாட்டார்கள் என்று தனிமையான வித்தைக்குப் பலனும்) कर्मणापितृलोकः (பிரு I - 5 - 16) (கர்மத்தால் பித்ர்லோகம் கிடைக்கும்) என்று தனிமையான கர்மத்திற்கு பலனும் சொல்லப்பட்டிருக்கின்றன. ஆகையால் இவைகளின் சமுச்சயம் சம்பவிக்கும். சாஸ்திரத்தில் விதிக்கப்பட்ட எந்த கர்மமும் செய்யத்தகாததல்ல.

अन्धन्तमः...उपासते :—கர்மம் வித்தியைக்கு விரோதமாயிருப்பதால், வித்தியைக்கு வேறான அக்கினிஹோத்திரம்முதலிய கர்மரூப அவித்தியையைமட்டும் அனுஷ்டிக்கிறவர்கள் தமஸை (அஞ்ஞான இருட்டை) பிரவேசிக்கிறார்கள். இவர்கள் கர்மபரர்களாக கர்மத்தையே செய்கிறவர்கள் என்பது அபிப்பிராயம்.

---

வி:—ये = போகத்திலும், பணத்திலும், ஆசக்தியுள்ள எவர்கள்

आविद्यां = வித்தைக்கு வேறான கர்மத்தை அதாவது வித்தையில்லாத கேவல கர்மத்தை – अविद्या कर्मसंज्ञाऽन्या तृतीयाशक्तिरिष्यते என்கிற விஷ்ணு புராணம் 6-வது அம்சத்தில் அவித்தை என்பதற்கு கர்மம் என்று அர்த்தம் செய்யப்பட்டிருக்கிறது.

उपासते = நிலையுள்ள மனதுடன் அனுஷ்டிக்கிறார்களோ

ते = அவர்கள்

अन्धन्तमः = அதிகமான இருட்டை அதாவது அஞ்ஞானத்தை அல்லது தர்மார்த்த காமங்களின் சம்பந்தத்தால் புண்ணிய பலன்களுக்கு நடுவில் ஏற்படும் நரகத்தை

प्रविशन्ति = பிரவேசிக்கிறார்கள். இதற்குப் பிரமாணமாக முண்டகோபநிஷத்து 1-2-7 பார்க்க.

---

து:—ये = எவர்கள்.

अविद्यां = வித்தைக்கு விரோதியான மித்தியாஞானத்துக்கு விஷயமானதை, அதாவது வாஸ்தவமாயிராததை

उपासते = உபாசிக்கிறார்களோ, தியானிக்கிறார்களோ

ते = அவர்கள்

अन्धन्तमः = அந்தந்தம என்னும் பெயருள்ள நரகத்தை

प्रविशन्ति = பிரவேசிக்கிறார்கள் (என்று முன் 3-ல் சொல்லியிருக்கிறது)

ச:—ततो...उपासते :—எவர்கள் கர்மத்தைவிட்டு தேவதாஞா னமாகிற வித்தியையிலேயே (உபாசனையிலேயே)ஆஸக்தியுள்ளவர் களாக இருக்கிறார்களோ அவர்கள் சுத்தகர்மிகளால் அடையப் பட்ட தமஸைவிட வெகு அதிகமான தமஸை அடைகிறார்கள.

இப்படிச் சேர்த்து அனுஷ்டிக்கக்கூடிய ஞானகர்மங்களுக் குத் தனிமையில் பலன் இன்னதென்று சொல்லப்போகிறார். இர ண்டிற்கும் பலன் இருந்தால்தான் இரண்டும் சமுச்சயத்தை அடை யக்கூடும். ஒன்றுக்குப் பலனும் மற்றொன்றிற்குப் பலனின்மை யும் இருந்தால் பலனுள்ளது முக்கியமானதாகவும் பலனில்லாதது அதற்குச் சாதகமாகவும் ஆய்விடும். அப்படிப்பட்ட சேர்க்கை இவ்விடத்தில் கிடையாது (இருட்டிலும் அதிக இருட்டிலும் பிர வேசிப்பதற்கு விசேஷமான அர்த்தம் முகவுரை 9-வது பக்கத் தில் கொடுக்கப்பட்டிருக்கிறது. அவ்விடம்பார்க்க.) ॥ 9 ॥

---

வி:—ये = எவர்கள்

विद्यायां उ रता: =தனக்கு உசிதமான கர்மத்தைவிட்டு வித்தை யில் மட்டும் ஆசக்தி யுள்ளவர்களோ

(ते)= (அவர்கள்)

ततः = கர்மத்தைமட்டும்செய்கிறவனால் அடையப்படும் அஞ் ஞானத்தைவிட

भूय: इव तम: = அதிகமான அஞ்ஞானத்தை

(प्रविशन्ति) (அடைகிறார்கள்.)

इव சப்தம் தமஸ் இவ்வளவு என்று அறியப்படாததைகாண் பிக்கிறது. ॥ 9 ॥

---

து:—ते = எவர்கள்

विद्यायांउ = கேவல தத்துவஞானத்திலேயே மித்தியாஞான த்தை நிந்திக்காதவர்கள் என்று उ என்பது குறிப்பிடுகிறது.

रता: = ஆசக்தர்களா யிருக்கிறார்களோ, ஆனால் விபரீதமான அதாவது மித்தியாஞானத்தை நிந்திக்கவில்லையோ

ते = அவர்கள்

ततः = விபரீதஞானிகள் அடையும் நரகத்தைவிட

भूय: = அதிகமான

तम: = தம (அந்தந்தம) என்னும் நரகத்தை

इव = சந்தேகமன்றியில்

प्रविशन्ति = பிரவேசிக்கிறார்கள். ॥ 9 ॥

10 अन्यदेवाहुर्विद्यया[92]ऽन्यदाहुरविद्यया[92] ।

इति शुश्रुमधीराणां[93] येनस्तद्विचचक्षिरे ॥

विद्यया = உபாஸனையாகிய தேவதா ஞானத்தால்

अन्यत् एव = வேறாகவே

(फलं क्रियते इति = பலம் செய்யப்படுகிறது அதாவது உண்டாகிறது என்று)

आहुः = சொன்னார்கள்.

अवि द्यया = கர்மத்தினால்

अन्यत् (एव) = வேறாகவே

(फलं क्रियते इति = பலனுண்டாகிற தென்று)

आहु : = சொன்னார்கள்.

इति = இந்தப் பிரகாரம்

ये = எவர்கள்

नः = எங்களுக்கு

तत् = அந்த கர்மத்தையும் உபாஸனையையும்

व्याचचक्षिरे =சொன்னார்களோ

(तेषां= அந்த)

धीराणां = வித்வான்களுடைய

(वचनं = வசனத்தை)

शुश्रुम = கேட்டிருக்கிறோம்.

## சங்கரபாஷ்யம்.

अन्य...विद्यया:[94]—உபாசனாரூபவித்தியையால் வேறுபலன் உண்டாகிறதென்று சொன்னார்கள். இதற்குப் பிரமாணம்:—"विद्यादे

வி.—அ-கை:—அப்படி (மேற்சொன்னபடி) இருந்தால், மோக்ஷத்திற்குச் சாதனமெவை?

து:—அ-கை :— அவித்தையின் (நல்லஞானமில்லாமையின்) நிந்தனை, நல்லஞானம், இவைகளில்லாவிட்டால் அதிக அநர்த்தம் உண்டாகிறதென்று சொல்லப்பட்டது. இப்போது மோக்ஷமென்னும் பலத்திலுள்ள ஆநந்தாவாப்தி, துக்கநிவிர்த்தி இவைகளின் பொருட்டு நல்லஞானத்தைச் சம்பாதிக்க வேண்டுமென்னும் அவித்தையை நிந்திக்கவேண்டும் என்றும் சொல்லுகிறார்.

92. வா-ச-யில் विद्यायाः—अविद्यायाः என்பதுபாடம்.

93 - கேன உபநிஷத்து 1 - 3 - ல் इति शुश्रुम पूर्वेषां என்பதுபாடம் வா - ச - யில் இது 13-வது மந்திரம்.

94. இதற்கொப்பான சமானவாக்கியம் :—

(1) கடவல்லி 2- 4:— दूरमेतेविपरीते विषूची अविद्यायाच विद्येतिज्ञाता

(2) சுவேதாசுவதரம் 5-1 :— क्षरंत्वविद्याह्यमृतंतुविद्या

ச—:वलोक :" (वृ I-5-16) அதாவது "உபாசனையாகிற வித்தியையால் தேவலோகம் கிடைக்கிறது", (2) "विद्ययातदारोहन्ति" (பிரு I-5-16) அதாவது "வித்தியையால் அந்த (பதவியை) ஏறிவிடுகிறார்கள் (அடைகிறார்கள்)"; இவை முதலிய சுருதி வசனங்கள்.

अन्य...अविद्यया = கர்மரூப அவித்தியையினால் வேறு பலன் உண்டாகிறது என்று சொன்னார்கள். இதற்குப் பிரமாணம் :— "कर्मणा पितृलोकः —" (பிரு I - 5 - 16) "கர்மத்தால் பிதிர்லோகம் கிடைக்கிறது" முதலிய சுருதி வசனங்கள்.

---

வி:—विद्यया = இந்த மூன்றாம் வேற்றுமையை ஐந்தாம்வேற்றுமையாக அறியவேண்டியது. மூன்றாம் வேற்றுமை யிருந்தால் अन्यत् என்னும் பதம் பொருந்தாது. अन्यदेवाहुः संभवात् என்னும் 13 வது மந்திரத்தில் ஐந்தாம் வேற்றுமையோடு अन्य சப்தத்தை உபயோகித்திருப்பதால், இவ்விடத்திலும் (அதாவது विद्यया என்னும் இடத்திலும்) ஐந்தாம் வேற்றுமையே அறியத்தக்கது. विद्यया=கர்மமில்லாத வித்தையினின்றும்

अन्यत्—மோக்ஷசாதனம் வேறு என்று

(उपनिषदः) (உபநிஷத்துக்கள்)

आहुः = சொல்லுகின்றன.

अविद्यया = முன்போலவே இதையும் ஐந்தாம் வேற்றுமையில் அறியவேண்டியது. பிரம்மஞானமற்ற கர்மத்தினின்றும் மோக்ஷசாதனம் வேறு என்று

(उपनिषदः) (உபநிஷத்துக்கள்)

आहुः = சொல்லுகின்றன.

---

து:—विद्यया = தத்துவஞானத்தால்

अन्यत् एव = மோக்ஷத்தின் ஏகதேசமானபலன் அடையப்படும் என்று

(वृद्धाः) = (ஞானவிர்த்தர்கள்)

आहुः = சொல்லுகிறார்கள்.

अविद्यया = அந்நியதாஞான நிந்தையில்

अन्यत् एव = மோக்ஷத்தின் ஏகதேசமான பலம் (துக்கநிவிர்த்திரூப இஷ்டப்ராப்தி) அடையப்படும் என்று

(वृद्धाः) = (ஞானவிர்த்தர்கள்)

आहुः = சொல்லுகிறார்கள்.

ச:—इति…धीराणां:— இப்படி நாம் புத்திமான்களுடைய வசனத்தைக் கேட்டிருக்கிறோம்.

ये…विचचक्षिरे:—அந்த ஆசாரியர்கள் எவர்களெனின் :—நமக்குக்கர்மத்தையும் ஞானத்தையும் வியக்தமாய் வெளியிட்ட (உபதேசித்த) வர்கள் தான். அவர்களுக்கு இந்த வேதம் (உபதேசத்தால் கிடைத்தஞானம்) பரம்பரையாக வந்திருக்கிறதுஎன்று அர்த்தம். ‖ 10 ‖

---

வி:—इतिशुश्रुम: = (அவ-கை) முன்னோர்களுடைய சம்பிரதாயப்படி இவை ஏற்பட்டிருக்கின்றன என்று சொல்லுகிறார்.

ये = எந்த முன்னிருந்த ஆசாரியர்கள்

न: = நமஸ்காரம் முதலியவைகளால் செவ்வையாய் குருக்களை அடையும் எங்களுக்கு

तत् = மோக்ஷ உபாயத்தை

विचचाक्षिरे = பகுத்து உபதேசித்தார்களோ

(तेषां) = (அந்த)

धीराणां= இந்த ஆறும்வேற்றுமையை ஐந்தாம் வேற்றுமையில் அறியவேண்டியது. புத்திமான்களிடத்தினின்றும் नटस्य शृणोति என்னுமிடத்தில் கூத்தாடியிடமிருந்து கேட்கிறான் என்று ஐந்தாம் வேற்றுமையில் அர்த்தம் ஆவதுபோல் இவ்விடத்திலும் शृणोति என்னும் வினைச்சொல்லால் ஐந்தாம் வேற்றுமையே அறியத்தக்கது.

इति = மேற்சொன்னபடி

शुश्रुम = கேட்டிருக்கிறோம்.

शुश्रुम என்பது வியாகரணத்தில் श्रु என்னும் வினைப்பகுதியின் लिट् ரூபம். அப்பிரத்தியக்ஷஞானம் கிடைக்கும் சமயத்தில்

---

து:—इति = இந்தப்பிரகாரம் பெரியோர்களுடைய சம்மதத்துடன்கூடின வசனத்தை

ये = எந்த புத்திமான்கள்

न: = எங்களுக்கு

तत् = மோக்ஷசாதனத்தை

विचचक्षिरे = சொன்னார்களோ

(तेषां) = (அந்த)

धीराणां = புத்திமான்களிடமிருந்து

शुश्रुम = கேட்டிருக்கிறோம். ஆகவே இவ்விரண்டு காரணங்கள் இருப்பதால் வித்தையும் அவித்யா நிந்தனையும் மோக்ஷத்திற்கு வேண்டும் என்பது கருத்து. ‖ 10 ‖

11 विद्याञ्चाविद्याञ्च[95]यस्तद्वेदोभयꣳ सह॥

अविद्ययामृत्युंतीर्त्वा विद्ययाऽमृतममश्नुते ॥

ச:—यः = எவன்

विद्यांच = தேவதா ஞானத்தையும் (உபாசனையையும்)

अविद्यांच = கர்மத்தையும்

तत् = அந்த

उभयं = இரண்டையும்

सह = கூடவே

(एकेन पुरुषेण अनुष्ठेयं) = (ஒரு புருஷனாலே அனுஷ்டிக்கத் தக்கதாக)

वेद = அறிந்திருக்கிறானோ

(सः) = அவன்

अविद्यया = கர்மத்தால்

मृत्युं = மிருத்தியுவை, ஸ்வாபாவிகஞான கர்மங்களை

तीर्त्वा = அதிக்கிரமித்து

विद्यया = தேவதா ஞானத்தால்

अमृतं = தேவதாத்ம பாவத்தை

अश्नुते = அடைகிறான்.

சங்கரபாஷ்யம்.

विद्यां ... सह எக்காரணத்தால் இப்படியிருக்கிறதோ அக்காரணத்தால் (அதாவது சேர்த்து அனுஷ்டிக்கக்கூடிய காரணத்தால்) தேவதாஞானத்தையும் கர்மத்தையும் ஒருவன் அனுஷ்டிக்கமுடியும் என்று எவன் அறிகிறானோ, அந்த சமுச்சயாபிமானிக்குத் தான் ஒரே புருஷார்த்தம் கிரமமாக உண்டாகிறது என்று சொல்லப்படுகிறது. (எப்படியெனின்)

வி:—தான் இந்த ரூபத்தைப் பிரயோகிக்கவேண்டியதாய் விதி இருக்க பிரத்தியக்ஷமாய் புத்திமான்களிடமிருந்து கேட்கிறோம் என்னும் பிரத்தியக்ஷஞானம் கிடைக்கு மிடத்தில் எப்படி உபயோகிக்கலாம் எனின், பிரம்மவித்தை பூராவாக அறிவதற்கு அசாத்தியமானதால், அதைமுழுமையும் நாம் கிரகிக்கவில்லை என்கிற அபிப்பிராயத்தால் ஞானம் அப்பிரத்தியக்ஷமாகவே இருப்பதால் ஷை பிரயோகம் யுக்தமே. ॥ 10 ॥

அ-கை:—अन्यत् வேறு என்று சாமான்னியமாய்ச் சொன்ன மோக்ஷ சாதனத்தை இப்போது விவரிக்கிறார். कुर्वन्नेवेहकर्माणि என்

து:—அ - கை :—இதையே தெளிவாகச் சொல்லுகிறார்

95. வா-ச-யில் இது 14-வது மந்திரம்.

ச:—अविद्यया...अश्नुते :— அக்கினிஹோத்திரம் முதலிய கா்ம

வி:—.னும் 2-வது மந்திரத்தில் கா்மயோகமானது ப்ரத்தியகாத்ம தா்சனத்தை(ஜீவனுடைய ஸ்வருபத்தின் ப்ரத்தியக்ஷத்தை) உண்டு பண்ணி, அதன் வழியாய் பரபக்தியை (உபாசனையை) உண்டாக்குகிறது என்று சொல்லப்பட்டது. இவ்விடத்திலோ, பக்தியோகத்தை அடைந்த வித்துவான் கா்மயோகம் என்னும் வேஷத்தை 96 விட்டு நித்திய நைமித்திக கா்மங்களைச் செய்வதால் தோஷங்கள் 97 நீங்கி நாளுக்குநாள் வித்தையில் அவன் விர்த்தி அடைகிறுன் என்று सह சப்தத்தால் ஏற்படுகிறது. ஆகவே ஒரே சங்கதி இரண்டுதடவை சொல்லப்பட்டதாக நினைக்கவேண்டியதில்லை.

यः = சரியானபடி வித்தையின் உபதேசத்தை அடைந்த எவன்

विद्यांच = பிரம்மோபாசனத்தையும்

अविद्यां च = அதற்குச் சாதனமான கா்மத்தையும்

उभयं = ஆக இவ்விரண்டையும்

सहवेद = ஒன்று சாதனமாயும், மற்றொன்று சாத்தியமாயும், சேர்த்துச் செய்யவேண்டுமென்று அறிகிறுனே, "அப்பிராமணனைக் கொண்டுவா" என்னுமிடத்தில் "அப்பிராமண" சப்தம் பிராமணனுக்கு வேருயும், அவனுக்குச் சமானனுயு மிருக்கிற க்ஷத்திரியனைக் குறிப்பிடுவதுபோல இவ்விடத்திலிருக்கும் அவித்தியா சப்தமும் வித்தைக்கு வேருயும் வித்தைக்கு (மோக்ஷசாதன விஷயத்தில்) சமானமாயுமிருக்கிற கா்மத்தைக் குறிப்பிடுகிறது.

अविद्यया = வித்தைக்குச் சாதனமாயும் வித்தையுடன் சேர்த்து செய்யப்படும் கா்மத்தால்

து:—विद्यांच = விஷ்ணு விஷயகமான யதார்த்த ஞானத்தையும்

अविद्यांच = மித்தியாஞான நிந்தனையையும்

सह = ஒரே புருஷார்த்தத்துக்கு ஹேதுவாக

तत् उभयं = இந்த இரண்டையும்

यः = எவன்

वेद = அறிகிறுனோ

(सः) = (அவன்)

अविद्यया = அந்நியதா ஞானநிந்தனையால்

96. அதாவது, ஜீவாத்ம சக்ஷாத் காரத்துக்காகக் கா்மங்களைச் செய்யாமல்.

97. உண்டான பக்தியோகம் சரியாய் நிறைவேருமல் கெடுக்கும் தோஷங்கள்.

ச:—ரூப அவித்தையால், (மோக்ஷத்திற்குப் பிரதி பந்தகமா யிருப்பதால்) மிருத்தியு என்கிற சப்தத்தால் குறிப்பிடப்படும் ஸ்வபாவமான 98 கர்மம்ஞானம் இவைகளை அதிக்கிரமித்து (போக்கடித்து) தேவதாஞானத்தால் தேவதாஸ்வரூபத்தை (அவன்) அடைகிறான். தேவதாஸ்வரூபப் பிராப்தி (அதிககால விசேஷத்தால) இவ்விடத்தில் அமிருதம் என்று சொல்லப்படுகிறது. ॥ 11 ॥

---

வி:—मृत्युं = வித்தை உண்டாவதற்குத் தடங்கலான புண்ணிய பாப ரூபமான முந்தின கர்மங்களை

तीर्त्वा = முழுமையும் அதிக்கிரமித்து

विद्यया = பரமாத்மாவின் உபாசனையால்

---

து:—मृत्युं = துக்கம், அஞ்ஞானம் முதலிய அநிஷ்டத்தை

तीर्त्वा = அதிக்கிரமித்து

विद्यया = விஷ்ணுவின் யதார்த்த ஞானத்தால்

अमृतं = ஆநந்தானுபவமாகிய மோக்ஷத்தின் ஏகதேசத்தை

अश्नुते = அடைகிறான்

இதனால் மித்தியஞான நிந்தனையால் அனிஷ்டம் விலகிறது தத்துவஞானத்தால் ஆநந்தானுபவம் கிடைக்கிறது. ஆகவேமோக்ஷமானது இவ்விரண்டுரூபமா யிருப்பதால் அதை அடைய இரண்டும் வேண்டியதே. च சப்தம் வித்தையுடன் அவித்தை நிந்தனை என்பதையும் அவித்தை நிந்தனையுடன் வித்தை என்பதையும் காட்டுகிறது. ॥ 11 ॥

---

98. ஸ்வாபாவிகம் என்றால் இராகத்தால் அடையப்பட்டதென்று அர்த்தம். மனிதன் ஸ்வபாவமாக எந்தவிஷயத்தை அனுபவிக்க வேண்டுமென்று இச்சைகொண்டு கர்மத்தைச் செய்கிறானே அந்தக் கர்மம், அதின் சம்பந்தமான ஞானம் இவைகள் இராகசம்பந்தமான ஸ்வாபாவிக ஞானகர்மங்களாகச் சொல்லப்படுகின்றன. இவைகள் கஷ்டத்தைக் கொடுக்கின்றனவென்பது எல்லாருடைய அனுபவத்திலு மிருக்கிறது. இவைகளின் அநர்த்தத்தைத்தரும் ஸ்பாவத்தை உத்தேசித்தே இவைகளை மிருத்தியுவாகச் சொல்லப்பட்டது. இப்படி இராகத்தால் அடையப்பட்ட விஷயபோக ரூபகர்மம் அதின்ஞானம் இவைகளின் பிரவாஹத்தில் மனிதன் அகப்பட்டிருக்கிறான். இந்தப்பிரவாஹத்தைத் தாண்டிப்போக உபாயம் வேதத்தில் விதிக்கப்பட்டிருக்கிற அக்கினிஹோத்திராதி கர்மங்களே. இவைகளைச் செய்வதினால் மேற்சொன்ன மிருத்தியுஜயிக்கப்படுகிறது. சாந்தோக்கியத்தில் (I-4-2 & 5) கர்மத்தால் மிருத்யுவைத்தாண்டி ஞானத்தால் அமிருத்தை அடைவதான ஒருகதை சொல்லப்பட்டிருக்கிறது.

12 अन्धंतमः[99] प्रविशान्तियेऽसंभूतिमुपासते ।

ततोभूय इव ते तमो यउ संभूत्या ँरताः ॥

ச:—ये = எவர்கள்

असंभूतिं = பிரகிருதியை

उपासते = உபாஸிக்கிறார்களோ

(ते) = (அவர்கள்)

अन्धंतमः = அதிக அஞ்ஞானமய இருட்டை

प्रविशन्ति = பிரவேசிக்கிறார்கள்.

---

வி:—अमृतं = மோக்ஷத்தை

अश्नुते = அடைகிறான்.

तीर्त्वा என்னும் இடத்தில் வித்தைக்கு விருத்தமான கர்மங்களினின்றும் விடுபடுகிறான் என்று அர்த்தம்.

अमृतमश्नुते என்னும் இடத்திலோ முக்கியமாய் அடையவேண்டிய பிரமப் பிராப்திக்கு விருத்தமான எல்லா பாபங்களினின்றும் விடுபடுகின்றான் என்று அர்த்தம்.

இதே அர்த்தம் அடியில்கண்ட விஷ்ணுபுராண (6 - வது அம்சம்) சுலோகத்திலிருக்கிறது.

इयाजसोऽपि सुबहून् यज्ञान् ज्ञानव्यपाश्रयः ।
ब्रह्मविद्यामधिष्ठाय तर्तुंमृत्युमविद्यया ॥

ज्ञानव्यपाश्रयः = சாஸ்திரவிசாரத்தால் உண்டான பிரமஞானத்தை அடைந்த

सःआपि = ஜனகரும்

ब्रह्मविद्यां = தியானமென்னும் பிரம்மோபாசனத்தை

अधिष्ठाय = பலனாக ஸ்வீகரித்து, பக்தி யோகமுண்டாவதை இச்சித்து என்று கருத்து.

मृत्युं = பக்தி உண்டாவதற்கு விரோதிகளான முன்செய்த கர்மங்களை

अविद्यया = பல இச்சையில்லாத வித்தைக்குச் சாதனமான கர்மத்தால்

तर्तुं 3 நாசம் செய்வதற்கு

सुबहून् = ஜ்யோதிஷ்டோமம் முதலிய அநேக யஞ்ஞங்களை

इयाज செய்தார். (சமயல் சமைத்தான் என்பதுபோல்)

இதே அர்த்தத்தை வேறு வாக்கியங்களும் சொல்லுகின்றன. ॥11॥

---

99. வா-ச-யில் இது 9-வது மந்திரம்.

ये उ = எவர்கள்

संभूत्यां = காரிய பிரம்மத்தினிடத்தில் அதாவது ஹிரணிய கர்ப்பனிடத்தில்

रता: = ஆஸக்தி யுள்ளவர்களோ

ते = அவர்கள்

ततः = முன்சொன்னதைவிட

भूयः इव = நிச்சயமான வெகு அதிகமான

तमः = இருட்டை

प्रविशन्ति = பிரவேசிக்கிறார்கள்.

சங்கரபாஷ்யம்.

அ - கை:—இப்போது व्याकृत [100](ஹிரணியகர்பன்) अव्याकृत [101] (பிரகிருதி) இவைகளின் உபாசனைகளின் சமுச்சயத்தைச் சொல்ல வேண்டும் என்னும் இச்சையால் (இவைகளைச் சேர்த்து செய்ய வேண்டும் என்னும் கருத்தால்) இவைகளிற் தனித்தனியான உபாசனை நிந்திக்கப்படுகிறது.

असंभूति:[102]—ஸம்பூதிஎன்றால் உற்பத்தி, ஜன்மம். இது [82] எத

---

அ-கை:—மேற்சொன்னபடி பல இச்சை இல்லாத நித்திய நைமித்திக் கர்மங்களால் சமாதி [103] உண்டாகிறதென்று உபதேசித்து, இனி மூன்று மந்திரங்களால் நிஷித்த நிவிர்த்தியாகிய யோகாங்கத்தால் வித்தைசாத்தியம் என்று சொல்லுகிறார். முன்போல் தனித்தனி நிஷ்டையை நிந்திக்கிறார்.

---

து:—அ - கை: —மித்தியாஞானம் அநர்த்தத்திற்குக்காரணம் என்றும் தத்துவஞானமே முக்திக்குக்காரணம் என்றும் முன் சொன்னதையே 3-மந்திரங்களால் வியக்தமாக்குகிறார்.

---

100. व्याकृत = वि + आ + अक्रियत விஸ்பஷ்டமாய் நாம ரூபங்களால் செய்யப்பட்டது; அதாவது காரியரூபபிரம்மம், ஹிரண்யகர்பன், சூத்திராத்மா.

101. अव्याकृत= காரிய ரூபத்தால் ஸ்பஷ்டமாகாதது; காரணம்; பிரகிருதி.

102. असंभूति "मायान्तुप्रकृतिं विद्यात् मायिनन्तुमहेश्वरम्" ( श्वे 41-0- "மாயையை பிரகிருதியாகவும் மாயையையுடையவனை மஹேசுவரனாகவும் அறியவேண்டியது" என்பனமுதலிய சுருதிவசனங்களால் சேதனத்திற்கு ஆதீனமாயும் பரமேஸ்வரனுக்கு உபாதியாயுமிருக்கிற மாயையே இவ்விடத்தில் அஸம்பூதி சப்தத்தால் அறியத்தக்கதே தவிர பிர்ம்மமல்ல. ஏனெனின்

103. பக்தி அல்லது உபாசனை.

ச:—ற்கு உளதோ, இப்படிப்பட்ட காரியரூப ஹிரணியகர்பம் ஸம்பூதி என்று சொல்லப்படுகிறது. இதற்கு வேறானதாயும், காரணரூபமாயும், அவ்யாகிருதம் என்று பெயருள்ளதாயுமிருக்கிற பிரகிருதி அஸம்பூதி என்று சொல்லப்படுகிறது. இதுவே காரணரூபம்; இதுவே அவித்தை; காம கர்மங்களுக்கு விதையாக இருக்கிறது;

अन्धन्तमः...उपासते:—இப்படிப்பட்ட அதர்சனாத்மகமான பிரகிருதியாகிற அஸம்பூதியை எவர்கள் உபாசிக்கிறார்களோ அவர்கள் அதற்கு அனுரூபமான 104 அஞ்ஞானதமஸில் பிரவேசிக்கிறார்கள்.

---

வி:—एतमित,: प्रेत्य अभिसंभवितास्मि (छा III-14-4) மரண மடைந்தபின் பரமாத்மாவை அடையப்போகிறேன்) ब्रह्मलोके अभिसंभवानि (பிரமம் லோகத்தை அடையப்போகிறேன்) என்கிற வாக்கியங்களில் संभविता – संभवानि என்னும் (सं + भू இவைகளால் ஏற்படுகிற) பதங்களால் பிரத்தியக்ஷரூபமான அனுபவம் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இவ்விடத்திலிருக்கிற संभूति என்னும் பதத்தால் சமாதிரூபமான அனுபவம் சொல்லப்படுகிறது. असंभूति சப்தமோ சமாதிரூபமான சம்பூதியைவிட வேறாயும், சமாதிக்கு அங்கமாயுமிருக்கிற சாஸ்திரங்களில் நிஷேதிக்கப்பட்டிருக்கிற கர்மங்களைச் செய்யாமையைக் குறிப்பிடுகிறது. மேல் மந்திரத்தில் விநாச சப்தத்தால் இவ்விடத்திலிருக்கும் அசம்பூதியை குறிப்பிடுவதால், இந்த அசம்பூதி பதத்திற்கு விநாசம் அதாவது நிஷித்த நிவிர்த்தி என்றே அர்த்தம் செய்யவேண்டியது.

---

து:—ये = எவர்கள்

असंभूतिं = ஈசுவரன் சிருஷ்டிகர்தாவல்ல என்று

उपासते = உபாசிக்கிறார்களோ

ते = அவர்கள்

---

நிர்விகாரமான பிர்ம்மம் பிரகிருதிக்கு ஆதீனமாகமாட்டாது. சம்சாரத்தின் துக்கானுபவங்களில்லாமையால் சுஷுப்தி (நல்ல நித்திரை) ஸ்திதி பிரார்த்திக்கப்படுவதுபோல், பிரகிருதிலயமும் புருஷனால் இச்சிக்கப்படக்கூடும். கர்மோபாசனைகளில் போல் பிரகிருதி உபாசனையிலும் பரமேசுவரனே பலனைக்கொடுக்கிறான். பிரகிருதி ஜடமாயிருப்பதால் பலனைக்கொடுக்கமாட்டாது. ஆகையால் அது உபாசனைக்கு யோக்கியமன்று என்றுசொல்வதும் பொருந்தாது.

104. तंयथा यथोपासते तदेव भवति "எவன் எதை உபாசிக்கிறானோ அவன் அதுபோல ஆகிறான்" என்கிறசுருதி வசனப்படி பிரகிருதியை உபாசிக்கிறவன் பிரகிருதிலயத்தை அடைகிறான்.

13. अन्यदे[105]वाहुःसंभवा दन्यदाहुरसंभवात् ।

इतिशुश्रुमधीराणां येनस्तद्विचचक्षिरे ॥

ச:—ततो...रता:—ஹிரண்ய கர்பம் என்கிற கார்ய பிரம்மரூப சம்பூதி விடத்தில் ஆசக்தியுடையவர்கள் (அதை உபாசிக்கிறவர்கள்) முந்தின தமஸைவிட இங்கு அதிகமாயிருக்கும் தமஸை பிரவேசிக்கிறார்கள். (அதை அடைகிறார்கள்.) ॥ 12 ॥

---

வி:—ये = வித்தியாதிகாரமுள்ள எவர்கள்

असंभूति (मेव) அபிமானம் (கோபம்) தம்பம், ஹிம்சை, திருட்டு, முதலிய யோக விருத்தங்களின் நிவிர்த்தியை மாத்திரம்

उपासते = அடைகிறார்களோ,

உபாசனையின்றியில் கேவல நிவிர்த்தியைமட்டும் அடைந்தவர்கள் என்று கருத்து

ते = அவர்கள்

अन्धन्तमः प्रविशन्ति = (முன்போல) அஞ்ஞானத்தை அடைகிறார்கள்.

ततो...रता: = எவர்கள் சமாதிரூபமான சம்பூதியைமட்டும் அதாவது மேற்சொன்ன நிவிர்த்தி அன்றியில் கேவலம்சம்பூதியை மட்டும் அடைந்தவர்கள் (முன்சொன்னபடி) அதைவிட அதிகமான அஞ்ஞானத்தை அடைகிறார்கள். ॥ 12 ॥

---

து:—अन्धंतमः = அந்தந்தம என்னும் லோகத்தை

प्रविशन्ति = பிரவேசிக்கிறார்கள்.

ये = எவர்கள்

संभूत्यां उ = ஈஸ்வரன்சம்ஹார கர்த்தாவல்ல சிருஷ்டிகர்த்தா தான் என்பதில்

रता: = ஆசக்தியுள்ளவர்களா யிருக்கிறார்களோ

ते = அவர்கள்

ततः = கேவலம் சிருஷ்டிகர்த்தா அல்ல என்று அறிகிறவர்கள் அடையும் நரகத்தைவிட

भूयः = அதிகமாக

तमः = தம என்னும் நரகத்தை

इव = சந்தேகமன்றியில்

प्रविशन्ति = பிரவேசிக்கிறார்கள். ஆகையால் ஈசுவரன் சிருஷ்டிகர்த்தா சம்ஹாரகர்த்தா என்று அறியத்தக்கது. ॥ 12 ॥

---

105. வா-சூ-யில் இது 10-வது மந்திரம்.

संभवात् = காரியப்பிரம்ம உபாஸனையினின்றும்

अन्यत् एव (फलं) = வேறான பலத்தையே

आहु: = சொன்னார்கள்.

असंभवात् = அவ்வியாகிருத பிரகிருதி உபாஸனையினின்றும்

अन्यत् (फलं ) வேறுபலத்தை

आहु: = சொன்னார்கள்

ये = எவர்கள்

न: = எங்களுக்கு

तत् – பிரகிருதி, ஹிரணியகர்பன் இவர்களின் உபாஸனைகளை

विचचक्षिरे = சொன்னார்களோ

(तेषां = அந்த)

धीराणां = வித்வான்களுடைய

वचनं = வசனத்தை

इति = இந்தப்பிரகாரம்

(वयं = நாங்கள்)

शुश्रुम = கேட்டிருக்கிறோம்.

## சங்கரபாஷ்யம்.

அ - கை :—இப்போது இரண்டு உபாசனைகளின் சமுச்சயத்திற்குக் காரணமான ஒவ்வொன்றின் பிரத்தியேக பலனைச் சொல்லுகிறார். (அப்படி பலன் வெவ்வேறாக இராதபக்ஷத்தில் சமுச்சயம் உண்டாகமாட்டாதென்று முன் சொல்லப்பட்டிருக்கிறது.)

---

வி:—அ-கை:—ஆனால் மோக்ஷசாதன மென்னவெனில் சொல்லுகிறார்.

संभवात् = கேவல சமாதிரூப சம்பூதியினின்றும்

---

து:—அ-கை :—பகவான் சிருஷ்டிகர்த்தா என்றும் சம்ஹாரகர்த்தா என்றும் அறிவதினால் நரகம் அடையப்படுகிறதில்லை என்பது மட்டும் அந்தஞானத்தின் பிரயோசனமல்ல. ஆனால் மோக்ஷம் சித்திப்பதற்கும் இந்தஞானம் அவசியம்வேண்டியது என்று சொல்லுகிறார்.

संभवात् = ஈசுவரன் சிருஷ்டிகர்த்தா என்கிற அறிவினின்றும்

अन्यत् एव = மோக்ஷத்தின் ஒரு அம்சம் (அதாவது சுகப்பிராப்தி)

(प्राप्यं) = (அடையப்படுவதாக)

(वृद्धा:) = (பெரியோர்கள்)

आहु: = சொல்லுகிறார்கள்

ச:—अन्यदेव...असंभवात्:—ஸம்பவமாகிற காரிய பிர்ம்மம் உபாசனையால் அணிமா 106 முதலிய ஐசுவரியங்களை அடைதலாகியபலன் வேறு என்று சொல்லுகிறார்கள். அஸம்பவமாகிற அவ்யாகிருதத்தின் உபாஸாசனையால் சித்திக்கிற அந்ததமஸில் பிரவேசம், பிரகிருதிலயமாகிற வேறு பலன் என்றும் பௌராணிகர்கள் சொல்லுகிறார்கள்.

ச:—इति...विचचक्षिरे:—எந்த புத்திமான்கள் வியாகிருத அவ்வியாகிருதங்களின் உபாசனைகளின் பலன்களைப்பற்றி எங்களுக்குச் சொன்னார்களோ அவர்களிடமிருந்து இவ்விதமான வசனத்தை நாம் கேட்டிருக்கிறோம். ‖ 13 ‖

---

வி:—असंभवात्=கேவல சம்பூதிக்கு வேறான மேற்சொன்ன நிவிர்த்தியினின்றும்.

अन्यत् एव=வேறானதுமோக்ஷசாதனம் என்று உபநிஷத்துக்கள் சொல்லுகின்றன. लिट् ன் சங்கதியை முன்போல் (82-வது பக்கம்)

---

து:—असंभवात् = ஈசுவரன் சம்ஹாரகர்த்தா என்கிற அறிவுனின்றும்

अन्यत् = மோக்ஷத்தின் ஒரு அம்சம் (அதாவது துக்கநிவிர்த்தி

(प्राप्यं) = (அடைப்படுவதாக)

(वृद्धाः) = பெரியோர்கள்)

आहुः = சொல்லுகிறார்கள்.

---

106. அணிமாதிகள் :—(1)அணிமா அதாவது சரீரம் சூட்சுமமாகுதல்
(2) மணிமா=சரீரம் பெரிதாகுதல்.
(3) லகிமா=சரீரம் லகுவாகுதல்.
(4) பிராப்தி=இந்திரியங்களின் அதிஷ்டானமான தேவதைகளின் ஸ்ருபத்தை அடைதல்.
(5) பிராகாஸ்யம்=கேட்டிருக்கும் ஸ்வர் காதிகளிலும் பார்த்திருக்கும் இந்த லோகத்திலும் வேண்டிய போகங்களை அறியும் சக்தி.
(6) ஈசிதா=ஈசுவரனிடத்தில் அல்லது மற்ற விடங்களில் சக்தி அதாவது மாயையை பிரேரணை செய்தல்.
(7) வசிதா=விஷயங்களை அனுபவித்துக் கொண்டிருக்கையிலும் அவைகளுக்கு வசமாகாமலிருத்தல்.
(8) பிராகாம்யம்=இச்சித்த சுகங்கள் தானகவே கிடைத்தல்.
(9) தேகத்தில் பசி,தாகம் முதலியவை உண்டாகாமை.
(10) தூரத்திலுள்ள சப்தத்தைக் கேட்டல்.
(11) தூரத்திலுள்ள பதார்த்தத்தைப் பார்த்தல்.
(12) மனோவேகத்துடன் தேகம் போகுதல்.
(13) இச்சையை அனுஸரித்து ஸ்வரூபத்தை தரித்தல்.
(14) பிறருடைய தேகத்தில் பிரவேசித்தல்.
(15) இச்சித்தகாலத்தில் மறித்தல்.
(16) அப்ஸர ஸ்திரீகளுடன் தேவதைகள் க்ரீடிப்பதை பார்த்தல்.
(17) ஸங்கல்பானு ரூபமாக வஸ்துக்களை அடைதல்.
(18) ஆஞ்ஞையை தடையன்றியில் செலுத்துதல்.

14. संभूतिंचविनाशं[107]चयस्तद्वेदोभय ँ सह ।

विनाशेनमृत्युंतीर्त्वा संभूत्याऽमृतमश्नुते ॥

यः = எவன்

(अ) संभूतिंच = காரணத்தையும், பிரகிருதியையும்

विनाशंच = நாசமடையத்தகுந்த காரிய பிர்ம்மத்தையும், ஹிர ணியகர்ப்பனையும்

तत् = அந்த

उभयं = இரண்டு உபாஸனைகள்

सह = ஸமுச்சயமாய் நடத்தப்படக் கூடியவை (என்று)

वेद = தெரிந்துகொள்ளுகிறானோ

सः = அவன்

विनाशेन = ஹிரணியகர்போபாஸனையால்

मृत्युं = ஈசுவர ஸம்பந்தமில்லாததும், அதர்மமுமான காமம் முதலிய தோஷ ஸமூஹமான மரணத்தை

तीर्त्वा = அதிக்கிரமித்து

असंभूत्या = அவ்வியாகிருத உபாஸனையால்

अमृतं = பிரகிருதி லயமாகிற மரணுபாவத்தை

अश्नुते = அடைகிறான்.

## சங்கரபாஷ்யம்.

அ - கை :—இப்படி இருப்பதால் (அதாவது) ஸம்பூதி அஸம் பூதிகளின் தனித்தனி உபாசனை நிந்திக்கப்பட்டிருப்பதாலும், இர

---

வி:—அறிக. மற்றவைகளுக்கு அர்த்தத்தை முன் மந்திரத்தில்போல செய்துக்கொள்ளுக.

அ-கை:—अन्यत् என்னும் பதத்தால் கூறினதை விவரிக்கிறார்.

---

து:—ये = எந்த புத்திமான்கள்

नः = எங்களுக்கு

तत् = மோக்ஷசாதனத்தை

विचचक्षिरे = சொன்னார்களோ

(तेषां) = அந்த

धीराणां = புத்திமான்களிடமிருந்து

इति = இந்தபிரகாரம்

शुश्रुम = கேட்டிருக்கிறோம் ॥ 13 ॥

அ - கை :—மேற்சொன்ன மந்திரார்த்தத்தையே வியக்தமாகச் சொல்லுகிறார்.

---

107. வா-ச-யில் இது 11-வது மந்திரம்.

ச:—ண்டும் ஒரேபுருஷார்த்தத்தை (பலனை)க் கொடுப்பதாலும் அவைகளின் சமுச்சயம் யுக்தந்தான்.

त्रिनाशेन :—விநாசம் என்கிற தர்மம் எந்தக் காரியத்தைச் சேர்ந்ததோ அது அந்த தர்மத்தையுடைய பதார்த்தத்துக்கு வேறு காததாகச் (அப்பதார்த்தமாக) சொல்லப்படுகிறது. ஆகவே இவ்விடத்தில் விநாசதர்மமுடைய ஹிரண்யகர்பன் விநாசபதத்தால் குறிப்பிடப்படுகிறான்.

संभूतिञ्च...सह :—எவன் ஸம்பூதியையும் (அசம்பூதியாகிற பிரகிருதியையும்) விநாசத்தையும் ஸம்பூதியையு ஹிரண்யகர்பனையும்) சேர்த்து உபாசிக்கக்கூடியவையாக அறிகிறானோ அவன்.

विनाशेन...अश्नुते :—அவ்வியாகிருதமாகிற விநாசத்தின் உபாசனையால் ஐசுவரியத்தின் அபாவம், அதர்மம் காமம்முதலிய தோஷங்களின் சமூகமாகிற மிருத்தியுவை அதிக்கிரமித்து (அதாவது)

---

வி:—संभूतिंच = சமாதிரூபமான பிரம்மானுபவத்தையும்

विनाशंच=அபிமானம், தம்பம், ஹிம்சை, திருட்டு, இந்திரியங்களின் பாஹியவியவஹாரங்கள் முதலியவைகளின் நிவிர்த்தியையும்

उभय=ஆக இவ்விரண்டையும்

यः = எந்த உபாசகன்

सहवेद = ஒன்று சாதனமாயும், மற்றொன்று சாத்தியமாயும் சேர்ந்து இருக்கவேண்டுமென்று அறிகிறானோ

सः = அந்த உபாசகன்

त्रिनाशेन = தன்னால் அனுஷ்டிக்கப்படும் மேற்சொல்லிய நிவிர்த்தியால் அதாவது நிவிர்த்தியாகிற யோகாங்கத்தால்

---

து:—संभूतिंच=(பகவானுடைய) சிருஷ்டிசெய்யும் தன்மையையும்

विनाशंच = சம்ஹாரம் செய்யும் தன்மையையும்

सह = ஒரே புருஷார்த்தத்துக்கு ஹேதுவாக

तत् उभयं = இந்த இரண்டு (குணங்களையும்)

यः = எவன்

वेद = அறிகிறானோ

(सः) = (அவன்)

त्रिनाशेम = ஹரியின் சம்ஹாரம் செய்யும் தன்மையின் ஞானத்தால்

ச:—ஹிரண்யகர்ப உபாசனையால் அணிமாதி அஷ்டசித்திகள் கிடைக்கின்றன. ஆகையால் இவைகளின் அபாவம் நிவிர்த்தியாய் விடுகிறது) அவ்வித அபாவரூப மிருத்தியுவை அதிக்கிரமித்து அசம்பூதியாகிற அவ்வியாகிருதத்தின் உபாசனையால் பிரகிருதி லயமாகிற அமிருதத்தை அடைகிறான்.

**संभूतिञ्च** :—இந்த மந்திரத்தின் முதலாவது பதமாகிய **संभूति** யில் **अ** அக்ஷரம் லோபமாயிருக்கிறதாக பாவிக்கவேண்டியது ஏனெனில் **अमृतमश्नुते** அதாவது பிரகிருத லயரூப அமிருதத்தை அடைகிறான் என்று பலன் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த பலன் அவ்வியாகிருதத்துக்குத்தான் பொருந்தும். அவ்வியாகிருதம் அஸம்பூதிக்கு அர்த்தம் என்று முன்சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் பிரகிருதி லயமாகிற பலனைச் சொல்லும் சுருதியை அனுசரித்து இப்படியே அர்த்தம் செய்யவேண்டியதே தவிர வேறுவிதமாக செய்யலாகாது. ॥ 14 ॥

---

வி:—**मृत्युं** = சமாதிக்கு விருத்தமான பாபங்களை
**तीर्त्वा** = நாசம்செய்து
**संभूत्या** = சமாதியால்
**अमृतं** = பிராப்தி அதாவது பிரம்மத்தின் பிரத்தியக்ஷானுபவத்தை
**अश्नु** = அடைகிறான்.

மேற்சொன்ன தம்பாதிகளின் விநாசமே பிருகதாரணியத்தில் (III - 5 - 1)

**तस्मात्ब्राह्मणः पांडित्यं निर्विद्यबाल्येन तिष्ठासेत्** (பிராமணன் உபாசனையை அடைந்து பால்யேன அதாவது பாலன்செய்கையால் அதாவது தம்பாதிகளன்றியில் இருக்கவேண்டும்) என்னும் இடத்தில் **बाल्य** சப்தத்தால் தாம்பாதிகளின் நாசம் வித்தைக்கு அங்கமாகச்

---

து:—**मृत्युं** = துக்கம், அஞ்ஞானம் முதலிய அனிஷ்டங்களை
**तीर्त्वा** = அதிக்கிரமித்து
**संभूत्या** = ஹரியின் சிருஷ்டிசெய்யும் தன்மையின் ஞானத்தால்
**अमृतं** = ஆநந்தானுபவரூபமான மோக்ஷத்தின் ஒரு அம்சத்தை
**अश्नुते** = அடைகிறான்.

தாத்பரியம்:—சிருஷ்டிசெய்கிறவன் என்பதினால் குறிப்பிடப்படும் ஆநந்தகுணாத்மகனான ஈசுவரனை அறிதனின்றும் ஆநந்தானுபவமும், நாசம்செய்தல் என்னும் ஞானத்தால் சகலதுக்க நிவிர்த்தியும், ஆக இவ்விரண்டுவித அம்சங்களுடன் கூடின மோக்ஷத்தின் பொருட்டு இரண்டுவிதஞானங்களும் அவசியம் வேண்டியவை.

வி:—சொல்லப்பட்டிருக்கிறது. இவ்விடத்தில் संभूतिविनाश சப்தங்களால் சிருஷ்டியையும் பிரளயத்தையும் ஸ்வீகரித்துக்கொண்டு. காரியரூபமான ஹிரணியகர்பனேயும் காரணரூபமான மாயையையும் உபாசிக்கும் தன்மை விதிக்கப்படுகிறது என்கிற சங்கரவியாக்கியானம் பொருந்தாது. ஏனெனில் அப்படிப்பட்ட உபாசனத்திற்கு பாப நிவிர்த்தி, அமிருதத்துவபிராப்தி (மோக்ஷ பிராப்தி) ரூபமான பல வசனம் பொருந்தாது. ॥ 14 ॥

து:—9 முதல் 14 வரையிலுள்ள மந்திரங்களின் அர்த்தங்களுக்குப் பிரமாணவாக்கியங்களாவன:—

अन्यथोपासकायेतु तमोन्धंयान्त्यसंशयम् ।
ततोधिकमिवव्यक्तं यान्तितेषामानिन्दकाः ॥
तस्माद्यथास्वरूपंच नारायणमनामयम् ।
अयथार्थस्यनिंदांच ॥ 9 ॥ 10 ॥ येविदुस्सहसज्जनाः ॥
तेनिन्दयाऽयथार्थस्यदुःखाज्ञानादिरूपिणः ।
दुःखाज्ञानादिसंतीर्णाः सुखज्ञानादिरूपिणः ॥
यथार्थस्यपरिज्ञाना त्सुखज्ञानादिरूपताम् ।
यान्ति ॥ 11 ॥ एवं सृष्टिकर्तृत्वं नांगीकुर्वन्तियेहरेः ॥
तेपियान्तितमोघोरं तथासंहारकर्तृताम् ।
नांगिकुर्वन्तितेप्येत्रं तस्मात्सर्वगुणात्मकम् ॥
सर्वकर्त्तारमीशेशं सर्वसंहारकारणम् ॥ 12 ॥ 13 ॥
वेयेदसंहृतिज्ञानाद्देहवेधाद्विमुच्यते ॥
सुवज्ञानादिकर्तृत्व ज्ञानात्तव्द्यक्तिमात्रजेत् ।
सर्वदोषविनिर्मुक्तं गुणरूपंजनार्दनम् ॥
जानीयान्नगुणानांच भागहानिंप्रकल्पयेत् ।
नमुक्तानांहरेस्साम्यं मपिविष्णोरभिन्नताम् ॥
नैवप्रचिंतयेत्तस्माद्ब्रह्मादेस्साम्यमेव वा ।
मानुषादिविरिंचान्तं तारतम्यंविमुक्तिगम् ॥
ततोविष्णोःपरोत्कर्ष सम्यग्ज्ञात्वाविमुच्यते ॥
(इति कौर्मे)

சிலர் (அத்வைதிகள்) வித்தைக்கு தேவதோபாசனே என்றும், சம்பூதிக்கு உற்பத்தியுள்ள ஹிரணியகர்பன் என்றும், அசம்பூதிக்கு பிரகிருதி என்றும் அர்த்தம்செய்து, வித்தை அவித்தை (கர்மம்) இவைகளால் ஸ்வர்க்கம் முதலியவைகள் அடையப்படும் என்றும், சம்பூதி அசம்பூதிகளின் சமுச்சய (சேர்க்கையான) உபாசனேயால் சத்தியலோகம் முதலியவைகள் அடையப்படும் என்றும் சொல்லுகிறார்கள். இந்த வியாக்கியானம் பொருந்தாது. ஏனெனின் (1) புராணத்தாலேயே வேறுவித வியாக்கியானம்

து:—செய்யப்பட்டிருக்கிறது. (2) கர்மத்துடன் சேர்ந்த ஞானத்தால்தான் மோக்ஷம் சித்திக்கும் என்பது இந்தமந்திரங்களின் அர்த்தம் என்று (விசிஷ்டாத்வைதிகள்) சொல்லுவது பொருந்தாது. ஏனெனின் नान्यःपन्थाविद्यते अयनाय (புருஷசூக்தம்) என்னும் சுருதியில் மோக்ஷத்திற்கு ஞானத்தைத் தவிரவேறு மார்க்கம் இல்லை என்று சொல்லப்பட்டிருக்கிறது.

(3) கேவலகர்மியைவிட கேவலஞானி அதிக சம்சாரத்தை அடைகிறான்என்றுசொல்லுவது कामकारेणाचैवमेके என்னும் (3-4-15) சாரீர சூத்திரத்திற்கு விருத்தமாயிருக்கிறது.

(4) இந்த உபநிஷத்தின் உபக்கிரமம் முதலிய தாற்பரிய லிங்கத்தால் (தாற்பரியத்தைக் குறிப்பிடும் காரணத்தால்) ஆத்மஞான நிஷ்டை அதாவது ஈசுவர உபாசனையே நிர்ணயிக்கப்பட்டிருப்பதால், கர்மத்துடன் ஈசுவரனுக்கு வேரான தேவதையின் உபாசனையின் சேர்க்கை विद्याञ्चअविद्याञ्च என்னும் மந்திரத்தில் சொல்லுவது பிரகிரணத்திற்கு அனுகுணமன்று.

(5) कुर्वन्नेवेह என்னும் மந்திரத்தில் ஞானமன்றியில் கேவலம் கர்மம் விதிக்கப்பட்டிருக்கிறதுபோல் இவ்விடத்திலும் தேவதோபாசனையுடன் சேர்ந்த கர்மம் சொல்லப்பட்டிருக்கிறது என்றுசொல்லுவது யுக்தமன்று. ஏனெனின் அந்தமந்திரமும் நிவர்த்தகர்மி(ஞானி) பரமாகவே முன்னமேயே அர்த்தம்செய்யப்பட்டிருக்கிறது.

(6) संभूतिंच विनाशंच என்பதில் விஞசபதம் ஏன்வந்திருக்கிறது. நாசதர்மம்ஹிரணியகர்பனுக்கு இருப்பதால்விநாசபதம் இலக்ஷணையால் ஹிரணியகர்பனையே குறிப்பிடுகிறது என்று சொல்லுவது கூடாது. ஏனெனின் சம்பூதி சப்தத்தால் உற்பத்தியுடன் கூடின ஹிரணியகர்பனே குறிப்பிடும்படியாயிருப்பதால், இரண்டுபதங்களால் ஒரே அர்த்தத்தைச்சொல்லுதல் என்னும் தோஷம் சம்பவிக்கும்.

(7) சம்பூதி சப்தம் அவ்வியாகிருதம் என்னும் மாயையை சொல்லவும்மாட்டாது. அசம்பூதி சப்தத்தின் அகாரம் லோபத்தை அடைந்து மிச்சமான சம்பூதி சப்தம் உற்பத்தியற்றமாயையைச் சொல்லும் என்ற வார்த்தையால் அபூர்வமான வியாகரண (வியாக்கியான) சாமர்த்தியம் ஏற்படுகிறது; அதாவது வியாகரண விருத்தம் என்பது கருத்து.

15. हिरण्मयेनपात्रेण[108]सत्यस्यापिहितंमुखम् ।
तत्त्वंपूषन्नपावृणु सत्यधर्मायदृष्टये ॥

हिरण्मयेन = ஸ்வர்ணமயம்போல தேஜோரூபமான.

पात्रेण = பாத்திரத்தினுல் அதாவது பாத்திரம்போ லிருக்கிற மூட்டத்தினுல்.

सत्यस्य = ஸத்தியத்தின், ஆதித்திய மண்டலத்திலிருக்கிற பிரமத்தின்.

मुखं = துவாரம்.

अपिहितं = மறைபட்டிருக்கிறது.

(हे)पूषन् = சூரியனே.

त्वं = நீ

सत्यधर्माय = சத்தியமான தர்மத்தை அனுஷ்டிக்கிற எனக்கு

दृष्टये = திருஷ்டியில் தெரியும்பொருட்டு, சத்தியாத்மாவான உன்னை அடையும் பொருட்டு.

तत् = அந்த மறைவை.

अपावृणु = விலக்கிவிடு.

## சங்கரபாஷ்யம்.

அ-வை :—மானிட ஸம்பத்து[109] தைவஸம்பத்து இவைகளால்

---

வி:—அ-கை:—இவ்விதமாக ஆசாரியர் சாங்கபக்தியோகத்தை (உபாசனத்தை) உபதேசித்து, அந்த பக்தியோகத்தி லிருக்கிறவன் ஸ்மரிக்கவேண்டிய இரண்டு மந்திரங்களைச் சொல்லுகிருர். அவை

---

து :—அ - கை :—இந்தப்பிரகாரம் முதலிரண்டுமந்திரங்கள்காண்பித்தபடி உபநிஷத்தில் அதிகாரம் எவனுக்கு உண்டாயிருக்கிறதோ அவனுக்கு अनेजत् முதலிய மந்திரங்களால் பகவத்ஸ்வரூபம் சொல்லப்பட்டது. यस्तुसर्वाणि முதலிய இரண்டா மந்திரங்களால் பகவானுடைய சாக்ஷாத்காரமே மோக்ஷத்தை அடைய காரணமென்று சொல்லப்பட்டது. இந்த சாக்ஷாத்காரம் சிரவணம் முதலியவைகளால்மட்டும் உண்டாகமாட்டாது. மேற்சொன்ன சாக்ஷாத்காரத்தால்மட்டும் மோக்ஷம் சித்திக்கமாட்டாது, ஆனுல் மோக்ஷம்,

---

108. வா-ச-யில் हिरण्मयेन முதல் मुखं வரையில் 18-வது மந்திரத்தின் முற்பாதிபாகம்.

109. மானிடஸம்பத்தாவது:—நல்ல சரீரம், மாடு, பூமி, பொன்முதலியவை என்றும், தைவஸம்பத்தாவது :—தேவதை விஷயமான ஞானம் என்றும் பிரஹதாரணியக உபநிஷத்து 1-4-17-ன் பாஷியத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

ச:—கிடைக்கக்கூடியதாயும் சாஸ்திரத்திற்சொல்லியுமிருக்கிற பலன்பிரகிருதிலயம் 110 வரையிலிருக்கிறது. இதுவரையில்சம்சாரம்பரவுகிறது. இதற்குமேல் மூன்று இச்சைகளை விட்டுவிடுதலுடையவும் ஞான நிஷ்டையுடையினதுமான பலன், அதாவது 7-வது மந்திரத்தில் "आत्मैवाभूत्विजानत:" என்கிற சர்வாத்மப்பாவம் (சகலபூதங்களையும் தன் ஸ்வரூபமாய் பாவித்தல்) ஆகிற பலன் உண்டாகிறது. இவ்விதமாக இந்த உபநிஷத்தில் பிரவிர்த்தி நிவிர்த்திகளாகிற இருவித வேதார்த்தம் காண்பிக்கப்பட்டது. இவைகளில் (1) பிரவிர்த்தி லக்ஷணத்துடன் கூடிய விதி 111 நிஷேத ரூபமான 112 சகல வே

---

வி:—களில் முதல் மந்திரத்தில் பூஷ சப்தத்தால் குறிப்பிடப்பட்ட பகவானைக் குறித்து மேற்சொன்ன சமாதிக்கு விருத்தமானவைகளின் நிவிர்த்தியை பிரார்த்திக்கிறார்.

---

து:—சாக்ஷாத்காரம், இவைகள் சித்திக்கும்பொருட்டு பகவானுடைய கிருபை அவசியம். ஆகையால் சிரவணமனன நிதித்தியாசனங்களைச் செய்தவன் பகவானுடைய சாக்ஷாத்காரத்தை அடையும் பொருட்டும், அப்படி சாக்ஷாத்காரத்தை அடைந்தவன்

---

110. பிரகிருதி லயம்:—பிரகிருதி என்றால் அவ்வியக்தம் (மூலப்பிரகிருதி), மஹத் தத்துவம், அஹங்காரம், பஞ்சதன்மாத்திரைகள். இந்த பிரகிருதிகளிடத்தில் ஆத்மபுத்தியை வைத்து இவைகளை சிந்திக்கிறயோகி பிரகிருதியில் லயமாகிறான். இந்த பிரகிருதி அவித்தியாத்மகம், ஆகையால் நசுவரம். பிரகிருதி லயத்தில் ஏற்பட்டிருக்கிற காலம் முடிந்தவுடன் மறுபடியும் ஸம்ஸாரத்துக்குப் புருஷன் வருகிறான். வாயுபுராணத்தில் இந்தகாலம் விவரிக்கப் பட்டிருக்கிறது. பஞ்சபூதங்களை சிந்திக்கிறவன் அவைகளில் லயமடைந்து 100-மன்வந்திரம் வரையில் அந்தஸ்திதியி லிருக்கிறான். அஹங்காரத்தை சிந்திக்கிறவன் 1000-மன்வந்திரம் அதில் லயமடைகிறான். மஹத்தத்துவத்தை சிந்திக்கிறவன் 10000-மன்வந்திரம் வரையில் அதில் லயமடைகிறான். மூலப்பிரகிருதியை சிந்திக்கிறவன் 100000-மன்வந்திரம் லயமடைகிறான். லயமடைந்தகாலத்தில் ஒவ்வொருவனும்முக்தன்போல் யாதொரு துக்கமன்றியதிலிருந்து தூங்கி எழுந்தவன் போல் லயத்தினின்றும் வெளிப்பட்டு ஸம்ஸாரத்தில் பிரவேசிக்கிறான். ஆகையால் பிரகிருதிலயம் வரையிலும் ஸம்சாரப் பிராப்தி யிருக்கிறது.

111. ஒரு கர்மத்தைச் செய்யவேண்டும் என்றும் அதின் பலன் இன்னதென்றும் சொல்லும் வேத வசனம் விதி எனப்படும்.

112. அநர்த்தத்தைக் கொடுக்கும் கர்மத்தைச்செய்யவேண்டாம் என்றுசொல்லும் வசனம் நிஷேதம் எனப்படும்,

ச:—தார்த்தத்தை வெளிப்படுத்துவதில் प्रवर्ग [113] என்கிற கர்மம்வரை யிலுள்ள शतपथ பிராமணம் உபயோகப்படுகிறது. (2)நிவிர்த்தி லக்ஷணத்துடன்கூடிய வேதார்த்தத்தை வெளிப்படுத்துவதில் சதபதபிராமணத்துக்குமேல் வருகிற बृहदारण्यक உபநிஷத்து உபயோகப்படுகிறது. இரண்டாவது மந்திரத்திற் கர்மத்தைச் செய்துகொண்டே ஜீவிக்க இச்சிக்கவேண்டும் என்று சொல்லியபடி எவன் அபரப்பிரம்ம விஷயமான [114] தேவதோபாஸனைகளைச் செய்துகொண்டு சாந்திகலியாணம் முதல் ஸ்மசான நிஷ்டைவரையிலுள்ள கர்மங்களைச் செய்ய இச்சிக்கிறனே அவன் அவித்தியையால் மிருத்தியுவை அதிக்கிறமித்து வித்தியையால் அமிருதத்தை அடைகிறன் என்று 12-வது மந்திரத்திற் சொல்லப்பட்டிருக்கிறது. எந்த மார்க்கத்தால் அந்த அமிருதபாவம் அடையப்படும் என்பதை இனி சொல்லுகிறர். இந்த சூரிய மண்டலத்திலிருக்கிற [115] புருஷனும் வலது கண்ணிலிருக்கிற புருஷனும் இருவரும் சத்தியப்பிரம்மம். (பிரு 5-5-2) இப்படி உபாசிக்கிறவனும் சாஸ்திரத்திற் சொல்லிய கர்மங்களைச் செய்துகொண்டும் எவன் இருக்கிறனே அவன் அந்தியகாலம் வந்தசமயத்தில் ஆத்மாவை அடைய துவாரமாயிருக்கிற சத்தியாத்மாவை யாசிக்கிறன்.

---

து:—மோக்ஷத்தை அடையும்பொருட்டும் பகவானை பிரார்த்திக்க வேண்டியது என்னும் அபிப்பிராயத்தால் பிரார்த்தனையின் பிரகாரம் हिरण्मयेन முதல் स्मर வரையிலுள்ள மந்திரங்களால் கூறப்படுகிறது.

---

113. பிரவர்க்கம் என்பது ஒரு கர்மம். சதபத பிராம்மணத்தில் 14 காண்டங்கள். இவைகளில் முதல் 13 காண்டங்கள் பிரவர்த்தி மார்க்கத்தை அதாவது கர்ம பாகத்தைச் சொல்லுகின்றன. 13-வது காண்டத்தின் கடைசி பாகத்தில் பிரவர்க்கம் என்கிற கர்மம் சொல்லப்பட்டிருக்கிறது. சதபத பிராம்மணத்தின் 14-வது காண்டம்தான் பிரஹு தாரணியக உபநிஷத்து. இந்த உபநிஷத்து நிவர்த்தி மார்க்கத்தை உபதேசிக்கிறது.

114. முண்டகோபநிஷத்து 1 - 4 - 5-ல் சொல்லியபடி பரம் அபரம் என வித்தியை இரண்டு விதம். பரவித்தியையாவது அக்ஷரமான பரப்பிரம்மத்தை அடையும்படிச் செய்வது; அபர வித்தியையாவது அதற்கு வேறுன அதாவது தேவதைகள் முதலியவைகளை விஷயமாக்கும் வேதங்கள்-வேதாந்தங்கள்.

115. பிரத்தியக்ஷப் பிரமாண்டத்தில் பரமாத்மாவுக்கு தேஜோரூப சூரியன் வெகு மேன்மையான பிரதீகமாயிருப்பதால் சூரியனை குறிப்பிடப்பட்டது.

ச :—हिरण्मयेन…मुखं:—சூரிய மண்டலத்திலிருக்கிற புருஷன் சத்தியம் என்று பெயருள்ள பிரம்மம். சூரியனுடைய தேஜோரூபமான அது மறைபட்டிருக்கிறது. ஸ்வர்ணம்போல் பளபளப்பாயிருப்பதால் அது ஹிரண்மயம் என்று சொல்லப்பட்டது. ஒரு குடத்தின்மேல் ஒரு பாத்திரத்தை மூடினால் குடத்திற்குள்ளிருக்கும் பதார்த்தம் தெரியாததுபோல் சூரியமண்டலத்திலிருக்கிற பிரம்மம் சூரியனுடைய தேஜோமய கவசத்தால் மறைக்கப்பட்டிருப்பதால் அந்த பிரம்மத்தின் ஸ்வரூபம் பார்க்கப்படுகிறதில்லை.

---

வி:—हेपूषन् = சூரியனுக்குள் வசிக்கும் பகவானே பிருகதாரணியத்தில் (III - 7 - 9) यआदित्येतिष्ठन् முதல் अन्तरो यमयति (எவன் சூரியனுக்குள்ளிருந்துக்கொண்டு சூரியனை நியமனம் செய்கிறானோ) என்கிறவாக்கியத்தால் சூரியனுக்குள் ஈசுவரன் வசிக்கிறான் என்று ஏற்படுகிறது. शास्त्रदृष्ट्यातु उपदेशो वामदेववत् ब्र०सू० (1 - I - 30) என்கிற சூத்திரத்தால் கௌஷீதகி உபநிஷத்தில் இந்திரன் प्रतर्दन னைப் பார்த்து பிரம்மத்தை உபதேசிக்குமிடத்தில் எனக்கு அந்தர்யாமியானபிரம்மத்தைஉபாசி என்று சொல்லுமிடத்தில் என்னை உபாசி என்று சொல்லியிருப்பதானது, சாஸ்திரத்தால் எல்லாவற்றிற்கும் அந்தர்யாமியாயிருப்பதே பிரம்மம்என்று அறிந்துசொல்லியிருக்கிறான். இப்படியே வாமதேவரும் अहंमनु: என்னும் வாக்கியத்திலும் தன்னுடைய அந்தர்யாமியே மனுவின் அந்தர்யாமி என்று சொல்லுவதற்குப்பதிலாக தானே மனு என்றுசொல்லியிருக்கிறார். இதனால் ஒவ்வொரு வஸ்துவைச் சொல்லும் பதத்தால் அந்த வஸ்துவின் அந்தர்யாமியையும் குறிப்பிடலாமென்று கருத்து. ஆகவே சூரியனைச் சொல்லும் पूष சப்தத்தால் சூரியாந்தர்யாமி என்று அர்த்தம் செய்யவேண்டும். (வேறு ஒரு அர்த்தம்):—

पूषन् = ஆசிரதர்களை போஷிக்கிறவனே

---

த :—हिरण्मयेन = ஸ்வர்ணமயம்போ லிருப்பதால் ஸ்வர்ணமயம் என்று சொல்லப்படுகிற அதாவது பிரகாசமயமான

पात्रेण = இரசங்களை பானம்செய்து ஜகத்தை இரக்ஷிப்பதால் பாத்திரம் என்று சொல்லப்படுகிற சூரியமண்டலத்தால்

सत्यस्य = சூர்யமண்டலத்தி லிருக்கிற சத்குணபூரணரான

तव = உம்முடைய (பகவானுடைய)

मुखं= முகம்முதலிய சகலசரீரம் (எப்போதும்)

अपिहितं= மூடினதாக இருக்கிறது. ஆகையால்

हे पूषन् = ஓ பூரணரே (பகவானே)

ச :—तत्...अपावृणु :—ஆகையால் ஓ ஸூரியனே அந்த மறைவை விலக்கிவிடு. ஏனெனின்

सत्यधर्माय दृष्टये :—உன்னுடைய சத்தியமான ரூபத்தை உபாஸிக்கிறதினால் சத்தியதர்மத்துடன் கூடினவனாயிருக்கிற நான், அல்லது, எதார்த்த தர்மத்தை அனுஷ்டிக்கிற நான் சத்திய ரூபமான உம்முடைய ஞானம் அடையும்பொருட்டு (உம்முடைய மறைவை விலக்கிவிடும்.) ॥ 15 ॥

---

வி:—साक्षादप्यविरोधं जैमिनिः என்னும் (1 - 2 - 29 - வது) பிரம்ம ஸூத்திரத்தில் அக்கினி சப்தமானது अग्नेनयाति என்னும் அவயவவித்பத்தியில் பரமாத்மாவை நேரில் சொல்லலாமென்று சொல்லியிருப்பதுபோல் இவ்விடத்திலிருக்கும் पूषन् சப்தமும் पोषयाति போஷிக்கிறார் என்னும்அர்த்தத்தால் பரமாத்மாவை நேராகச்சொல்லலாம்.

सत्यस्य = இந்தபதம் மாயை முதலியவைகளைப்போல் ஸ்வரூபத்தில் விகாரமற்ற ஜீவாத்மாவை குறிப்பிடுகிறது.

सत्यञ्च अनृतञ्चसत्यमभवत् என்கிற (तै II6) இடத்தில் சத்தியம் என்பது பிரம்மம் சத்தியமாய் அதாவது ஜீவனுக்கு அந்தர்யாமியாய் இருக்கிறதாக சொல்லப்பட்டிருக்கிறது, ஆகவே

सत्यस्य ஜீவனுடைய

मुखं =அநேக இந்திரியங்களுக்கு ஆதாரமானதால் முகத்துக்கு ஒப்பா யிருக்கிறமனது

हिरण्मयेन = தங்கத்தால் செய்யப்பட்டவை கர்மத்தால் (செய்கையால்) ஏற்படுகின்றன. அதுபோல் மற்ற யோக்கிய வஸ்துக்களும் கர்மத்தால் ஏற்படுகின்றன. ஆகையால் ஹிரண்மய சப்தம் யோக்கிய வஸ்துக்களைக் குறிப்பிடுகிறது. யோக்கிய வஸ்துக்கள் என்னும்

पात्रेण = பாத்திரத்தால், பரமாத்மாவினிடத்தில் மனது செல்லாம லிருக்கும்படிச் செய்யும் வஸ்துக்களால்

---

து:—तत् = அந்த சரீரத்தை

त्वं = நீர்

सत्यधर्माय = சத்தியமான பகவானை ஹிருதயத்தில் தரித்தல் அதாவது தியானித்தல் முதலிய தர்மங்களுடன் கூடின பக்தனை எனக்கு

दृष्टये = உம்முடைய தர்சனத்தின்பொருட்டு

अपावृणु = மறைவினின்றும் நீக்கிவிடும். ॥ 15 ॥

16. पूषन्नेकर्षेयमसूर्यप्राजापत्य व्यूहरश्मीन्समूह ।
तेजोयत्तेरूपंकल्याणतमंतत्तेपश्यामियो[116]ऽसावसौपूरुषःसोऽहमस्मि॥

पूषन् = ஜகத்தைப் போஷிக்கிறவனே

एकर्षे = एक एव ऋषति ஒருவனாக சஞ்சரிக்கிறவனே

यम = எல்லாவற்றையும் நியமனம் செய்கிறவனே

सूर्य = கிரணங்கள், பிராணங்கள், இரஸங்கள், இவைகளை ஸ்வீகரிக்கிறவனே.

प्राजापत्य = பிரஜாபதி புத்திரனே

रश्मीन् = கிரணங்களை

व्यूह = விலக்கிவை

तेजः = தாபத்தைக் கொடுக்கும் ஜோதியை

समूह = ஒன்றாகச் சேரு

ते = உன்னுடைய

यत् = யாதொரு

कल्याणतमं = மிகவும் சுந்தரமான

रूपं = ஸ்வரூபம் (உண்டோ)

तत् = அதை

ते = உன்னுடைய

(प्रसादात्) = (அனுக்கிரகத்தால்)

पश्यामि = பார்க்கிறேன்

यः = எவன்

असौ = இந்த சூரியமண்டலத்திலிருக்கிற

पूरुषः = புருஷனோ

सः = அவனே

असौ = இந்த

अहं = நானாக

अस्मि = இருக்கிறேன்.

---

வி:—अपिहितं = மூடப்பட்டிருக்கிறது.

இருதயத்திலிருக்கும் பரமாத்மாவினிடத்தில் மனது செல்லவில்லை என்று அர்த்தம்.

तत् = ஜீவனுடைய மனதை

त्वं = இந்திரியங்களின் ஈசனான நீ

अपावृणु = தடையற்றதாகச் செய். யாதுகாரணத்தால் எனின்

सत्यधर्माय = ஜீவனுக்கு தர்மமாய் ஏற்பட்டிருக்கும்

दृष्टये = தர்சனத்தின்பொருட்டு அதாவது உன்னுடைய தர்சனத்தின்பொருட்டு என்று கருத்து.

---

116. வா-ச-யில் योसा முதல் अस्मिவரையில் பிற்பாதிபாகம்.

சங்கரபாஷ்யம்.

पूषन्...तत्ते = (பதவுரையில் எழுதியதைவிட அதிகமாக ஒன்றுமில்லாதபடியால் மறுபடியும் பாஷ்யம் எழுதப்படவில்லை.

---

வி:—அ-கை:—மேற்சொன்ன தர்சனத்தினால் தர்சிக்கத் தகுந்த பரமாத்மாவை விசேஷமாய் பிரதிபாதித்து, தர்சனத்தையும் அதற்குச் சாதனமானதையும் பிரார்த்திக்கிறான்

पूषन् = தன்னை அடைந்தவர்களைப் போஷிக்கிறவனே.

एकर्षे = (एकश्चासौ ऋषिश्च = एकर्षिः)

இந்திரியங்களையும் அவைகளின் விஷயங்களையும் பார்ப்பதில் (அறிவதில்) இவனைவிட மேலானவன் ஒருவருமில்லை. இப்படிப் பட்டவனே.

இந்த அர்த்தத்தை नान्यतोऽस्तिद्रष्टा (3-7-23) (இவனுக்குச் சமானமான திர்ஷ்டா இல்லை.)
என்றும் பிரஹதாரணிய சுருதியும் சொல்லுகிறது.

यम = எல்லாரையும் நியமனம் செய்கிறவனே.

सूर्य = (सुष्ठुप्रेरयति) தன்னுடைய பக்தர்களுடைய புத்தியை செவ்வையாய் பிரேரணை செய்கிறவனே.

प्राजापत्य = சதுர்முக பிர்ம்மாவின் புத்திரர்களுக்கு அந்தர்யாமியா யிருக்கிறவனே. (அல்லது) प्रजापतेः एव = प्राजापत्यः

---

து :—हेपूषन् = சகல குணங்களால் பூரணமா யிருப்பதால் பூஷா என்று பெயரை அடைந்து பூஷா என்னும் தேவதையின் அந்தர்யாமியா யிருக்கிறவரே.

हे एकर्षे = एकऋषे = சகலத்தையும் விஷயமாக உடையதினால் பிரதானமா யிருக்கிறது ஞானம், அந்த ஞானமுடையவரானபடியால் एकर्षि என்னும் பெயரை அடைந்து एकर्षि என்னும் பெயருள்ள இரிஷியின் அந்தர்யாமியா யிருக்கிறவரே.

हे यम = சகலத்தையும் நியமனம் செய்கிறதினால் யமன் என்னும் பெயரை அடைந்து யமன் என்கிற தேவதையின் அந்தர்யாமியா யிருக்கிறவரே.

हेसूर्य = ஞானிகளால் அடையப் பட்டவராகையால் சூரியன் என்னும் பெயரை அடைந்து சூரியனுடைய அந்தர்யாமியா யிருக்கிறவரே.

हे प्राजापत्य = பிரஜாபத்தியாகிற ஹிரணியகர்பனால் விசேஷமாய் அடையக்கூடியவ ராகையால் பிரஜாபத்தியர் என்னும் பெயரை அடைந்து பிரஜாபதிக்கு அந்தர்யாமியா யிருக்கிறவரே (பிரஜாபதியின் புத்திரன் பிராஜாபத்தியின் என்று அர்த்தமல்ல)

வி:—वैश्वानर इति वत् = அதாவது விசுவாநரனேயே வைசுவாநரன் என்று சொல்லுவதுபோல் பிரஜாபதியையேபிராஜாபதியன்என்று சொல்லலாம். प्रजानांपतिः प्रजापति : என்றும் விக்பத்தியால் பிரஜாபதிஎன்றல் விஷ்ணு. प्रजापतिश्चरातिगर्भेअन्तः (விஷ்ணுவானவன் சகல பிராணிகளுக்குள் சஞ்சரிக்கிறன்) என்னும் புருஷ ஸூக்தவாக்கியத்தில் பிரஜாபதி சப்தம் விஷ்ணு என்று அர்த்தமாகிறது.

रश्मीन् = உம்முடைய திவ்யரூப தர்சனத்திற்கு உபயோகமன்றி யிலிருக்கிற உம்முடைய உக்கிரமான கிரணங்களை

व्यूह = போக்கிவிடும்

तेजः = உம்முடைய தர்சனத்திற்கு உபயோகமான குளிர்ந்த தேஜஸை

समूह = சேர்த்துக் கொள்ளும்

यत्ते... அ-கை:—அப்படி போக்கிவிடுவதற்கும் சேர்த்துக் கொள்ளுவதற்கும் காரணமென்ன வெனின், அர்ச்சுனன்முதலானவர்களைப்போல் உம்முடைய ஸ்வரூபத்தைப் பார்க்க இச்சிக்கிறேன் என்று சொல்லுகிறேன்.

यत् = आदित्यवर्णं तमसः परस्तात् முதலிய (पुरुषसूक्त) சுருதிகளில் பிரசித்தமான யாதொரு

ते = आनन्दोब्रह्म (ஆனந்தமே பிரமம் என்று நிகறற்ற யோக்கிய ரூபமான உன்னுடைய

कल्याणतमं = சௌந்தரியம் முதலிய வெகுகுணங்களால் மிகவும் விரும்பத் தகுந்ததாயும், கல்யாண குணங்களுக்குள் மிகவும் கல்யாணமாயும் (சுபங்களுக்கு ஆச்ரயமாயும் என்று கருத்து)

---

து:—रश्मीन् = என்னுடைய (ஜீவனுடைய) ஸ்வரூப ஞானத்தை

व्यूह = விர்த்தி செய்யும்

तेजः = வெளியிலுள்ள ஞானத்தையும் (விர்த்தி ஞானத்தையும்)

समूह = விர்த்தி செய்யும், रश्मि யை விர்த்திஞானமாயும் तेज என்பதை ஸ்வரூபஞானமாயும் வைத்துக்கொள்ளலாம்

ते = உம்முடைய

कल्याणतमं = கல்யாணத்தைக் கொடுக்கும்படியான यत् — யாதொரு

रूपं = ரூபம் உண்டோ

तत् = அதை

ச:—पश्यामि = நான் உம்முடைய அனுக்கிரஹத்தால் பார்க்கிறேன். சேவகன்போல் நான் உம்மை யாசிக்கவில்லை. ஏனெனின்

योसावसौ...अस्मि = இந்த சூரியமண்டலத்தி லிருக்கிற புருஷனே நான். இவனை புருஷன் என்பதற்குக் காரண மென்னவெனின்.

(1) புருஷன்போல் வியாஹிருதிகளை[117] அவயவங்களாக உடையவன்.

(2) (அல்லது), பிராணன், புத்தி, இவைகளின் ரூபமாய் அவனால் ஸமஸ்த ஜகத்தும் பூர்ணமா யிருக்கிறது.

(3) (அல்லது) தேகமாகிற (புரி) பட்டணத்தில் (சயதே) சயனிக்கிறவன் ‖ 16 ‖

---

வி:—रूपं = உம்முடைய திவ்ய ரூபம் உண்டோ

ते = உம்முடைய

तत्= அதை

पश्यामि = பார்க்கவேண்டும். உம்மைப்பார்க்க விரும்புகிறேன் என்று தாற்பரியம்.

---

து :—ते = உம்முடைய

(प्रसादात् ) = (கிருபையால்)

पश्यामि = பார்க்கிறேன்

சூரியனுடைய கிரணங்களை இல்லாமற் செய்வதினால் சூரியாந்தர்கதமானதை தெரியாமல் போய்விடுமாகையால் रश्मि என்பதற்குசூரியகிரணம் என்று அர்த்தம் செய்யக்கூடாது.

योसौ...அ-கை:—சகல ஜீவர்களுக்குள் உத்தமனான முக்கிய வாயுவாகிற பிரதீகத்தில் விஷ்ணுவின் இருப்பு முதலியவைகளின் ஞானம் அவசியம் வேண்டியது என்னும் பாவத்தால் அந்த இருப்பு முதலியவைகளை மந்திரம் சொல்லுகிறது.

यः असौ = பிரசித்தனான எவன்

असौ = முக்கிய பிராணனிடத்தில் (இது असु பதத்தின் ஏழாம் வேற்றுமை)

(स्थितः) = (இருக்கிறானோ)

सः = அந்த

---

117. ஆதித்திய மண்டலத்திலிருக்கிற புருஷனுக்கு பூலோகம், சிரசு புவர்லோகம் கைகள், ஸ்வர்கலோகம் பாதங்கள், பூலோகம் முதலியவை வியாஹிருதிகளாகச் சொல்லப்படுகின்றன. இவைகளை அவையவங்களாக உடையவன் புருஷனாகிறான்.

வி:—अकायं अव्रणं (ई 8) अशरीरं शरीरेषु (कट 1-2-22) (சரீரமற்றது, சரீரங்களிலிருப்பது) अपाणिपादो जवनोगृहीता (मु 1-1-6) (கைகாலற்றது, வேகமாய் ஓடத்தக்கது, வஸ்துக்களை கிரகிக்கும் தன்மையுள்ளது) முதலியசாமானிய வசனங்கள் பரமாத்மாவுக்குச் சரீரமில்லை என்று பொதுவாய்ச் சொல்லுகின்றன.

(1) अजायमानो बहुधा विजायते (புருஷ ஸூக்தம்) (உண்டாகாதவன் அதாவது கெட்ட சரீரமில்லாதவன் வெகு விதமாம் உண்டாகிறான்.) (2) अजोपिसन्नव्ययात्मा भूतानामीश्वरोपिसन् । प्रकृतिं धिष्ठाय संभवामि आत्ममायया ॥ (भ - गी 4-16) (பிறப்பற்றவனாயினும், நாசமற்

---

து:—पुरुषः = புருஷன், விஷ்ணு

अहं = अहेयत्वात्. தள்ளத்தகாதவனானதால் அஹம் என்று சொல்லப்படுகிறான்.

अस्मि = எப்போதும் இருக்கிறான் என்றும் ஞானத்திற்கு விஷயமாகிறதினால் அஸ்மி என்று சொல்லப்படுகிறான். அஸ்மி என்பது வினைச்சொல்போலிருக்கும் அவ்வியயம். இப்படிப்பட்ட உன்னை பார்க்கிறேன் என்று पश्यामि என்பதுடன் அன்வயிக்க வேண்டியது.

வேறு ஒரு அர்த்தம்:—

असौ असौ இவ்விரண்டு பதங்களையும் முதல் வேற்றுமையில் அறியலாம்.

पूषा முதலிய எல்லாவற்றிலும் ஈசுவரன் இருக்கிறான் என்பதை காட்டும்பொருட்டு இரண்டுதடவை இந்தபதம் உபயோகிக்கப்பட்டிருக்கிறது.

முன் பூஷா முதலிய சப்தங்களால் குறிப்பிடப்பட்ட பிராணன் முதலிய அநேக பிரதீகங்களில் விஷ்ணுவினுடைய வாஸம் சொல்லப்பட்டது. அவ்விடத்தில் (அந்த விஷ்ணுவினிடத்தில்) பேதசங்கையை நிவிர்த்திக்கும்பொருட்டு योसौ என்னும் வாக்கியம் பிரவிர்த்தித்தது. பிராணன் முதலிய அநேக பிரதீகங்களிலிருக்கிற புருஷனே अहं = என் அந்தர்யாமியாக अस्मि = अस्ति=இருக்கிறான். சகல பிரதீகங்களிலும் என்னிடத்திலும் இருக்கிறவன் ஒருவனே என்று சித்திக்கிறது. अहं பதத்திற்கு ஜீவனுக்கு அந்தர்யாமியான ஈசுவரன் முக்கிய அர்த்தமானதாலும்,

अहं சப்தத்தின் பிரயோகமிருப்பதினாலும்

अस्मि என்னும் வினைச்சொல்லின் தன்மைப் பிரயோகம் சுத்தமே.

வி:—றவனாயினும், பூதங்களின் ஈசுவரனாயினும், தன்னுடைய பிர கிருதியை (மாயை) ஸ்வீகரித்துக்கொண்டு தன் மாயையாலேயே அவதரிக்கிறேன்.)

(3) नचास्यप्राकृतामूर्तिर्मां समेदोस्थिसंभवा (64-வது பக்கத்தில் அர்த் தத்தைப்பார்க்க). இந்த மூன்று விசேஷ வசனங்களால் பரமாத் மாவுக்குகெடுதலான சரீரமில்லை என்று ஏற்படுகிறது. ஆகையால் சாமானிய வசனங்களில் சரீரமில்லை என்று சொன்னதை கெடுத லான சரீர மில்லை என்பதாய் கிரகிக்கவேண்டியது.

சங்கை :—(1) यत्तेरूपं कल्याणातमं (ई-16) (2) यएषो अन्तरादित्ये हिरण्मयः पुरुषः (छा 1-6-6) (64-வது பக்கம்பார்க்க). (3) ईशावास्य मिदंसर्वं (ई-1) (4) पतिं विश्वस्य आत्मेश्वरं (25-வது பக்கம் பார்க்க) (சம ஸ்தமானவைகளுக்கும் எஜமானனாயும் தனக்குத்தானே எஜமான னாயு மிருக்கிறவன்) (5) सर्वकर्म सर्वगन्धः (छा 3-4-2)(சகலகர்மங்களை யும் கந்தங்களையும் உடையவன்) (6) स्वाभाविकीज्ञान बलक्रियाच (श्वे- 6-8) (ஸ்வாபாவிகமானஞானம் பலம், கிரியை இவைகளை உடைய வன்) (7)तस्य हवा एतस्य ब्रह्मणोनाम सत्यामीत (छा 8-3-4) (அந்தபிரம்மத் துக்குசத்தியமென்றுபெயர்) (8) तस्योदितिनाम (छा 1-6-7) (அந்தபிர மத்துக்கு உத் என்று பெயர்.) இவைமுதலிய வாக்கியங்களால் பிரமத்துக்கு சரீரம் முதலியவைகள் ஏற்படுகின்றன.

निर्गुणं (குணமற்றது) निरञ्जनं (தோஷமற்றது) अविकाराय (விகாரமற்றது) अकायं अत्रणं (சரீரமற்றது, காயமற்றது) नेहनानास्ति किञ्चन (बृ 4-4-19) பிரம்மத்தினிடத்தில் வெவ்வேறான வஸ்துக்கள்

---

து:—15 - 16 - வது மந்திரங்களிற் சொல்லிய அர்த்தங்களுக்குப் பிரமாண வாக்கியங்கள்:—

पात्रंहिरण्मयं सूर्यमंडलंसमुदाहृतम् ॥
विष्णोःसत्यस्यतेनैव सर्वदाऽपिहितंमुखम् ॥
तत्तुपूर्णत्वतः पूषाविष्णुर्दर्शयातिस्वयम् ॥
सत्यधर्मायभक्ताय प्रधानज्ञानरूपतः ॥
विष्णुरेकोऋषिर्ज्ञेयो यमोनियमनाद्धरिः ॥
सूर्यस्सूरिगम्यत्वा त्प्राजापत्यः प्रजापतेः ॥
विशेषेणैवगम्यत्वात् अहंचासावहेयतः ॥
अस्मिन्नित्यास्तितामानात्सर्वं जीवेषुसंस्थितः ॥
स्वयंतुसर्वजीवेभ्योव्यतिरिक्तःपरोहरिः ॥
सक्रतुज्ञानरूपत्वा दग्निरंगप्रणेतृत्वः ॥
(इति ब्रह्मांडे) ॥ 16 ॥

வி:—ஒன்றுமில்லை) निष्कलं (मु 2-2-9 )(அவயவமற்றது) निष्क्रियं(கிரியையற்றது) अगोत्रं (मु 1-1-6) (பேரற்றது) अवर्णं (मु 1-1-6 ) (வர்ணமற்றது.) இவைமுதலிய சாஸ்திரங்கள் குணம் முதலியவை இல்லை என்று சொல்லுகின்றன.

ஆகவே இவ்விரண்டுவித சாஸ்திர வசனங்களுக்கும் விரோதமிருப்பதால் ஒன்று மற்றொன்றால் அவசியம் பாதிக்கப்பட வேண்டும். ஒரு வஸ்து முதலில் ஏற்படக்கூடிய இடத்தில் தான் அது இல்லை என்று பின்பு சொல்ல ஆஸ்பதமுண்டு. ஆகையால் குணங்களைச் சொல்லும் சாஸ்திரங்கள் முந்தினவை, குணங்களில்லை என்று சொல்லும் சாஸ்திரங்கள் பிந்தினவை, பிந்தியவை முந்தியவைகளை பாதிக்கும். இதற்கு ஆதாரம் பூர்வ மீமாம்சையில் अपच्छेदाधिकरण[118]த்தில் ஏற்பட்டிருக்கிறது. ஆகவே பலமுள்ள

118. அவ்விடத்தில் बहिष्पवमानम् என்னும் ஸ்தோத்திரத்தைச் சொல்லுங் காலத்தில் எஜமானன் உள்பட ஐந்துபேர்கள் ஒருவருக்கு ஒருவர் பின்கச்சத்தைப் பிடித்துக்கொண்டு சுற்ற வேண்டுமென்றும், அக்காலத்தில் உத்காதா என்னும் ரித்விக் கச்சத்தை விட்டுவிடும் பக்ஷத்தில் அந்த யாகத்தை தக்ஷிணையில்லாமல் முடித்து மறுபடியும் அந்த யாகத்தைச் செய்து முன் கொடுபடாத தக்ஷிணையை கொடுக்கவேண்டு மென்றும் प्रतिहर्ता என்னும் ரித்விக் விட்டுவிடும் பக்ஷத்தில் சர்வத்தையும் கொடுத்து அந்த யாகத்தை முடிக்கவேண்டும் என்றும் இரண்டு சாஸ்திர விதி ஏற்பட்டிருக்கிறது. வெவ்வேறு யாகங்களில் வெவ்வேறு ரித்விக்குகள் கச்சத்தை விட்டுவிடும் பக்ஷத்தில், அவரவர்கள் விட்டுவிடுவதினால் ஏற்படும் பிராயச்சித்தத்தைச் செய்யவேண்டியது. ஒரே யாகத்தில் ஒருவர் முந்தியும், ஒருவர் பிந்தியும் விடும்பக்ஷத்தில் முந்தினவருக்காக ஏற்பட்ட பிராயச்சித்த சாஸ்திரம் முந்தினதாக ஆகிறபடியால், அது துர்பலம். ஏனெனின் தனக்கு விரோதமான பிந்தின சாஸ்திரத்தைப் பாதிக்காமல் இது உண்டாகிறது. பிந்தின சாஸ்திரம் முந்தின சாஸ்திரத்தை பாதிக்காமல் உண்டாகமாட்டாது. ஆகவே பிந்தினது பலமானது. பலமான பிந்தின சாஸ்திரத்தால் துர்ப்பலமான முந்தின சாஸ்திரம் பாதிக்கப்பட்டுப் போகிறது. இதுபோல், இவ்விடத்திலும், முந்தின குணத்தைச் சொல்லும் சாஸ்திரம் குணமில்லை என்று சொல்லும் தனக்கு விரோதமான பிந்தினசாஸ்திரத்தைப் பாதிக்காமல் உண்டாகிறது. ஆகையால் அது துர்பலம். நிர்க்குண சாஸ்திரமோ தனக்கு விரோதமான முந்தின குணசாஸ்திரத்தைப் பாதிக்காமல் உண்டாகிறதில்லை. ஆகையால் இது பிரபல சாஸ்திரம். ஆகவே பலமுள்ள நிஷேத சாஸ்திரங்களால் விதிசாஸ்திரங்கள் பாதிக்கப்பட்டவைகள். ஆனதால் பிரம்மத்தினிடத்தில் குணம் சரீரம் முதலியவை கற்பிக்கப்பட்டிருக்கின்றன.

வி:—நிஷேத சாஸ்திரங்களால் விதிசாஸ்திரங்கள் பாதிக்கப்பட்டவைகள். ஆனதால் பிரம்மத்தினிடத்தில் குணம், சரீரம் முதலியவைகள் கற்பிக்கப்பட்டிருக்கின்றன. அவைகள் பொய்யே என்று சிலர் சொல்லுகிறார்கள்.

சமாதானம்:—இப்படிச் சொல்லுவதை அங்கீகரிக்கலாகாது. ஏனெனின், पशुछाग 119 நியாயத்தால் ஒரு பிரகரணத்தில்சாமானிய விசேஷவாக்கியங்களிருந்தால் அந்த சாமானிய வாக்கியம் விசேஷ வாக்கியத்தில் சொல்லிய அர்த்தத்தையே சொல்லும். ஆனதால்

வி:—"நிர்குணம்" என்னும் சாமானிய வாக்கியம் "நிரஞ்சனம்" என்னும் விசேஷ வாக்கியத்தில்சொல்லப்படும் கெட்ட குணங்கள் இல்லை என்று சொல்லுகிறது. ஆனதால் குணமில்லை என்னும் நிர்குண சாஸ்திரங்களுக்கு கெட்ட குணங்களில்லை என்று அர்த்தம் ஏற்படுகிறது. குணத்தைச் சொல்லும் சாஸ்திரங்களுக்கு நல்ல குணங்களுண்டென்று அர்த்தம் ஏற்படுகிறது.

(2) उत्सर्ग अपवाद நியாயத்தாலும் ஒரு சாமானிய வாக்கியமும் ஒரு விசேஷ வாக்கியமும் ஏற்பட்டால், சாமானியவாக்கியம் விசேஷ வாக்கியத்தில் சொல்லியதை நீக்கித்தான் மற்றதைச் சொல்லும். இவ்விடத்தில் "நிர்குணம்" என்றும் வாக்கியம் சாமானியவாக்கியம் "சத்தியகாமம்" முதலிய விசேஷ வாக்கியங்களிற் சொல்லி யிருக்கும் நல்ல குணங்களைத் தவிர மற்றகுணங்கள்தான் இல்லை என்று சொல்லும். ஆகவே இரண்டு வாக்கியங்களுக்கும் விஷயம் வெவ்வேறாக இருக்கிறபடியால் ஒன்றுக்கொன்று விரோதமேயில்லை. ஆனதால் குணங்களைச் சொல்லும் விதிவாக்கியங்கள் குணங்களில்லை என்று சொல்லும் நிஷேதவாக்கியங்களால் பாதிக்கப்பட 120 வேண்டியதில்லை.

---

119. अग्नीषोमीयंपशुमालभेत) அக்கினி,யேமன் இவர்களைஉத்தேசித்துப் பசுவைக் கொல்லவேண்டும்) छागस्यवपायामेधसोऽनुब्रूहि (ஆட்டின் வபையின் கொழுப்பைஎடுத்து பின் சொல்லு) என்னு மிடங்களில் முதல் வாக்கியத்தில் பசு என்னும் சப்தம் சாமானியமாய் இரண்டுகால்நான்குகால் உள்ள எல்லா ஜந்துக்களையும் சொல்லக்கூடியதா யிருந்தாலும், அந்தப் பிரகரணத்திலுள்ள இரண்டாவது வாக்கியத்திலிருக்கும் छाग சப்தத்திற்கு அர்த்தமான ஆட்டையே சொல்லுகிறது. இதுபோல் பிரகிருதத்திலும் பொதுவாய் குணமில்லை என்று சொல்லும் निर्गुण பதம் அதனடுத்த निरञ्जन என்னும் பதத்தால் சொல்லப்படும் கெட்ட குணமின்மையைச் சொல்லுகிறது.

120. சரீரம் குணம் முதலிய விஷயமாய் சங்கைசமாதானங்களின் சுருக்

வி:—योसावसौ ... (அ - கை) அந்தர்யாமியை நான் என்று கிரகித்து அனுசந்தானம் செய்கிறன். असौ என்னும் பதத்தை இரண்டுதடவை புருஷனுக்காக உபயோகித்தது ஆதரவின் பொருட்டாம். (2) அல்லது असौ என்னும் பதத்தை வெவ்வேருகப் பிரித்து योसौ என்று यत् சப்தத்தோடும், सासौ என்று तत् சப்தத்தோடும் சேர்த்து அன்வயித்துக் கொள்ளவேண்டியது. எப்படியெனின் यः + असौ + पुरुषः + अहं + सः + असौ + अस्मि என்பதாய்.

சங்கை:—இவ்விடத்திலிருக்கும்புருஷசப்தம்பரமாத்மாவைஎப்படிச் சொல்லும்.ஏனெனின் प्रकृतिंपुरुषञ्चैव विध्यनादीउभावपि (மாயையையும் ஜீவனையும் இவ்விரண்டையும் அனுதியாக அறி) என்று கீதையில் (13-20) சொல்லியிருப்பதால்புருஷசப்தத்திற்கு ஜீவன் என்று அர்த்தமாகிறது. அப்படியே योगोयोगविदान्नेताप्रधानपुरुषेश्वरः என்னும் விஷ்ணு சஹஸ்ர நாமவாக்கியத்திலும் பிரதான புருஷேசுவர: என்னும் பதங்களுக்கு மாயைக்கும் ஜீவனுக்கும் ஈசுவரன் என்று வியக்தமாய் அர்த்தமாகிறது. ஆகையால் மேற்சொன்ன இரண்டிடங்களிலும் புருஷ சப்தம் ஜீவனை குறிப்பிடுவதால், புருஷன் பரமாத்மா என்று எப்படிச் சொல்லலாம்.

சமாதானம்:—तेनेदं पूर्णं पुरुषेणसर्वं (அந்த பரமாத்மாவால் இது எல்லாம்நிறைந்திருக்கிறது. (தை· நாருயணவல்லி).(2) पूर्वमेवाहमिहासं इति तत्पुरुषस्य पुरुषत्वं (நான் முன்னமேயே இருப்பதால் எனக்கு புருஷன் என்று பெயர்) என்று சொல்லப்பட்டிருக்கிறது.

இவ்விரண்டு சுருதிகளில் பூர்ணமாயிருக்கும் தன்மை (அதாவது) நிறைந்திருக்கும் தன்மை முந்திருக்கும் தன்மை இவைகளால் ஈசுவரனே புருஷ சப்தத்தால் சொல்லப்பட்டிருக்கிறன். மேலும் நான்கு வேதங்களிலும் பிரசித்தமான புருஷசூக்தத்திலும் புருஷ சப்தத்தால் ஈசுவரனே சொல்லப்பட்டிருக்கிறன். இக்கா

---

கம்சங்கரமதத்தில் "நிர்குண" சாஸ்திரம் குணமில்லை என்று சொல்லுகிறது. சகுண சாஸ்திரமோ குணமுண்டென்று சொல்லுகிறது. ஆகவே இரண்டும் ஓரே பிர்ம்மத்தில் விருத்தமாய் இருப்பதால் பொருந்தாது. விசிஷ்டாத்வைத மதத்தில் விருத்தமிருந்தால் பொருந்தாமலிருப்பது சரியே. ஆனல் விருத்தமில்லை. எப்படியெனின் நிர்க்குணசாஸ்திரத்திற்குக் கெட்டகுணமில்லாமை அர்த்தம். சகுண சாஸ்திரத்திற்கோ கல்லியாண குணங்கள் உண்டு என்று அர்த்தம். ஆகவே ஒன்றுக்கொன்று விரோதமில்லை. விருத்தமிருந்தால் சங்கரர்சொன்னநியாயம் பொருந்தும். விருத்தமில்லை என்பதை சித்தாந்தி இரண்டு நியாயங்களால் நிரூபித்திருக்கிறர்.

வி:—ரணங்களால் இவ்விடத்திலிருக்கும் புருஷ சப்தமும் ஈசுவரனையே குறிப்பிடவேண்டும்.

சங்கை :—योसौपुरुषः सोसावह मस्मि என்று சாமாநாதிகரணியம் எப்படி பொருந்தும். சாமாநாதி கரணியம் வருமிடத்தில் இரண்டு பதங்களால் குறிப்பிடப்படும் அர்த்தம் பேதமற்றதாக இருக்கவேண்டும். இவ்விடத்திலோ सोसावहमस्मि என்னு மிடத்தில் सोसौ என்னும் பதங்கள் பரமாத்மாவைச் சொல்லுகின்றன. अहं என்பது அவனைவிட வேறான ஜீவனைச் சொல்லுகிறது. ஆகவே சாமாநாதிகரணம் எப்படி பொருந்தும்.

சமாதானம் :—अहं என்னும் பதம் ஜீவனுக்கு அந்தர்யாமியாருக்கிற பரமாத்மாவைச் சொல்லுகிறபடியால் சாமாநாதி கரணியம் சித்திக்கிறது.

சங்கை :—अहं ஜீவனுக்கு அந்தர்யாமியா யிருக்கும் பரமாத்மாவைச் சொல்லும் பக்ஷத்தில் अस्ति என்னும் படர்க்கை வினைச் சொல் வரவேண்டியதாக இருக்க अस्मि என்கிற தன்மை வினைச் சொல் எப்படி வரக்கூடும்.

சமாதானம் :—मदन्तर्यामि (என்னுடைய அந்தர்யாமி) என்று பதமிருந்தால் வியாகரணப்படி अस्ति என்கிற வினைச்சொல்லே உபயோகிக்க வேண்டும். अहं என்னும் பதத்தால் என்னுடைய அந்தர்யாமி என்று சொல்லியிருப்பதால் अस्मि என்னும் வினைச் சொல்லின் உபயோகம் யுக்தமே.

இந்தமாதிரியே तत्त्वमसि என்னும் வாக்கியத்திலும் त्वं என்னும் பதத்திற்கு உன்னுடைய அந்தர்யாமி என்று அர்த்தம் இருந்தாலும் त्वदन्तर्यामि என்னும் பதம் உபயோகப்படாமல் त्व என்னும் பதம் உபயோகித்திருப்பதால் असि என்று வியாகரணப்படி உபயோகித்தது யுக்தமே. அத்வைத மதத்தில் सोहमस्मि, तत्वमसि இவ்விரண்டு வாக்கியங்களிலும் நான், நி என்பதை விட்டு கேவலம் சைதன்னியத்தை அங்கிகாரம் பண்ணப்பட்டிருக்கிறபடியால் असि, अस्मि என்றும் இவ்விரண்டு வினைச்சொற்களும் பொருந்தாவாம்.

त्वं असि என்னுமிடத்தில் கேட்கிறவனுன அர்த்தத்தை முழுமையும் விட்டுவிட்டு சைதன்னியத்தையேசொல்லுகிறபடியாலும் अहमस्मि என்னுமிடத்தில் அநுசந்தானம் பண்ணுகிறவனுன நான் என்னும் அர்த்தத்தை விட்டு விட்டு சைதன்னியமே சொல்லப்படுவதாலும், असि என்னும் பதத்தால் உபதேசிக்கும்படியானது

வி:—யாதொன்றுமில்லை. अस्मि என்னும் பதத்தால் அனுசந்தானம் பண்ணவேண்டியது யாதொன்றுமில்லை. ஆகவே இவ்விரண்டு பதங்களும் ஒவ்வாவாம்.

சங்கை:—அத்வைத மதத்தில் अहं, त्वं இவைகளின் அர்த்தங்கள் ஸ்வீகரிக்கப்படாமலிருந்தாலும், அந்த பதங்களிருப்பதால் अस्म असि என்னும் வினைச்சொற்கள் ஒவ்வாவாம்.

சமாதானம்:—அதைவிட अहं என்னும்பதத்திற்கு என்னுடைய அந்தர்யாமி என்னும் அர்த்தத்தையும், त्वं என்னும் பதத்திற்கு உன்னுடைய அந்தர்யாமி என்னும் அர்த்தத்தையும், அங்கீகரிக்கும் விசிஷ்டாத்வைதமதத்தில் अहं त्वं என்பவைகளின்அர்த்தமான என், உன் என்னும் அர்த்தங்கள் விடுபடாம லிருப்பதால், விசிஷ்டாத்வைத மதத்திற் சொல்லியபடி असि अस्मि என்னும் பதங்களின் உபயோகம் ரொம்ப யுக்தமா யிருக்கிறது.

சங்கை :—வேறு சிலர் சொல்லுவதாவது:—

योसावसौपुरुषः सोहमास्मि என்னும் இடத்தில் புருஷ சப்தத்தால் பரமபுருஷனை ஈசுவரனைச்சொல்லக்கூடாது. ஏனெனின் अस्मि என்னும் வினைச்சொல்லின் பொருந்தலையும் सोहं என்பதின் சாமானாதிகரணியத்தையும் சிரமத்தின்பேரில் நிர்வகிக்க வேண்டியதாக இருக்கிறது. அதைவிட, புருஷ சப்தத்திற்கு பரிசுத்த ஜீவன் என்று அர்த்தம் செய்வது மிகவும் சிலாக்கியமாயிருக்கிறது. எப்படியெனின், यः = எவன் पुरुषः = முக்தி தசையில் வரப்போகிற ஆகாரத்துடகூடின பரிசுத்த ஜீவனோ सः = அவன் अहं अस्मि நானாயிருக்கிறேன். இவ்விடத்தில் முக்திதசையில் பிரகாசிக்கப்போகிற பரிசுத்தாகாரமுள்ள ஜீவனும் இப்போது அனுசந்தானம் செய்கிற ஜீவனும் ஒருவனாக இருக்கிறபடியால் சாமானாதிகரணியமும் अस्मि என்னும் வினைச்சொல்லின் பொருந்தலும் ஒவ்வுகின்றன.

சமாதானம் :—மேற்சொன்னது இவ்விடத்தில் பொருந்திருந்தாலும், तत्त्वमासि என்னுமிடத்தில் तत् என்னும் பதத்திற்கும் त्वंवा अहमस्मि भगवो देवते, अहंवैत्वमसि என்னும் இடத்தில் त्वं பதத்திற்கும் பரதேவதைஎன்னும் பரமாத்மாஎன்கிற அர்த்தமாவதால்,இவ்விடத்தில்நீசொல்லியபடி असि என்னும்வினைச்சொல்லுக்கும்சாமானாதிகாணியத்துக்கும் நிர்வாஹம் செய்யமுடியாததால், உனக்கு இஷ்டமில்லாவிட்டாலும் நான் சொல்லுகிறபடி நீ ஒப்புக்கொள்ளவேண்டி யிருப்பதால், அவ்விடம் போலிருக்கிற இவ்விடத்திலும் நான் சொன்னபடியே நீயும் ஒப்புக்கொள்ள வேண்டும்.

வி:—சங்கை:—இது இருக்கட்டும். त्वंवा अहंअस्मि भगवो देवत–अहंवैत्वंअसि என்னுமிடங்களில் त्वं अहं இவ்விரண்டும் சேர்ந்திருப்பதால் अस्मि असि என்னும் ஒவ்வொரு வினைச்சொல்லின் பொருத்தம் எப்படி.

சமாதானம்:—वन्हिमान् पर्वतः (அக்கினியுடன் கூடின மலை) என்னுமிடத்தில் पर्वत உத்தேசியமான பர்வதத்தையும் वन्हिमत् சப்தம் விதேயமான அக்கினியையும் சொல்லுவதுபோல, त्वं वा अहं अस्मि என்னும் இடத்தில் अहं என்னும் பதம் உத்தேசியத்தையும், त्वं என்னும் பதம் விதேயத்தையும் சொல்லுகின்றன. अहंवै त्व आस என்னுமிடத்தில் अहं என்னும் பதம் விதேயத்தையும் त्वं என்னும் பதம் உத்தேசியத்தையும் சொல்லுகின்றன. உத்தேசியத்தைச் சொல்லும் अहं பதத்தின் சேர்க்கையை அனுசரித்தே தன்மைவினைச்சொல்லும், உத்தேசத்தைச் சொல்லும் त्वं பதத்தின் சேர்க்கையை அனுசரித்தே முன்னிலை வினைச்சொல்லும் (வியாகரண சூத்திரப்படி) வரவேண்டியது. ஆனதால் இவ்விடங்களில் अस्मि आसि இவ்வினை சொற்களின் பிரயோகம் சரியே.

சங்கை:—இந்த சமாதானம் இவ்விடங்களில் பொருந்தினாலும் तत्वमसि என்னுமிடத்தில் எப்படி பொருந்தும்? ஏனெனின் அவ்விடத்தில் त्वंபத சேர்க்கை இருப்பதுபோல் तत् பதத்தின் சேர்க்கை இருப்பதாலும் असि என்னும் வினைச்சொல்லைப்போல் अस्ति என்னும் வினைச்சொல்லு மிருக்கவேண்டியது. இவ்விடத்திலும் त्वं பதம் உத்தேசியவாசகமா யிருக்கும் பக்ஷத்தில் असि என்னும் வினைச்சொல்லே வருமென்று சொல்லலாம். அப்படி இல்லை. ஏனெனின் तत्वमसि என்னும் வாக்கியத்தை ஸ்ரீ பாஷ்யத்தில் (जिज्ञासाधिकरण ) நிரூபிக்குமிடத்தில் சொல்லியிருக்கிறதாவது:—नात्राकिञ्चिदुद्दिश्य किमपि विधीयते इति (இவ்விடத்தில் ஒன்றை உத்தேசித்து ஒன்றை விதிக்கவில்லை.) ஆகையால் तत्वमसि என்னுமிடத்தில் असि என்னும் வினைச் சொல்லைப்போல் अस्ति என்னும் வினைச் சொல்லின் பிரயோகமும் சம்பவிக்கக் கூடும்.

சமாதானம்:—तत्वमसि என்னுமிடத்தில் त्वं என்னும் பதத்தின் அர்த்தம் உத்தேசியம்தான். ஆனதால் உத்தேசியத்தைச் சொல்லும் त्वं பதப்பிரயோகத்தை அனுசரித்து असि என்னும் வினைச்சொல்லே வரவேண்டியது.

பூர்வபக்ஷி:—இப்படி சொல்லும் பக்ஷத்தில் ஸ்ரீபாஷியத்துக்கு விரோதம் வருமே.

17. वायुरनिलममृतमथेदं भस्मान्त ँ शरीरम् ।

ओं[121]क्रतोस्मरकृत ँ स्मरक्रतो स्मरकृत ँ स्मर ॥

वायुः = சரீரத்திலிருக்கிற பிராணன்

अनिलं = ஸர்வாத்மகமான வாயுவான

---

வி:—சித்தாந்தி :—ஸ்ரீ பாஷ்யத்திற்கு விதேயத்தை நிஷேதிக்கிறதில் தாற்பரியமே தவிர உத்தேசியத்தை நிஷேதிப்பதில் தாற்பரிய மன்று. அதாவது பாஷ்யத்திற்கு இவ்விடத்தில் ஒன்றும் உத்தே சிக்கப் படவில்லை, ஒன்றும் விதிக்கப்படவில்லை என்று அபிப்பி ராயமில்லை. ஆனால் உத்தேசிக்கப்பட்ட त्वं பதார்த்தத்தினிடத்தில் ஒன்றும் விதிக்கப்படவில்லை என்று அபிப்பிராயம். ஷை பாஷ்ய த்தின் முந்தின பிரகரணத்தை அனுசரித்து இப்படியே அர்த்தம் செய்யவேண்டியதாக இருக்கிறது.

பூ :—வேறு சிலர் சொல்லுவதாவது :—त्वंराजासिअहंराजास्मि (நீயும் அரசனுக்கு அடங்கினவன், நானும் அரசனுக்கு அடங்கின வன்) என்ற இடங்களில் அரசனைச் சேர்ந்தவன் என்னும் அர்த் தத்தால் சாமானாதிகரணத்தை உபசாரமாக ஒப்புக்கொள்ளுவது போல் सोहमस्मि என்னும் இவ்விடத்திலும் அந்த பரமாத்மாவைச் சேர்ந்தவன் என்னும் அர்த்தத்தால் சாமானாதிகரணத்தை உபசார மாக ஒப்புக்கொள்ளவேண்டியது. இதுபோலவே तत्त्वमसि முத லிய இடங்களிலும் ஒப்புக்கொள்ளவேண்டியது. இந்த பக்ஷத்தில் असि अस्मि என்னும் வினைச் சொற்களின் பிரயோகம் ரொம்ப யுக்த மாயிருக்கிறது. எப்படி யெனின் त्वं अहं என்னும் பதங்களின் முக் கியமான அர்த்தம் விடுபடவில்லை.

சி :—லோகத்திலும் வேதத்திலும் சரீரத்தைச் சொல்லும் தேவ மனுஷியாதி சப்தங்கள் முக்கியமாகவே சேதனத்தையும் விடாமல் சேர்த்து சொல்லுகிறபடியால், ஜாதி குணவாசக சப்தங் கள் தங்களுடன் சேர்ந்த பதார்த்தங்களை முக்கியமாகச் சொல்லு வதுபோல், இவ்விடங்களிலும் ஜீவனைச் சொல்லும் त्वं अहं என் னும் பதங்கள் முக்கியமாகவே அந்த ஜீவனைச் சரீரமாய் அடைந்த பரமாத்மாவை சொல்லுகிறதென்று ஒப்புக்கொண்டு சாமானாதி கரணத்தையும் முக்கியமாக ஒப்புக்கொள்ளுவதே யுக்தம்; அதை உபசாரமாகச் சொல்ல வேண்டியதில்லை. ॥ 16 ॥

---

121. வா-ச-யில் ओंक्रतोस्मर क्लिबेस्मरकृतंस्मर என்பது பாடம்.

अमृतं = நாசமற்ற சூத்திராத்மாவை
(प्रतिपद्यतां = (அடையட்டும்.)
अथ = பிறகு
इदं = இந்த
शरीरं = சரீரம்
भस्मान्तं = சாம்பலே அந்தமாக (முடிவாக) அதாவது சாம்பல் ரூபமாக
(भूयात् )=(ஆகட்டும்)
ओं = பிரம்மத்துக்கு வேறாகாத
(हे) क्रतो = சங்கற்பரூபனே, அக்கினியே
स्मर = ஸ்மரி
कृतं = செய்யப்பட்டதை
स्मर = ஸ்மரி
क्रतो = சங்கற்பரூபனே
स्मर = ஸ்மரி
कृतं = செய்யப்பட்டதை
स्मर = ஸ்மரி

## சங்கரபாஷ்யம்.

वायुः अनिलं :—இப்போது மரணத்தை எதிர்பார்க்கிற என்னுடைய பிராணவாயு இந்த சரீரத்தை விட்டு நாசமற்றதான சூத்திராத்மா வென்று சொல்லப்படுகிற ஸமஸ்தத்துக்கும் ஆத்மா

---

வி:—அ-கை :—மேற்சொல்லிய 16-மந்திரங்களால் பரதத்துவம், அதற்கு வேறான அவர தத்துவம், இவைகளின் விவேகம் (விவேசனம்) மோக்ஷத்துக்குச் சாதனமான சாங்க பக்தியோகம், அதை அடைந்தவனுக்கு அனுசந்தானம் செய்யவேண்டிய இரண்டு மந்திரங்கள், இவைகள் உபதேசிக்கப்பட்டன. இப்போது பக்தியோகத்தில் ஞானம் சக்தி முதலியவைகளினின்மையால் சரணாகதியை

---

அ - கை :—பரமேசுவரனுடைய கலியாணரூபம் யாதொன்று சொல்லப்பட்டதோ, सोहमस्मि என்று ஜீவாந்தர்கதனுடைய நித்தியமான ஸ்திதியாதொன்று சொல்லப்பட்டதோ அவ்விரண்டும் பொருந்தா. ஏனெனின், தேகம் நாசமடைதல் பிரத்தியக்ஷத்தில் தெரிந்திருக்கிறது. ஆகையால் தேகத்திற்குள்ளிருக்கும் ஜீவனுக்கு மரணம் சம்பவிக்கிறதுபோல் பகவானுக்கும் மரணாதிகள் அவசியம் உண்டாகவேண்டியது. இப்படி சங்கித்துச் சமாதானம் சொல்லுகிறார்.

ச:—வான வாயுவை அடையட்டும். (அதாவது என்னுடைய பிராணன் சரீரத்திலிருந்து கிளம்பி சகலபிராணிகளுக்கும் ஆத்மாவான சூத்திராத்மா என்று சொல்லப்படுகிற வாயுவிற் பிரவேசிக்கட்டும்.) மேலும் ஞானகர்மங்களால் செவ்வையாக ஆக்கப்பட்ட இந்த லிங்கசரீரம்[122] ஸ்தூல சரீரத்திலிருந்து வெளிப்படட்டும் என்று (வியக்தமாய் மந்திரத்தில் சொல்லப்படாவிட்டாலும் இவ்விடத்தில்) அறியத்தக்கது. ஏனெனின், (மேல் மந்திரத்தில்) மார்க்கம் யாசிக்கப்பட்டிருக்கிறது. இப்படி யாசிப்பதினால் மேற்சொன்னபடி நினைக்கவேண்டியதாக இருக்கிறது.

---

வி:—ஸ்வீகரிக்கிறவர்களுக்குஅதின் அனுஷ்டானத்தைச்சொல்லும் மந்திரங்கள் உபதேசிக்கப்படுகின்றன. இந்த மந்திரங்கள் இரகசியமானதால் இவைகள் சரணாகதி பரம் என்று ஆசாரியர் வெளிப்படையாக ஆகம கிரந்தத்திற் சொல்லவில்லை. ஆயினும் சமர்த்தர்கள் அவைகளை சரணாகதி பரமாக எப்படி ஊகிக்கலாமோ அப்படி அவைகளுக்கு அர்த்தம் ஆசாரியர் எழுதியிருக்கிறார். ஆசாரியருடைய அபிப்பிராயத்தை அனுசரித்து இந்த மந்திரங்கள் சரணாகதிபரமாக அர்த்தம் செய்யப்படுகின்றன. அவைகளில் वायुरनिलं என்னும் முந்தின சுலோகம் சரணாகதியைச் சொல்லும் துவயத்தின்[123] முதல் கண்டத்திற்குச் சரியான அர்த்தமுள்ளது. अग्नेनय

---

122. மரணத்தை எதிர்பார்க்கும் மனிதன்மேல் மந்திரத்தில் "அக்கினியே நம்மை நல்ல வழியாய் கொண்டுபோ" என்று மார்க்கத்தை யாசிக்கிறான். இந்த மந்திரத்தில் ஸ்தூல சரீரம் சாம்பலாய்விடட்டும் என்று சொல்லுகிறான். ஆகவே அந்த மார்க்கத்தில் போகும் பொருட்டு "லிங்க சரீரம் ஸ்தூல சரீரத்தை விட்டு வெளிப்படட்டும்" என்று வாக்கியத்தைச் சேர்த்துக்கொள்ள வேண்டும்.

123. துவயம் என்பது திருமந்திரத்தின் அதாவது அஷ்டாக்ஷரத்தின் வியாக்கியான ரூபமாய் ஏற்பட்டிருக்கிறது.

இதின் பூர்வகாண்டம் श्रीमन्नारायणचरणौशरणं प्रपद्ये.

இதின் உத்தரகாண்டம் श्रीमतेनारायणायनमः

இதில் அடையத் தகுந்த பிர்ம்மத்தின் சொரூபமும், அடைகிறவனான ஜீவனுடைய ஸ்வரூபமும், அடையும் சாதனமும், அடைந்ததின்பேரில் உண்டாகும் பலமும், அடைவதற்கு (பிராப்திக்கு) விருத்தம் முதலிய அநேக அர்த்தங்கள் அடங்கியிருக்கின்றன. விஸ்தார பயத்தால் இவ்விடத்தில் அவைகள் எழுதப்படவில்லை.

ச:—अमृतं…शरीरं:—அப்படியே அக்கினியில் போடப்பட்ட இந்த ஸ்தூல சரீரம் சாம்பலாக ஆகட்டும்.

---

வி:—என்னும் இரண்டாவது மந்திரம் இரண்டாவது கண்டத்தின் அர்த்தமுள்ளது. அடையத்தகுந்தபிரம்மத்தின்ஸ்வரூபம், அடைகிற வனான ஜீவனுடைய ஸ்வரூபம், அடையும் உபாயம், பிராப்தியின் பலன், பிராப்திக்கு விரோதி இவை முதலிய பூர்வோத்தர கண்டங்களின் சோதித பதார்த்தங்களையும், வாக்கியார்த்த பேதங்களையும் இந்தப் பிரகிரணத்தில் அடங்கியிருப்பதாய் அறியவேண்டியது सर्वोपायविनिर्मुक्तं क्षेत्रज्ञंब्रह्मणिन्यसेत्। एतज्ज्ञानञ्चयोगश्च शेषोऽन्योग्रन्थविस्तरः॥ "சகல உபாயங்களற்ற, பரிசுத்த ஜீவனை பிரம்மத்தினிடத்தில் ஒப்படைக்கவேண்டியது. இதுவே ஞானம் யோகம், மற்றவை கிரந்தவிஸ்தாரம்". இது முதலிய சாஸ்திரங்களால், புரோக்ஷணுதிகளால் சமித்து முதலியவைகளை சம்ஸ்காரம் செய்து அக்கினியில் அர்ப்பணம் செய்வதுபோல் ஆத்மாவென்னும் ஹவியை சுத்தமான ஸ்வரூபத்தின் யதார்த்த ஞானத்தால் சம்ஸ்காரம் செய்தே பிரமத்தினிடத்தில் சமர்ப்பிக்க வேண்டும் என்று சொல்லியிருப்பதால் இவ்விடத்திலும் சரீரம் இந்திரியம் முதலியவைகளுக்கு வேருன தன்னுடைய ஆத்மாவை மேற்சொல்லியபடி முதலில் சோதனைச் செய்து பிரம்மத்தினிடத்தில் அர்ப்பணஞ் செய்து தன்னதிகாரத்துக்குத் தகுந்ததை பிரார்த்திக்கிருன்.

वायु: – (அ-கை.) भोक्ताभोग्यंप्रेरितारञ्च (मु 1-12) (ஜீவன் யோக்கியமான பதார்த்தத்தையும் ஏவுகிறவனை ஈசுவரனையும்) என்னும்முதலிய வேறு சுருதிகளில் பிரசித்தமான சித் (ஜீவன்) அசித் (மாயை) ஈசுவரன் என்னும் தத்துவத்தின் திரயத்தை இவ்விடத்தில் அறிந்துகொள்ளுக,

वायुः = (वागातिगन्धनयोः) வித்தை கர்மம் இவைகளை அனுசரித்து பகவத் சங்கற்பத்தால் அந்தந்த இடங்களிற் போகிற ஜீவன். இதனுல் ஜீவன் ரொம்ப சின்னவன் என்றும் பரமாத்மாவுக்கு அடங்கினவன் என்றும் சித்திக்கிறது.

अनिलं =ஸ்தானமற்றவனுயும், ஒரு இடத்திலும் நிலைத்திராதவனுயு மிருக்கிறவன்.

---

து :—इदं = இந்த

शरीरं = சரீரம்

भस्मान्तं (यद्यपि) = சாம்பலாக முடிவை அடைந்தாலும்

(तथापितदंतर्गतहरेः नमरणादिदोषप्रसक्तिः) = அதற்குள் இருக்கு

வி:—अमृतं = தேக கூட்டங்கள் மரண மடைந்தாலும் தான் மரண மற்றவன் தன்னுடைய ஸ்வரூபத்தாலும் தர்மத்தாலும் நாசமற்றவன் என்று கருத்து.

अविनाशिवाऽरेयमात्मा अनुच्छित्तिधर्मा (இந்த ஆத்மா நாசமற்றவன் न + विद्यते + उच्छित्तिः + यस्य + सः = अनुच्छित्तिः (நாசமற்றது.) நாசமற்ற தர்மத்தை உடையவன் अनुच्छित्तिधर्मा நாசமற்ற ஸ்வரூபத்தை உடையவன் என்றும் நித்தியமானஞானத்தை உடையவன் என்றும் கருத்து. नविज्ञातुर्विज्ञाते विपरिलोपोविद्यते (ஜீவனுடையஞானத்திற்குநாசமில்லே. இவ்விரண்டுபிரஹதாரணியச்சுருதிகளுக்கும் நித்தியமான ஞானமுள்ளவன் என்று கருத்து. இப்படியே யாமுனாசார்யரும் சொல்லுகிறார் :— तदेवं चित्स्वभावस्यपुंसः स्वाभाविकीचितिः । तत्तत्पदार्थसंसर्गात् तत्तद्वित्तित्वं अश्नुते ॥ ஞான ஸ்வரூபரான ஜீவனுக்கு ஞானம எப்போது முள்ளது. ஆகிலும் இது ஒவ்வோரு வஸ்துவின் சேர்க்கையால் அந்தந்த வஸ்துவின் ஞானம் என்று பெயரை அடைகிறது. உதாரணம் :—கடத்துடன் சேர்ந்தால் கடஞானம் என்று பெயர்வருகிறது:

இவ்விடத்திற் சொல்லிய अमृतत्वं ஜீவனுடைய பாபமற்ற தன்மை முதலியவைகளேயும் குறிப்பிடுகிறது. ஜீவனைசொல்லும் பிரஜாபதி வாக்கியத்தில்

य आत्मा अपहतपाप्मा विजरोविमृत्युर्विशोको विजिघत्सोपिपासः सत्यकाम. सत्यसङ्कल्प (छा 8-7-1) பாபமற்ற தன்மை முதலிய 8 குணங்கள் ஜீவனுக்கு சொல்லப்பட்டிருக்கிறதை अनिलं अमृतं என்றும் பலவின் பாலின் உபயோகிக்கப்பட்டிருக்கும் பதங்களை ஆண்பாலாக மாற்றிக் கொள்ளவேண்டியது, வாயு யென்றும் ஆண்பால் பதம் முதலிலிருப்பதால்.

---

து:—ம் பகவானுக்கு மரணமுதலிய தோஷங்களில்லே, ஏனெனின்

अनिलं = (अः = ब्रह्मैवनिलं = निलयं = आश्रयो यस्य सोनिलः) பரமேசுவரனே ஆசிரயித்துக்கொண்டிருக்கிற

वायुः = முக்கியவாயுவானவன்

(यदा) = (எப்போது)

अमृतं = நித்தியமாயிருக்கிறுனே

अथ = அப்போது

(परमेश्वरः अमृत इति किं वक्तव्यं = பரமேசுவரன் நித்தியன் என்று சொல்லுவானேன்) अनिलं अमृतं இவைகளின் பலவின்பால் பிரயோகம் சாந்தசம்.

வி:—" वायुश्च अन्तरिक्षञ्च एतदमृतं" என்னுமிடத்தில் வாயுசப்தம் பூத வாயுவானாலும், இவ்விடத்திலுள்ள வாயுமுதலிய பதங்கள் பூதவாயுவை குறிப்பிடுதவதாகச் சொல்லக்கூடாது.

ஏனெனின் முன் பின் சொல்லிய அர்த்தங்களுடன் இந்த அர்த்தம் பொருந்த வில்லை.

ஒவ்வொரு பதமும் அந்தர்யாமிவரையிலும் சொல்லும் என்னும் காரணத்தால் இவ்விடத்திலுள்ள வாயு சப்தம் வாயுவின் அந்தர்யாமியான பரமாத்மாவை குறிப்பிடுமோ எனின் அதுவும் பொருந்தாது. நசுவரமான தேகத்தை இனி சொல்லப் போகிறபடியால் அதற்கு வேறான ஜீவாத்மாவை வாயு சப்தத்தால் அறிவதே யுக்தமா யிருக்கிறது.

சுவேதா சுவதர உபநிஷத்தில் போக்கிய போக்தா நியந்தாக்களைப் பகுத்துச் சொல்லும் மந்திரங்களில் (I - 10) (क्षरंप्रधानं ··· सोन्यः ) अमृत சப்தத்தால் ஜீவன் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஆகையால் இவ்விடத்திலுள்ள அமிருதபதமும் ஜீவனையே குறிப்பிடுகிறது.

अथेदं ··· (அ-கை.) மேற்சொல்லியபடி ஜீவனுடைய ஸ்வரூபத்திற்கு नजायते म्रियते वाविपश्चित् (ஜீவன் உண்டாகிறதில்லை, மரிக்கிறதுமில்லை. அதாவது ஜீவனுடைய ஸ்வரூபத்திற்கு உத்பத்தியுமில்லை. நாசமுமில்லை.) ( कठ 1-2-18 ) முதலிய சுருதிகளால் ஏற்பட்ட மரணமற்ற தன்மையைச் சொல்லி இப்போதும் சரீரத்திற்கு மரிக்கும் தன்மை அவசியம் உண்டெனச் சொல்லுகிறார்.

अथ = மேற் சொன்னதற்கு வேறான அர்த்தத்தை இனி வரும் வாக்கியம் சொல்லும் என்பதை இந்தபதம் குறிப்பிடுகிறது. அல்லது ஜீவன் வெளிக்கிளம்பின பிறகு என்று அர்த்தம். அல்லது எல்லாம் என்று அர்த்தம்.

भस्मान्तं = இந்த சப்தம் தாஹம் என்றும் சம்ஸ்காரத்தை தஹிக்கப்படும் தன்மை சொல்லுகிறது. புதைத்தல் முதலிய

---

து:—வாயுவின் விர்த்திஞானம் நித்தியமானதால் வாயு மரணமற்றவன் என்று சொல்லப்படுகிறான். अतिरोहिततज्ज्ञानात् वायुरप्यमृतः स्मृतः மறைவை அடையாத ஞானமுடைய வாயு அமிருதன் என்று ஸ்மிருதி சொல்லுகிறது. மேலும் एतेन मातरिश्वाव्याख्यातः என்னும் (2 - 3 - 8) பிரம்ம சூத்திர பாஷ்யத்திலும் இப்படியே அர்த்தம் செய்யப்பட்டிருக்கிறது. இப்போது ஓம் என்னும் பிரணவப் பிரதீகத்தை (விஷ்ணுவை) பிரார்த்திக்கிறான்.

ச:—ओं :—எப்படி உபாசனையோ அப்படி இதை அறியவேண்

வி:—வைகளையும் இந்தபதம்குறிப்பிடுகிறது. அல்லது, कलेवरं विट्कृमिभस्म संज्ञितं (சரீரமானது விஷ்டை, புழு, சாம்பல் என்னும் பெயரை அடைகிறது) என்னுமிடத்தில் பிரசித்தமான புழுவாய் முடியும் தன்மை முதலியவைகளை இந்தபதம் குறிப்பிடுகிறது.

சரீரம் தஹிக்கப்படும்போது சாம்பல் என்றும், புதைக்கப்படும்போது कृमि என்றும், எறிந்துவிடப் படும்போது விட் என்றும் பெயரை அடைகிறது.

**சங்கை:**— சில சரீரங்களில் நாசம் பிரத்தியக்ஷமாகவே காணப்படுகிறபடியால், மற்ற சரீரங்களிலும் நாசமுண்டாகும் என்று அனுமானத்தால் நிச்சயிக்கலாம். இந்த நிச்சயமில்லாவிடின் சத்துருக்கள் விஷயத்தில் ஆயுதப் பிரயோகம் நிஷ்பிரயோஜனமாகும். சத்துருவால் பிரயோகிக்கப்பட்ட ஆயுதத்தை ஒருவனும் தடுக்கமாட்டான். சாஸ்திரமன்றியில் ஏற்கனவே அறியப்பட்ட சாம்பலாகப் போகும் தன்மை முதலியவைகளை இவ்விடத்தில் உபதேசிப்பதில் என்னப் பிரயோசனம்?

**சமாதானம்:** இப்படிச் சொல்லுவதற்கு ஐந்து பிரயோசனங்களுண்டு:—

(1) ஆத்மாவுக்கும் சரீரத்திற்கும் மரணமற்ற தன்மை, மரணமடையுந் தன்மை என்னும் விருத்தமான தர்மங்களைக் காட்டுவதால் அவைகள் வேறு என்று சொல்லுவது ஒரு பிரயோசனம்.

(2) வைத்திய சாஸ்திரப்படி அபத்தியத்தைநீக்கி ரசாயனத்தைச் சாப்பிட்டால் ஒருகால் சரீரம் நித்தியமாயிருக்குமோ என்னும் சந்தேக நிவிர்த்தி.

(3) தன்னுடைய தேகத்திலும் வைராக்கியத்தை உண்டாக்குதல்.

(4) பகவது பாசனுதிகளால் அத்தியந்த விநாசம் அதாவது இனி சரீரம் உண்டாக மாட்டாதென்றுஞ் சூசனை.

(5) சீக்கிரமாய் மோக்ஷ உபாயத்தில் பிரவிர்த்திக்கும்படிச் செய்தல்.

இன்னும் அநேகப் பிரயோசனங்களை ஸ்ரீதாபாஷ்ய தாற்பரிய சந்திரிகையில் இரண்டாவது அத்தியாயத்தில் பார்த்துக் கொள்ளுக.

ओं ... (அ - கை.) भोक्ताभोग्य प्रेरितारंचमत्वा (श्वे 1-12) என்னும்

து:—हे ओं = சர்வத்திலும் (ओतत्व பிரவேசிப்பதால், ஓம் என்று குறிப்பிடப்பட்டவரே

ச:—டியது. ஓங்காரம்[124] பிரம்மத்துக்குப் பிரதீகமா யிருப்பதால், இந்த சப்தத்தால் சத்திய ஸ்வரூபமானதாயும் அக்கினி என்றுபெய ருள்ளதுமான பிரம்மமே பிரதிபாதிக்கப்படுகிறது.

வி:—சுருதியில் ஏற்பட்ட கிரமப்படி சித் அசித் இவைகளின் விவே சனையைச் சொல்லி பிரேரிதாவான பிரகிருதத்திற்சொல்லியம்ஹா புருஷனை பிரணவத்தால் குறிப்பிடுகிறார்.

ஆ—: (1) பிரச்ன உபநிஷத்தில் यः पुनरेतं त्रिमात्रेणौ मि त्यनेनैवाक्षरेण परमपुरुषमभिध्यायीत (மூன்று மாத்திரைகளுடன் கூடிய ஓம் என்னும் அக்ஷரத்தால் பரமபுருஷனை எவன் தியானம் செய்கிறானோ) என்றுசொல்லியிருக்கிறது. (प्र V - 5)

(2) இப்படியே யோக சூத்திரத்திலும் சொல்லப்பட்டிருக் கிறது:—

(*a*) क्लेशकर्मविपाकाशयैरपरावृष्टः पुरुषविशेषईश्वरः ।
सपूर्वेषामपिगुरुः कालेनानवच्छेदात् ॥ (*b*) तस्यवाचकःप्रणवः.

(a) அவித்தை முதலிய கிலேசங்கள், கர்மம், சம்ஸ்காரம் இவைகளால் சம்பந்தப்படாதபுருஷ விசேஷனே ஈசுவரன், அவன் முன்னிருந்தவர்களுக்குக்கூட குரு. ஏனெனின் ஒருகாலத்திலிருக் கிறான், ஒருகாலத்திலில்லை என்கிற நியமமில்லை, ஆகையால் எப் போது மிருக்கிறான். (b) அவனை குறிப்பிடும் பதம் பிரணவம்.

மேற்கண்ட சூத்திரத்தில் ஓம் என்னும் அக்ஷரம் ஈசுவர னையே கூறுகிறது.

(3) சர்வஞ்ஞரான வியாசரும் ओमित्येव सदाविप्राः पठध्वं ध्यातकेशवम् (ஓ பிராமணர்களே ஓம் என்றே எப்போதும் உச்சரியுங்கள்; கேசவனை தியானம் செய்யுங்கள் என்று हरिवंश த்தில் சொல்லியிரு க்கிறார். (4) பகவத்கீதையில்

ओमित्येकाक्षरंब्रह्मव्याहरन्मामनुस्मरन् (ஓம் என்னும் ஒரு அக்ஷர மாயுள்ள வேதத்தை உச்சரித்துக்கொண்டு என்னை ஸ்மரித்துக் கொண்டு) என்று 8-வது அத்தியாயம் 13-வது சுலோகத்தில் ஓம் என்பது பரமாத்மாவை குறிப்பிடுவதாய்சொல்லப்பட்டிருக்கிறது. இப்படியே அநேக இடங்களிலும் சொல்லப்பட்டிருக்கிறது.

இதுவரையில் ஓம் என்பது ஈசுவரபரமாய் சொல்லப்பட்டது இனி ஓம் என்னும் பிரணவத்தால் சரீரத்தினின்றும் பிரிக்கப்பட்ட ஆத்மாவை அகாரத்தால் குறிப்பிடப்படும்ஈசுவரனிடத்தில் சமர்ப் பணம் செய்கிறார். இதற்கு அடியிற்கண்டவை பிரமாண வாக்கியங் கள்:—

124. சாந்தோக்கிய உபநிஷத்தின் ஆரம்பத்தில் ओं इत्येतद क्षरमुद्गीथमुपासीत என்கிற மந்திரத்தின் பாஷ்யத்தில் ஸ்ரீ சங்கராசாரியார் ஓம் என் பதனால் பிரம்மம் என்றும் பிரதீகம் என்பதினால் அடையும் சாதன மென் றும் அர்த்தம் செய்திருக்கிறார்.

ச:—ओं क्रतोस्मर:—பிரம்மத்துக்குவேறுகாத அக்கினியே, சங்கற்ப ரூபனே ஸ்மரி. என்னுல் ஸ்மரிக்கும்படியானது யாதேனும் இருந்தால் அதை ஸ்மரிக்கக் காலம் வந்திருக்கிறது. ஆகையால் அதை ஸ்மரி.

---

வி:—(1) ओमित्यात्मानं युञ्जीत (ஓம் என்று தன்னுடைய ஆத்மாவை பரமாத்மாவினிடம் சேர்க்கவேண்டும்.)

(2) प्रणवोधनुः शरोह्यात्मा ब्रह्मतल्लक्ष्यमुच्यते । अप्रमत्तेनवेद्धव्यं शरवत्तन्मयोभवेत् (ஓம் என்னும் அக்ஷரம் வில்லு; ஆத்மா - பாணம்; அதற்கு லக்ஷியம் - பிரமம். அம்பை எய்வதுபோல் ஆத்மாவை பிரம்மத்தினிடத்தில் சாக்கிறதையாக சேர்க்க வேண்டும்; அதனுல் ஈசுவரன்போலாகிருன் (மு 2-2-4)

இவைமுதலிய இடங்களில் ஓங்காரத்தால் ஆத்மாவை அர்ப்பணம் செய்தல் பிரசித்தமாயிருக்கிறது.

क्रतो – (அ-கை) இனி கிரதுரூபியாயும் ஞானயஞ்ஞத்திற்கு விஷயமாயு மிருக்கிற பகவானை அபிமுகமாகச் செய்துகொண்டு அனுக்கிரகத்தை யாசிக்கிருன்.

क्रतो = (1) ஜ்யோதிஷ்டோம முதலிய கிரியாரூபனுயிருக்கிறவனே இதற்கு ஆதாரம் अहंक्रतु: अहंयज्ञ: (நானே ஜ்யோதிஷ்டோமாதி யஞ்ஞங்களாகவும் பஞ்சமஹா யஞ்ஞங்களாகவு மிருக்கிறேன்) (गी 9 - 16)

(அல்லது) (2) பக்தி ஸ்வரூபனே.

यथाक्रतुरस्मिल्लोकेषुपुरुषोभवति तथेतः प्रेत्यभवति सक्रतुं कुर्वीत (छा 3-14-1) (இந்த உலகத்தில் எவ்வித ஸ்வரூபத்தை உபாசிக்கிருனோ அவ்வித ஸ்வரூபத்தை அடைகிருன்; அவன் क्रतुं = பக்தி என்னும் உபாசனததைச் செய்யவேண்டும். நானே क्रतु: = பக்தி என்னும் உபாசனையா யிருக்கிறேன்) இது முதலிய இடங்களில் क्रतु சப்தம் பக்தி யோகத்திலும் பிரயோகிக்கப்பட்டிருக்கிறது. பக்தியோகத்திற்கு விஷயனுன பகவானிடத்தில் பக்தி யோகத்தைச் சொல்லும் क्रतु சப்தம் உபசாரமாக உபயோகிக்கப்பட்டிருக்கிறதென்று ஆசாரியர் சொல்லுகிருர். பக்தியோகஸ்தானத்தில் பக்திக்கு பதிலாக இரக்ஷகனையே வைக்கவேண்டும் என்பது क्रतो என்னும் சம்போதத்தால் குறிப்பிடப்படுகிறது; அதாவது, சர்வ இரக்ஷகரான நீர்

---

து:—हेक्रतो = ஞானஸ்வரூப ஹரியே

(मां) = (என்னை, உன் விஷயத்தில்)

स्मर = கிருபை செய்யும்

ச :—कृतंस्मर: —இதுவரையில் செய்ததை ஸ்மரி. அக்கினியே நான் பால்யம் முதல் இது வரையில் செய்ததையும் ஸ்மரி.

क्रतोस्मरकृतंस्मर: —இரண்டாந்தரம் சொன்னதானது ஆதரத்தின் பொருட்டேயாம். (ஸ்மரிக்கவேண்டிய காரணம் முகவுரையில் 9 - வது பக்கத்தில் கொடுக்கப்பட்டிருக்கிறது.) ॥ 17 ॥

வி:—என்னை சம்சாரத்தினின்றும் இரக்ஷிக்கவேண்டும்பிரார்த்தனை क्रतो என்னும் சம்போதத்தால் கூறப்படுகிறது.

स्मर = அனுக்கிரஹ புத்தியுடன் என்னை கவனியும். स्नेहपूर्णेन मनसा किं नस्मरसिकेशव (கேசவனே சினேகத்தால் நிறைந்த மனதினால் என்னை ஏன் ஸ்மரிக்கவில்லை) என்பதுபோல. स्थितेमनसि என்று ஆரம்பித்து

ततस्तंम्रियमाणन्तु काष्टपाषाणसन्निभं ।
अहंस्मरामिमद्भक्तं नयामिपरमांगतिं ॥

கட்டை பாஷாணங்கள்போல் நாசமடையும் என்பக்தனை நான் ஸ்மரிக்கிறேன், மேன்மையான கதியையும் அடையும்படிச் செய்கிறேன்) என்கிற வராஹசரம சுலோகத்தில்

स्मरामि नयामि என்னும் வினைச்சொற்கள் क्रतोस्मर என்னும் இந்த மந்திரத்திற் சொல்லிய பிரார்த்தனைக்கும் अग्नेनय என்று மேல் மந்திரத்திற் சொல்லிய பிரார்த்தனைக்கும் பிரதி உத்தரமாக தோன்றுவதால் வராஹ புராணத்தில் சொல்லப்படும் இரண்டு சரம 125 சுலோகங்களும்वायुरनिलं, अग्नेनय என்னும் இரண்டுமந்திரங்களின் அர்த்தத்தைச் சொல்லுகின்றனவென்று கருத்து.

कृतं = என்னால் செய்யப்பட்ட உபாயமானவைகளை

स्मर = ஸ்மரியும். அல்லது என்னுற் செய்யப்பட்டவைகளை நினைத்து கிருதஞ்ஞரான நீர் என்னை இரக்ஷியும். இவ்வளவு காலம் உம்மால் செய்யப்பட்ட சகாயத்தை நினைத்து நீரே மிச்சமான சகாயத்தைச் செய்யவேணும் என்றும் ஒரு கருத்து. இதற்குப் பிரமாணம் जायमानं हि पुरुषं यंपश्येन्मधुसूदनः सात्विकः सतुविज्ञेयः सवै मोक्षार्थचिन्तकः (ஜனனகாலத்தில் பகவத் கடாக்ஷத்தைப் பெற்றவன் சாத்

து —:कृतं = என்னால் செய்யப்பட்ட தியானம் முதலிய கர்மங்களை

स्मर = ஸ்மரியும் நான் செய்த தியானுதி கர்மங்களால் எனக்கு கிருபை செய்கிற விஷயத்தில் பிரசன்னராகும்.

125. துவயத்தின் அர்த்தத்தைவிரிவாய்ச்சொல்லும்சுலோகம்கீதையின்

सर्वधर्मान्परित्यज्य मामेकं शरणंव्रज ।
अहंत्वासर्वपापेभ्यो मोक्षयिष्यामिमाशुच ॥ 18-66 ॥

என்னும் சுலோகம் சரம சுலோகம் எனப்படும்.

18. अग्नेनयसुपथारायेअस्मान् बिश्वानिदेव वयुनानिविद्वान् ।

युयोध्यस्मज्जुहुराणमेनो भूयिष्ठांतेनमउक्तिंविधेम ॥

इत्युपनिषद् ॥ इति वाजसनेयसंहितोपनिषत्संपूर्णा ॥

॥ ओँ पूर्णमदः......अवशिष्यते ॥

॥ ओँ शान्तिः शान्तिः शान्तिः ॥

अग्ने = அக்கினியே

अस्मान् = எங்களை

राये = தனத்தின்பொருட்டு அதாவது கர்மபலபோகத்தின் பொருட்டு

सुपथा = நல்லவழியால்

नय = கொண்டுபோம்

(हे देव = பிரகாச ஸ்வரூபமான ஓ ஸ்வாமி)

---

வி:—விகன் என்றுசொல்லப்படுகிறான். அவனேமோக்ஷார்த்தத்தை நினைப்பான்) ( भारतमोक्षपर्व) स्मर स्मर என்று இரண்டுதடவை சொன்னது ஆதரவின்பொருட்டாம். ॥ 17 ॥

---

து :—क्रतोस्मरकृतंस्मरय— (முன்போலவே அர்த்தம் செய்துகொள்ளுக) நித்திய ஞானஸ்வரூபனுக்கு ஸ்மரணம் என்னும் ஜன்னியஞானம் பொருந்தாதபடியால், ஸ்மர என்பதற்கு அனுக்கிரகம் செய்யும் என்றே அர்த்தம் செய்யவேண்டும்.

என் வாயு சரீரம்விட்டு ஹிரணிய கர்பனுடன் சேரட்டும், சரீரம் சாம்பலாய்விடட்டும் என்று அத்வைதிகள் சொல்லுகிறார்கள், இந்தச் சரீரம் அவசியம் சாம்பலாய்ப்போகிற விஷயத்திற் பிரார்த்தனையின் பிரயோசனமில்லை. மேலும் பிரார்த்தனைப் பிரகரணமானபடியால் பிரார்த்தனை கூடும் என்று சொல்லும்பக்ஷத்தில் அதுகூடாது. ஏனெனில் பிரகரணத்தைவிட பிரபலமான மேற்சொன்ன யுக்தி விரோதமிருக்கிறது.

17 - வது மந்திரத்திற் சொல்லிய அர்த்தத்திற்குப் பிரமாண வசனம்:—

अतिरोहिताविज्ञाना द्वायुरप्यमृतःस्मृतः ॥
मुख्यामृतःस्वयंरामः परमात्मासनातनः ॥
(इति रामसंहि)

भक्तानांस्मरणाविष्णो र्नित्यज्ञप्तिस्वरूपतः ॥
अनुग्रहोन्मुखत्वंतु नैवान्यत्कचिदिष्यते ॥
(इति ब्रह्मतर्के) ॥ 17 ॥

विश्वानि = ஸமஸ்தமான
वयुनानि = கர்மங்களை, அல்லது பிரஞ்ஞைகளை
विद्वान् = அறிந்திருக்கிற (நீர்)
अस्मत् = எங்களிடத்திலிருந்து
जुहुराणं = குடிலமான
एनः = பாபத்தை
युयोधि = விலக்கும், நாசம்செய்யும்
ते = உமக்கு
भूयिष्ठां = வெகுவாய்
नमउक्तिं = நமஸ்கார வசனத்தை
विधेम = ஸமர்ப்பிக்கிறோம். இப்படி வாஜஸனேய ஸம்ஹிதோபநிஷத்து முடிந்தது. முதலில் சொலலிய சாந்தியே முடிவிலும் சொல்லப்படுகிறது.

(அ-கை):—மறுபடியும் இந்த மந்திரத்தால் ரிஷி மார்க்கத்தை யாசிக்கிறார்.

अग्ने ... अस्मान् :—ஓ அக்கினியே கர்மபலத்தை அனுபவிக்கும்பொருட்டு நம்மை நல்லவழியில்விடும்.

---

வி:—அ - கை:—இந்த மந்திரத்தால், இஷ்ட பிராப்தியின்பொருட்டும் அநிஷ்ட நிவிர்த்தியின் பொருட்டும், அக்கினி சப்தத்தால் குறிப்பிடப்பட்ட பரமாத்மாவை பிரார்த்திக்கிறான்.

अग्नेनय बृ 7 - வது அத்தியாயத்தில் यदावैपरुषोस्माल्लोकात्प्रैतिसवायुं (எப்போது புருஷன் இந்த லோகத்தை விட்டு வாயுவை அடைகிறானோ (10-1) முதலிய வாக்கியங்களால் 126 அர்ச்சிராதி மார்க்கத்தை உபதேசித்து பிறகு அத்தியாயமுடிவில் हिरण्मयेन முதலிய நான்கு மந்திரங்கள் வரிசையாக படிக்கப்பட்டிருக்கின்றன.

---

து:—அ - கை:—சிரவணமனன நிதித்தியாசங்களைச் செய்த புருஷன் பகவானுடைய சாக்ஷாத்காரம் கிடைக்கும்பொருட்டு பகவத்பிரார்த்தனை செய்யவேண்டும் என்னும் காரணத்தால் பகவானை பிரார்த்திக்கும் விதம் हिरण्मयेन முதலிய மந்திரங்களிற் சொல்லப்பட்டது. இப்போது பகவத் சாக்ஷாத்காரமடைந்த புருஷனும் மோக்ஷமடையும்பொருட்டு பகவானை உபாசிக்கவேண்டியது அவசியம் என்கிற அபிப்பிராயத்தினால் அக்கினி ரூபமான பிரதீகத்திலிருக்கும் பகவானை பிரார்த்திக்கும் விதத்தைச் சொல்லுகிறார்.

(हे) अग्ने = (अंगं = சரீரத்தை அல்லது ஜகத்தை सुपथा =

---

126. தேவயான மார்க்கம் கீதை VIII-24. பார்க்க

ச:—सुपथा :—"நல்ல மார்க்கத்தில்" என்கிற விசேஷணத்தைக் கொடுத்ததின் உத்தேசம் யாதெனின் தக்ஷிணமார்க்கத்தை விலக்கிவிடவேண்டும் என்பதேயாம். தக்ஷிணமார்க்கத்தில் போகிறவன் மேல் போகவேண்டியதாயும் கீழ்வரவேண்டியதாயும் இருக்கிறது. (அதாவது அடிக்கடி ஸம்ஸாரத்தில் பிரவேசிக்கவேண்டியதாக இருக்கிறது). இது நமக்கு இஷ்டமில்லை. ஆதலால் உம்மை யாசிக்கிறதாவது:—எந்த மார்க்கத்தில்போனால் அடிக்கடி வருதல்போகுதல் சம்பவிக்கமாட்டாவோ அப்படிப்பட்ட நல்லமார்க்கத்தில்

राये :—தனத்தின்பொருட்டு அதாவது கர்மபலத்தை அனுபவிக்கும்பொருட்டு

अस्मान् :—முந்தின மந்திரத்திற்சொல்லியபடி தர்மபலத்துடன் கூடின புருஷர்களான எங்களை.

नय :—கொண்டுபோம்.

---

வி:—अग्ने = அக்கினியை சரீரமாயுடையவனே அந்தர்யாமி பிராமணத்தில் यस्याग्निःशरीरं என்று ஈசுவரனுக்கு அக்கினி சரீரமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

(2) साक्षादप्यविरोधं जैमिनिः என்றும் (ब्र-I-2-29) சூத்திரப் பிரகாரம் சரீர சரீரி பாவமன்றியில் अग्रंनयाति इति अग्निः = முன் போகும்படிச் செய்கிறவன் என்னும் வ்யுத்பத்தியினால் அக்கினி சப்தம் பிரம்மத்தை வேறாய் குறிப்பிடுகிறது.

अग्ने =முன்போகும்படி செய்யும் தன்மை யுள்ளவனே

नय = பிரவிர்த்திக்கும்படி செய்

सुपथा = நல்ல மார்க்கத்தால்; நிஷேதிக்கப்படாமலிருக்கிற யாகம் பண்ணிவைத்தல், அத்தியயனம் செய்துவைத்தல் முதலிய உபாயத்தால் என்று கருத்து.

---

து:—பிரேரணை செய்கிறான்) ஜகத்தைப் பிரேரணை செய்கிறதினால் அக்கினி என்னும் முக்கியமான பெயரை அடைந்து அக்கினி என்னும் தேவதைக்குள்ளிருக்கிறவனே

सुपथा = எந்த மார்க்கத்தில் போனால் ஜன்மமரணரூப சம்சாரத்தில் அடிக்கடி வருதல் தடைபடுகிறதோ அப்படிப்பட்ட அர்ச்சிராதி மார்க்கத்தால்.

राये = மோக்ஷமென்கிற தனத்தை நாம் அடையும்பொருட்டு

अस्मान् = எங்களை

नय = கொண்டுபோம்

(हे)देव = ஓ சுவாமியே

வி:—राये = தனத்தின்பொருட்டு; அதாவது பிரம்மோபாசனத்திற்காக சரீர சம்ரக்ஷணம், உம்முடைய பூஜை இவைகளுக்குவேண்டிய தனத்தின் பொருட்டு அல்லது :—

अतस्करग्राह्यमिदं अराजकवशमिदं ।
अदायादविभागार्हं धनमादायस्वास्थिरं ॥

(திருட்டுப் போகாததும், அரசனால் அபகரிக்கப்படாததும், தாயாதிகளுக்குள் பிரிவினைக்குட்படாததும், நிலையுள்ளதுமான தனத்தை) என்றும் சுலோகத்திலும், अनन्तंवतमेवित्तं என்னும் முதலிய சுலோகங்களிலும் சொல்லியிருக்கும் அலௌகிகமான தனம் இவ்விடத்தில் रै சப்தம் குறிப்பிடுகிறது. வித்தியா பிரகரணத்தை அனுசரித்து ஒரு மந்திரமே பிரகரணம் முதலியவைகளுடன் சேர்ந்து அதற்குத்தகுந்த அர்த்தத்தைக் குறிப்பிடும் என்றுநியாய மறிந்தவர்கள் சொல்லுவதாய் ஆசாரியார் சொல்லுகிறார்.

அல்லது, नय = அடையும்படிச் செய். सुपथा = அர்ச்சிராதி மார்க்கத்தால் பிருகதாரணியத்தில் இந்த மந்திரம் படிக்கப்பட்டிருப்பதால், அவ்விடத்திற் சொல்லியிருக்கும் அர்ச்சிருதிமார்க்கம் ஞாபகத்தில் வருகிறது. अर्चिरहीरसतपक्षानूदगयनाब्दम रुदर्केन्दून् अपिवैद्युत वरुणेन्द्रप्रजापतीन् आतिवाहिकानाहु:—இந்த சுலோகத்திற் சொல்லிய மார்க்கமே பிரகிருத पथा என்னும் சப்தத்தால் அறியத்தக்கது. இந்த पथा என்னும் சப்தத்திற்கு அர்சிருதி மார்க்கம் என்னும் அர்த்தம் ஆசாரியருக்குச் சம்மதம். ஏனெனின், राये என்னும் பதத்திற்கு அர்த்தம் செய்யுமிடத்தில் பிரம்மத்தை அடையவேண்டிய வஸ்துவாக சொல்லியிருக்கிறது. பிரம்மம் ஒன்றுதான் எப்போதும் நிலையுள்ளதாயும், நாசமற்றதாயும் லோகத்தில் கிடைக்காததனமாயுமிருக்கிறது. ஆனதால் ஆங்காங்கு அது கீழ்சொல்லியபடி சொல்லப்பட்டிருக்கிறது. (1) धनं मदीयं तवपादपङ्कजं (உம்முடைய தாமரை புஷ்பத்திற்குச் சமானமானபாதங்களே என்னுடையதனம்)(2)योनित्यमच्युतपदाम्बुजयुग्मरुक्मव्यामोहत :(எவன் தினந்தோறும் நாசமற்ற பரமாத்மாவின் இரண்டு பாதாரவிந்தங்களாகிற ஸ்வர்ணத்தின் மோஹத்தால்)

(3) दुरीश्वरद्वारबहिर्वितर्दिका दुराशिकायैरचितोयमञ्जलि: ।
यदञ्जनाभांनिरपायमस्तिमे धनञ्जयस्यन्दनभूषणंधनं ॥

மைமலைக்குச் சமானமாயும் நாசமற்றதாயும் அர்ச்சுனனுடைய இரதத்திற்கு அலங்காரமாயுமிருக்கிற தனம் எனக்கு இருப்பதால் கெட்ட அரசர்களின் வாசலைக் காற்பதற்கு நமஸ்காரம்; அதாவது காற்பதில்லை என்பது கருத்து.

ச:—विश्वानि ... विद्वान् :—நீர் ஸமஸ்த கர்மங்களையும் உபாசனைகளையும் அறிந்தவர்.

---

வி:—(4) नमेपित्रार्जितंद्रव्य नमयाकिञ्चिदार्जितम् ।
अस्तिमेहस्तिशैलाग्रे वस्तुपैतामहंधनं ॥

(தகப்பனுர் சம்பாதித்த தனம் எனக்கு இல்லை. நானும் ஒன்றும் சம்பாதிக்கவில்லை. என் பாட்டனுரால் சம்பாதிக்கப்பட்ட தனம் (பகவான்) கஞ்சிமலையின் உச்சியிலிருக்கிறது.

இந்த மந்திரத்திற்கு ஸ்ரீ சங்கராசாரியார் செய்த அர்த்தத்தை தனக்கு அனுகூலமாக இருப்பதாக சொல்லுகிறுர்.

सुपथा = நல்ல மார்க்கத்தால், இந்த பதத்திலுள்ள सु என்பது தக்ஷிணாயனமார்க்கத்தை நிவிர்த்திக்கிறது. போக்குவருத்துள்ள தக்ஷிணாயனமார்க்கத்திற் சென்று சிரமத்தை அடைந்திருக்கிறேன். ஆனதால் அடிக்கடி போக்குவருத்து இல்லாமலிருக்கும்நல்லமார்க்கத்தில் நான் போகும்படி செய்யபிரார்த்திக்கிறேன்.

राये = ஸ்வர்ணநிதிக்கு ஒப்பான புருஷனைப்பொருட்டு, உம்மை அடையவேண்டியது என்று கருத்து.

अस्मान् = வேறு பிரயோஜனமற்றவர்களாயும், வேறுகதியற்றவர்களாயு மிருக்கிற எங்களை, என்னைமட்டுமல்ல, என்னைச்சேர்ந்தவர்களையுங்கூட என்று பன்மையின் கருத்து.

देव = எங்களாற் அபேக்ஷிப்பதைக் கொடுப்பதற்கு யோக்கியமான ஜகத் சிருஷ்டி ஸ்திதி சம்ஹாரங்கள், உள் பிரவேசம், ஏவுதல், தன்னை ஆசிரயித்தவர்களை பந்தத்தினின்றும் நீக்குதல் முதலிய விலக்ஷண விளையாட்டை யுடையவனே.

यो ब्रह्माणं ... तं हदेवमात्मप्रकाशं (श्वे 6-18) என்னும் மந்திரத்திலுள்ள देव பதத்திற்கும் இதுவே அர்த்தம்.

वयुनानि = வயுனசப்தம் ஞானத்தைச் சொல்லுகிறது. மாயா, வயுனம், ஞானம் என்று நிகண்டுவில் சொல்லியிருக்கிறது. இந்த இடத்திலுள்ள வயுன சப்தம் அறியத்தகுந்த உபாயத்தை லக்ஷணையாக சொல்லுகிறது.

विश्वानि वयुनानि = அவர்களுடைய அதிகாரத்துக்குரிய தர்மார்த்தகாமமோக்ஷம் என்னும் நான்குவித புருஷார்த்தங்களின் உபாயங்களை

---

து:—विश्वानि = மோக்ஷமடையும்பொருட்டு தாம் சம்பூர்ணமாய் சம்பாதித்திருக்கும் அதாவது மோக்ஷமடைய தேவையுள்ள

वयुनानि = ஞானங்களை. சிலர் கர்மங்களை என்று அர்த்தம்

ச:—युयोधि ... एनः :—மேலும் நீர் எங்களிடமிருந்து எங்களுடைய குடில வசனங்களாகிற பாபங்களை விலக்கிவிடும். நாசம் செய்து விடும். பிறகு நாம் சுத்தர்களாகி இஷ்டமானதை அடைவோம் என்பது கருத்து.

---

வி:—विद्वान् = செவ்வையாய் அறிந்த நீர் அறியாத எங்களை மேற் சொன்ன உபாயங்களிற் செல்லும்படிச் செய்யவேண்டும் என்று கருத்து.

योवैवेदांश्चप्राहिणोति तस्मै (ஸ்வே VI-18) (எவர் பிரம்மாவுக்கு சகல வேதங்களையும் உபதேசிக்கிறாரோ) என்னும் மந்திரத்திலுள்ள பதங்களுக்கு மேற்சொன்னதுதான் கருத்து.

मुमुक्षुर्वैशरणमहंप्रपद्ये (ஸ்வே VI-18) (மேற்சொன்ன பரமாத்மாவை மோக்ஷ இச்சையுள்ள நான் சரணமடைகிறேன்) என்னும் மந்திரத்திலுள்ள முமுக்ஷு-பதத்தின் அர்த்தத்தை இவ்விடத்தில் விவரிக்கிறார்.

युयोध्यस्मज्जुहुराणमेन :—என்பதினால்

जुहुराणं = குடிலம் பந்தனமாக இருக்கிறதென்று கருத்து. அல்லது சிந்திக்கக்கூடாத குடிலபாவத்தால் பிறனை பாதிக்கிற தென்று கருத்து. இந்த விசேஷணத்தால் மிகவும் தீவிரமான சோகம் குறிப்பிடப்படுகிறது.

एनः = உம்முடைய உபாசனம் உண்டாவதற்கு பிரதிபந்தகமாயிருக்கிற செய்யக் கூடாததைச் செய்தல், செய்யவேண்டியதை

---

ரு:—செய்கிறார்கள். அது பொருந்தாது. மோக்ஷம் கர்மசாத்தியமாகாதபடியால் அப்படி அர்த்தம் செய்வது நிஷ்பிரயோசனம். ஆகவே வயுனானி = ஞானங்களை

विद्वान् = நீர் அறிந்திருக்கிறீர்.

युयोधि ... :— அ-கை:—பிராரப்த கர்மத்துடன் கூடினவனுக்கு மோக்ஷம் எப்படியுண்டாகும் என்பதற்கு உத்தரம் சொல்லுகிறார்.

ச:—भूयिष्ठां ... विधेम :—ஆனல் இப்போது நாம் உம்மை பூஜிக்க அஸமர்த்தர்களா யிருக்கிறேம். உமக்கு நமஸ்காரம் நமஸ்காரம் என்று நமஸ்கார வசனங்களை வெகுவாய் உமக்கு ஸமர்ப்பித்து உம்மை ஆராதிக்கிறேம் என்று அர்த்தம்.

வி:—விட்டுவிடுதல், ஆகிய பாபத்தை (அல்லது) உம்முடையபிராப்தியைதடைசெய்யும் பாபத்தை, என : என்னும் ஒருமையை பன்மையில் அறியவேண்டியது. (வாஸ்தவத்தில்) நிவிர்த்திக்கும் உபாயத்தை உத்தேசித்து நிவிர்த்திக்கத் தகுந்த பாபம் அதிஸ்வல்பம் என்று கருத்து. சர்வசக்தி மானுன உமக்கு இது லக்ஷியமன்று. உம்மை குறித்து சொல்லும் நமஸ்காரம் என்னும் வார்த்தைக்குக் கூட பெரியதல்ல, என்று ஒருமையின் கருத்து.

अस्मत् = எங்களிடத்தினின்றும்

युयोधि = நீக்கும், நாசஞ்செய்யும் என்று கருத்து. (அல்லது) நீக்கும் என்றுமட்டும் நான் பிரார்த்திக்கிறேன். நீக்கியபின் உம்முடைய இஷ்டப்படி நாசம் செய்யவேண்டியதானலும் நாசம் செய்யும் அல்லது கெட்டவர்களிடம் சேர்க்கவேணுமானலும் சேர்ப்பியும்.

भूयिष्ठां = பெரியதாயிருக்கிற அதாவது வேறுகதியன்றியிருப்பதாலும்,அடிக்கடிச் சொல்லுவதாலும் பெரியதாயிருக்கிற नमउक्तिं =நம: என்னும் வார்த்தையை ते =சகல கர்மங்களையும் அடைந்தவனையும், கர்மத்தாலன்றி ஸ்வபாவமாய் எல்லாருக்கும் ஸ்வாமியாயும், நம : என்னும் வார்த்தையைத் தவிர வேறு ஒன்றையும் அபேக்ஷிக்காமலிருக்கும் உம்மை பொருட்டு

து :—अस्मान् = எங்களை

जुहुराणं = மனிதனுடைய யோக்கியதையை குறைக்கும்படியான அதாவது சம்சாரச்சுழலில் கொண்டுவரும்

एन: = பாபத்தை, அனிஷ்டகர்மத்தை

अस्मत् = எங்களிடமிருந்து

युयोधि = நீக்கும்

ते = உமக்கு

भूयिष्ठां = பக்திஞானம் இவைகளுடன்

नम (इति) उक्तिं = நமஸ்காரம் என்கிற வசனத்தை

विधेम = சமர்ப்பிக்கிறேம். உமக்குப் பிரதி உபகாரம் செய்ய நாம் அசமர்த்தர்களாக இருக்கிறேம் என்பது கருத்து.

ச:—11-வது மந்திரத்தில்[127] அவித்தையால் மிருத்தியுவை அதிக்கிறமித்து வித்தையால் அமிருதத்தை அடைகிறுன் என்று சொன்னதையும், 14-வது மந்திரத்தில் விஞசத்தால் மிருத்தியுவை அதிக்கிறமித்து சம்பூதியால் அமிருதத்தை அடைகிறுன் என்று சொன்னதையும் கேட்டு சிலர் சம்சயத்தை அடைகிறுர்கள். ஆகையால் அதை நிவர்த்திக்கும்பொருட்டு சுருக்கமாய் விசாரம் செய்கிறேன். இப்போது முதலில் ஏன் சம்சயம் உண்டாகிறது என்பதைச் சொல்லுகிறேன். வித்தை என்னும் சப்தத்தால் முக்கியமான வித்தை அதாவது பிரம்மஞானம் என்னும் அமிருத சப்தத்தால் புனராவிர்த்தியில்லாத முக்கியமான முக்தி என்றும் ஏன் கிரகிக்கக்கூடாது.

இது சம்சயத்துக்குக் காரணம்.

சித்தாந்தி:—பரமாத்மவித்தையும் கர்மமும் பரஸ்பரம் விருத்தமாயிருப்பதால் அவைகளின் சமுச்சயம் சம்பவிக்கமாட்டாது.

---

வி:—विदेम = செய்கிறேம், அல்லது நம: என்னும் வார்த்தை என்னிடத்தில் நீடித்திருக்கும்படிச் செய்யும் என்று நான் பிரார்த்திக்கிறேன், பாரதம் மோக்ஷ தர்மத்தில் नमइत्येववादिन: (நமஸ்காரம் என்றே சொல்லுகிறவன்) என்று முக்தர்களின் இலக்ஷணம் சொல்லப்பட்டிருக்கிறது.

उक्ति :- மனதாலும், சரீரத்தாலும் நமஸ்காரம் செய்யாவிட்டாலும் நம: என்னும் வார்த்தையை வாயினுல் சொல்லுவதால் மட்டும் நீர் பிரசன்னராக வேண்டும் என்று उक्ति பதத்தின் கருத்து.

हे अग्ने देवविश्वानि वयुनानि – त्वं जुहुराणं – एन: – अस्मत् – युयोधि – सुपथा – अस्मान् राये – नय वयं – ते – भूयिष्ठां – नमउक्तिं –विदेम ।

என்பது அன்வயம்: நித்தியம் அஞ்சலி பந்தம் செய்துகொண்டும், சந்தோஷத்தை அடைந்தும் நம: என்னும் வார்த்தையை உச்சரிக்கிறேம். நம: என்கிற வார்த்தையையே சொல்லுகிறேம் என்று கருத்து. ॥ 18 ॥

---

து :—இந்த மந்திரார்த்திற்குப் பிரமாண வாக்கியம்:—

यदस्मान्कुरुतेह्मल्पां स्तदेनोऽस्मद्वियोजय ॥
नयनोमोक्षवित्ताये त्वस्तौयज्ञमनुस्स्वराट् ॥
(इति स्कांदे)

---

127. மந்திரத்துக்கு வியாக்கியானம் செய்துவிட்டு இப்பொழுது கொஞ்சம் விசாரம் ஆரம்பிக்கிறுர்.

ச:—பூர்வபக்ஷி:—சரிதான்; ஆனால் விரோதமிருக்கிறதாகக் காணப்படவில்லை. விரோதத்தையும் அவிரோதத்தையும் அறியவேண்டியது சாஸ்திரப்பிரமாணத்தால்தான், எப்படி அவித்தியானுஷ்டானமும் (கர்மானுஷ்டானமும்) வித்தியோபாசனையும் சாஸ்திரத்தால் பிரமாணங்களோ அப்படியே அவைகளின் விரோதமும் அவிரோதமும் சாஸ்திரத்தால் அறியத்தக்கவை. "ஒரு பிராணியையும் ஹிம்சிக்கலாகாது" என்று ஒருசாஸ்திரத்திற் சொல்லியதானது "யாகத்தில் பசுவைக்கொல்லலாம்" என்கிற சாஸ்திரத்தால்தான் பாதிக்கப்படுகிறது. இப்படியே வித்தை அவித்தைகளுக்கும் இருக்கலாம் (அதாவது) விரோதம் இருக்கிறது என்னும் சாஸ்திரத்தை விரோதமில்லை என்னும் சாஸ்திரத்தால் பாதிக்கலாம்.)

சி:—வித்தை 128 அவித்தைகளின் சமுச்சயம் கூடாது. ஏனெனின் दूरमेते विपरीते विषूची अविद्यायाच विद्या (பிரம்மவித்தை கர்மம் இவைகளின் பலன்கள் வெவ்வேறானபடியால் இவைகள் பரஸ்பரம் விருத்தம்) என்று கடவல்லி சுருதி (2-4) சொல்லுகிறது.

பூ:—विद्यांच अविद्याञ्च यस्तद्वेदोभयं सह (வித்தையையும் அவித்தையையும் இரண்டையும் சேர்த்து எவன் அறிகிறானோ) என்று ஈசாவாசிய (11) சுருதி இருப்பதால், விருத்தமில்லை என்பது நிச்சயம்.

சி:—அதுபொருந்தாது. ஏனெனின் இவைகளின் காரணம்[129], ஸ்வரூபம்[130], பலன்[131], இவைகள் பரஸ்பரம் விருத்தங்களாயிருக்கின்றன.

---

128. சாஸ்திரீயமான ஞானகர்மங்களின் விரோதமும் அவிரோதமும் சாஸ்திரத்தால் ஸித்தியாகவேண்டுமே தவிர தர்க்கத்தால் நிச்சயம் செய்யக்கூடாது என்று பூர்வபக்ஷி சொன்னதைக்கேட்டு ஞானகர்மங்களின் விரோதம் சாஸ்திரத்தாலேயே ஸித்திக்கிறது என்கிறான்.

129. வித்தியைக்குக்காரணம் ஸாதன சதுஷ்டயங்கள் - சிரவண மனன நிதத்தியாஸனங்கள் - கர்மத்துக்குக்காரணம் உபநயனம், விவாஹம் முதலியவை.

130. வித்தையின் ஸ்வரூபம் - அபேதஞானம், கர்மத்தின் ஸ்வரூபம் பேத ஞானம், யாகம் செய்கிறவன், யாகம், யாகபலன் முதலிய வித்தியாஸங்களால் பேதஞானம்.

131 வித்தியையின்பலன்-சாசுவதமான மோக்ஷம், கர்மத்தின்பலன் நாசமுடைய ஸ்வர்க்கத்தின்போகம் முதலியவை, இக்காரணங்களால் வித்தியையும் கர்மமும் விருத்தங்கள்.

ச:—பூ:—दूरमेते என்னும் வசனம் வித்தைக்கும் அவித்தைக்கும் விரோதமிருக்கிறதாக காண்பிவிக்கிறது. विद्यां च अविद्यां च இந்த வசனம் சமுச்சயம் செய்யவேண்டும் என்று சொல்லுகிறது. இவைகள் எப்போது விருத்தங்கள், எப்போது அவிருத்தங் கள் என்றுவிகற்பிக்கமுடியாதபடியால்,[132] சமுச்சய வசனத்தினால் விரோதம் இல்லை என்றே நினைக்கவேண்டும்.

ச:—சி:—அப்படியல்ல. இவ்விரண்டும் ஓரிடத்தில் [133] சேர்ந்திரா.

பூ:—ஒரேகாலத்தில் ஒரு இடத்தில் சேர்ந்திராவிட்டாலும் ஒருவனிடத்தில் கிரமமாக அவித்தையும் வித்தையும் இருக்கட்டுமே.

---

132. கடோபநிஷத்தில் வித்தையும் அவித்தையும் விருத்தங்கள் என்று சொல்லப்பட்டிருக்கின்றது. ஆகையால் அந்த உபநிஷத்தில் விருத் தத்தை அறியவேண்டியது. இந்த உபநிஷத்தில் "வித்தையையும் அவி த்தையையும்" என்று சொல்லியிருப்பதால் அவிரோதம் சொல்லப்பட் டிருக்கிறது. ஆகையால் அவிரோதமே அறியதக்கது. ஆகவே விரோ தமும் அவிரோதமும் விகற்பத்தால் ஏற்படுகின்றன என்று அறியத்தக்கது. இப்படிப் பூர்வபக்ஷி சொல்லுவதும் பொருந்தாது - ஏனெனின், விரோத மும் அவிரோதமும் சித்தமாயிருப்பதால் விகற்பத்துக்குக் காரணமில்லை. விகற்பம் எவ்விடத்தில் சம்பவிக்கிறது எனின், எந்தவார்த்தைகள் புருஷ னுடைய ஸ்வாதீனத்தில் இருக்கின்றனவோ அவ்விடத்தில் விகற்பம் சம் பவிக்கும். உதாஹரணம்:— (1) "சூர்யோதயமாகும்முன் ஹோமத்தைச் செய்யவேண்டும்" (2) "சூர்யோதயமானபின் ஹோமத்தைச் செய்யவே ண்டும்", இப்படி இரண்டு சுருதிவசனங்கள் இருக்கின்றன. இவைகளின் விகற்பம் சம்பாவிதம். ஏனெனின், சூர்யோதயமாகும் முன்னும் அதற்கு பின்னும் ஹோமத்தைச் செய்யவேண்டியது என்கிற வசனம் புருஷனு டைய ஸ்வாதீனத்தில் இருக்கிறது. வித்தை அவித்தை இவைகளின் வச னம் அப்படியில்லை.

133. ஏனெனின், கிளிஞ்சல் வெள்ளிபோல் பிரகாசிக்கிறது என்கிற வாஸ்தவஞானமும் வெள்ளி என்கிற மித்தியாஞானமும் சேர்ந்திருக்கமா ட்டாதாகையால் பிர்ம்மவித்தை அவித்தை இவைகளின் சமுச்சயம் சம்பவிக் கமாட்டாது. இவைகளின் சமுச்சயம் கிரகிக்கப்படும் பக்ஷத்தில் சமுச் சயபலத்தால் ஞானகர்மங்களுக்கு விரோதமில்லை என்றும், விரோதமில் லாதபடியால் சமுச்சயம் சித்திக்கிறதென்றும் சொல்லும்படி நேரிடும். இது அன்னியோன்னிய ஆசிரயதோஷத்தில் முடியும். ஆகையால் சமுச் சயம் ஒப்புக் கொள்ளக் தக்கதன்று.

o

ச:—சி:—வித்தையின் உத்பத்தியால் அவித்தை அஸ்தமனமடைய வேண்டியதுதான். ஆகையால் வித்தைக்கு எவன் ஆசிரயமோ அவனிடத்தில் அவித்தை ஒருகாலும் உண்டாகமாட்டாது. அக்கினி உஷ்ணம் என்றும் பிரகாச ஸ்வரூபம் என்றும் ஞானமுண்டானபோது, எந்த ஆசிரயத்தில் (எவனுக்கு) இந்த ஞானம் உண்டாயிருக்கிறதோ, அந்த ஆசிரயத்துக்கு (அவனுக்கு) அக்கினி சீதமென்றும் பிரகாசமற்றதென்றும் இப்படிப்பட்ட அவித்தை (அஞ்ஞானம்) உண்டாகமாட்டாது. ஞானமிருக்குமிடத்தில் 134 சம்சயமும் அஞ்ஞானமும் இருக்கமாட்டா. ஏனெனின் இந்த உபநிஷத்தின் 7-வது மந்திரம் ஞானிக்கு சோக மோஹங்களில்லை என்று சொல்லுகிறது. அவித்தையில்லாதவிடத்தில் அது எதற்கு உபாதானகாரணமோ அந்த கர்மமும் 135 உண்டாக மாட்டாதென்று நாம் சொல்லியிருக்கிறோம்.

---

134. வித்தையும் அவித்தையும் ஒரே இடத்தில் ஒரேகாலத்தில் இருக்கமுடியா விட்டாலும் ஒரே இடத்தில் வெவ்வேறு காலங்களில் இருக்கிறதாக வைத்துக் கொள்ளுவோமே என்று ஒருவன் சொன்னால் அதற்கு சித்தாந்தியின் உத்தரம் என்னவெனின் முதலில் அவித்தையையும் பிறகு வித்தையையும் இந்தக்கிரமமாக இருந்தால் எங்களுக்கும் சம்மதம்தான் -ஆனால் முதலில் வித்தை, பிறகு அவித்தை என்றால் அது எங்களுக்குச் சம்மதமல்ல. ஏனெனின் எப்போது வித்தை அதாவது பிர்ம்மஞானம் உண்டாயிற்றோ அப்போது அவித்தை நாசமாய்விட்டது. மறுபடியும் அது உண்டாவதற்குக் காரணமில்லை.

135. வித்தை உண்டான இடத்தில் அவித்தை உண்டாகா விட்டாலும் வித்துவான்கூட அவித்தியாகாரியமான அத்தியயனம், பிக்ஷாடனம் முதலிய கர்மங்களைச்செய்கிறான். ஆகையால் ஞானிக்கும் கர்மம் இருக்கட்டுமே :—இதற்கு உத்தரம் :—அவித்தை நாசமானவிடத்தில் அதின்காரியமும் நாசமாய்விடும். ஏனெனின் "செய்யவேண்டியது என்னும் வசனத்தை அனுசரித்துசெய்யப்படுங் கர்மம் தான் கர்மம் எனப்படும்."வித்தையும், அவித்தையும்'என்கிற இடத்தில்ஸமுச்சயமாகும்படியான கர்மம்தான் குறிப்பிடப்படுகிறது. பிர்ம்மாத்மைக்கியத்தின் அனுபவம் எவனுக்கு ஸாக்ஷாத்தாயுண்டாயிருக்கிறதோ அவன் இன்ன கர்மத்தைத் தான் செய்ய வேண்டும் என்றவிதியில்லை. ஏனெனில்யாதொரு ஆசையுமில்லை. ஆசையுள்ள ஸகாமபுருஷனுக்குத்தான் விதிஏற்பட்டிருக்கிறது. ஆசையால் தான் கர்மம் ஏற்படுகிறதென்றும் ஆசையில்லாதவிடத்தில் கர்மமில்லை என்றும் சுருதிவசனமிருக்கிறது. வித்வான்கள் செய்யும் பிக்ஷாட்னாதி கர்மங்களும்அவர்களுடைய சரீ

ச:—अमृतमश्नुते என்கிற இடத்தில் அமிருதம் 136 ஆபேக்ஷிகம்.. विद्या சப்தத்தால் பரமாத்ம வித்தையைகிரகித்தால் हिरण्मयेन मार्गेण என்கிற மந்திரத்தில் எந்த மார்க்கம் யாசிக்கப்படுகிறதோ, அது யாசிக்கப்பட்டிருக்கக்கூடாது. ஆகையால் கர்மத்துக்கும் உபாசனைக்கும்தான் சமுச்சயமே தவிர கர்மத்துக்கும் பரமாத்ம வித்தைக்கும் அது பொருந்தாது என்று நாம் வியாக்கியானம் செய்ததே மந்திரார்த்தம். இவ்வளவு எழுதி கிரந்தத்தை முடிக்கிறோம்.

இவ்விதமாக கோவிந்த பகவத் பூஜ்ஜியபாதருடைய சிஷ்யரான பரமஹம்ஸ பரிவ்ராஜகாசாரியரான ஸ்ரீ சங்கராசாரியாரவர்களால் ஏற்படுத்தப்பட்ட வாஜஸனேய சம்ஹிதோபநிஷத்தின் பாஷ்யம் முற்றிற்று. ॥ 18 ॥

॥ ओं तत्सत् ॥

---

ரத்தின்ஸ்திதியின் பொருட்டுஇருக்கின்றன. அவைகள் கர்மங்களல்ல. ஏனெனில் அவைகள் செய்ய வேண்டும் என்கிறவிதியை அனுசரித்துச் செய்யப்பட்டவையல்ல. எது வரையில் பிராணன் சரீரத்துடன் ஸம்பந்தப்பட்டிருக்கிறதோ அதுவரையில் பிக்ஷாடனுதிகள் அவசியம் இருக்கின்றன. ஆனல் ஞானிகள் தாங்கள் அவைகளைச் செய்வதாக நினைக்கிறதில்லை. ஏனெனில் கர்மத்துக்கு உபாதான காரணமான அவித்தியை அவர்களிடத்தில் இல்லை. கீதை 5-8-ல் சொல்லியபடி "நான் ஒன்றும் செய்கிறதில்லை" என்று அவர்கள் பாவிக்கிறார்கள்.

136. அதாவது நாம் அபேக்ஷித்தும் மற்றவைகளை உத்தேசித்தும் இது சீக்கிரம் நசுவரமாயிராமல் நீடித்திருக்கிறதே தவிர, எப்போதும் இருக்கும்படியானதாக இல்லை. அமிருதசப்தத்துக்கு மோக்ஷம் என்று அர்த்தம் செய்தால் "ஹிரண்மயேன பாத்திரேண" என்கிற மந்திரத்தில் மார்க்கத்தை யாசித்தல் அனுவசியமாகும். ஏனெனில் மோக்ஷமடைந்தவன் ஒன்றையும் யாசிக்க வேண்டியதில்லை. (பிரஹ 4-4-6ல்) இவனுடைய பிராணன் வெளியே போகிறதில்லை என்றும் இவன் இவ்விடத்திலேயே பிரமத்தை அடைகிறன் என்றும் சொல்லியிருக்கிறது ஆகையால் அமிருதசப்தத்துக்கு பரம மோக்ஷம் என்று அர்த்தம் செய்யக்கூடாது.

o

# மந்திரங்களின் வரிசையை அனுசரித்த பொருளட்டவணை.

| மந்திர ரெ. | அத்வைதம். | விசிஷ்டாத்வைதம். | த்வைதம். | பக்கம். |
|---|---|---|---|---|
| | ஞானிபரம். | ஞானகர்மயோகங்கள். | தத்வோபதேசம். | |
| 1 | ஞானநிஷ்டை | ஈசுவர ஸ்வரூபம் ; வைராக்கியம் | அதிகாரி-வைராக்கியம் | 19 |
| 2 | கர்மநிஷ்டை | கர்மயோக உபதேசம் | ,, கர்மானுஷ்டானம் | 31 |
| 3 | ஆத்மஹத்தியின் மகத்தோஷம் | அஞ்ஞானியின் ஸ்திதி | அனதிகாரியான அஞ்ஞானியின் கதி | 39 |
| 4 | ஆத்மஸ்வரூப நிரூபணம் | பிரம்மத்தின் சக்தி விசேஷங்கள் | பரமாத்மதத்வம் | 43 |
| 5 | ஷை | ஷை | ஷை | 51 |
| 6 | ஆத்மஞானத்தின் பலன் | அவைகளை தியானிக்கும் பலன் | தத்வஞான பலன் | 54 |
| 7 | ஷை | ஷை | ஷை | 57 |
| 8 | ஆத்மஸ்வரூப நிரூபணம் | தத்வஞானி-ஈசுவரன் - தியான யோகம் - முதலியவைகளின் ஸ்வரூபம் | ஷை பலனுக்குக் காரணம் விஷ்ணு ஸ்வரூபஞானம் | 62 |
| | அஞ்ஞானிபரம். | பக்தியோகம். | மோக்ஷசாதனங்கள். | |
| 9 | கேவல கர்மத்தினுடையதும் கேவல உபாசனத்தினுடையதும் அனுஷ்டானம் அனர்த்த காரணம் | வித்தை, கர்மம், இவைகளின் தனித்தனி அனுஷ்டானபலன் | அந்நியதா ஞானத்தை நிந்திக்காததின் பலன் | 71 |
| 10 | இவைகளின் வெவ்வேறுபலன்கள் | இவைகள் தனிமையில் மோக்ஷ தனமன்று | தத்வஞான, அந்நியதா ஞான நிந்தனை, இவைகளின் சமுச்சயபலன் | 80 |
| 11 | இவைகளின் சமுச்சயானுஷ்டானபலன் | கர்மத்துடன் சேர்ந்த உபாசனையே மோக்ஷசாதனம் | ஷை | 83 |

| மந்திரம். | | அத்வைதம். | | விசிஷ்டாத்வைதம். | | த்வைதம். | பக்கம். |
|---|---|---|---|---|---|---|---|
| 12 | அஞ்ஞானிபரம். | சம்பூதி அசம்பூதி இவைகளை தனித்தனியே உபாசிக்கும் பலன் | பக்தியோகம். | சம்பூதி அசம்பூதி இவைகளை தனித்தனியே உபாசிக்கும்பலன் | மோக்ஷசாதனங்கள். | சம்பூதி அசம்பூதிகளின் பிரத்தியேக உபாசனபலன் | 86 |
| 13 | | இவைகளின் பலன் வெவ்வேறு | | இவைகள் தனித்தனியே மோக்ஷசாதனமன்று | | இவைகளின் சமுச்சய பலன் | 89 |
| 14 | | இவைகளின் சமுச்சயமே இஷ்டம் | | நிஷித்தகர்ம நிவர்த்தியுடன் சேர்ந்த உபாசனையே மோக்ஷசாதமன | | ஷை | 92 |
| 15 | | மரண சமயத்தில் சூரியனுடைய பிரார்த்தனை | | நிஷித்த நிவிர்த்தியன் பொருட்டு பரமாத்ம பிரார்த்தனை | பகவத்பிரார்த்தனை. | பகவத் சாக்ஷாத்காரத்தை அடைய பிரார்த்தனை | 97 |
| 16 | | ஷை | | ஷை | | ஷை | 102 |
| 17 | | இரண்டு சரீரங்களின் பரிணமம் | பிரபத்தி. | சரணாகதி மந்த்ரோபதேசம் த்வயத்தின் முதல் கண்டார்த்தம் | | ஷை | 114 |
| 18 | | அக்கினியின் பிரார்த்தனை | | ஷை இரண்டாவது கண்டார்த்தம் | | சாக்ஷாத் காரமடைந்த பிறகு மோக்ஷமடைய பிரார்த்தனை | 121 |

## ஈசாவாஸ்ய உபநிஷத்திலுள்ள வாக்கியங்களுக்கும் சில முக்கிய பதங்களுக்கும் அகாராதி அட்டவணை.

# அகாராதி விஷய அட்டவணை.